# திருக்கோயில்

"என் கடன் பணி செய்து கிடப்பதே"





மேலக்கடம்பூர் நடராஜர்

மாலை 3] சார்வரி மார்கழி [மணி 4
ஜனவரி, 1961

ரதி.

சென்னை அரசாங்க அறநிலையப்
பாதுகாப்புத் துறை வெளியீடு

# சிறப்பு மலர்

பொருளடக்கம்





திருச்சிராப்பள்ளி — பாறையடி காமாட்சியம்மன் கோயில் புதிதாகக்கட்டி
23-11-1960 கும்பாபிஷேகம் நடைபெற்றது.

---


## திருக்கோயில்

ஆண்டுக் கையொப்பம் : ரூபாய் பத்து

அறநிலையப் பாதுகாப்பு ஆட்சி அலுவலகம்,
நுங்கம்பாக்கம் ஹைரோடு,
சென்னை-6




மாலை 3] சார்வரி மார்கழி - ஜனவரி 1961 [மணி 4

# ஆலய நிர்வாகம்

திருக்கோயில்களில் இறைபணியாளர்களும், அறங்காவலர்களும், இதர பணியாளர்களும் உட்துறை சம்பந்தமான பல்வேறு பணிகளில் எவ்வாறு கவனம் செலுத்தவேண்டும் என்பதைப்பற்றிய அறிக்கை 1960, அக்டோபர் திங்கள் 'திருக்கோயில்' இதழில் வெளிவந்துள்ளது.

அத்துடன் கீழ்க்கண்ட விஷயங்களையும் சேர்த்துக்கொள்ளவேண்டும்:—

மூலஸ்தானத்திலோ அல்லது மற்ற இடங்களிலோ தேங்காய்களை உடைக்கும்போது தண்ணீர் கீழே சிந்தாமல் ஒரு பாத்திரத்தில் சேர்த்துவைத்து அப்புறப்படுத்தவேண்டும். தேங்காய் குடுமி, நார் முதலியவற்றை ஒரு சிறு கூடையிலோ பாத்திரத்திலோ போட்டுவைத்து அப்புறப்படுத்தவேண்டும். வில்வம், புஷ்பம் முதலிய நிர்மாலியங்களையும் அப்போதைக்கப்போது எடுத்து ஒரு கூடையில் வைத்து அப்புறப்படுத்த வேண்டும். அவைகளைக் காலால் மிதிக்கக்கூடாது.

நமது சமயத்தினரல்லாத பிற மதத்தினர் எதுவரையில் வரலாம் என்பதைத் தெரிவிக்கும் விளம்பரங்கள் கண்ணில் படும்படியாக அமைக்கப்பெறவேண்டும். அன்னியர்கள் வரும்போது அவர்களிடத்தில் மிகவும் மரியாதையாகவும் கண்ணியமாகவும் நடந்துகொள்ள வேண்டும். கூடுமான வரையில் அறங்காவலர் அல்லது இறைபணியாளர் அல்லது கோயில் பணியாளர்கள் இவர்களில் யாராவதொருவர் ஆங்கிலந் தெரிந்தவர் அவர்கள் உடனிருந்து காட்டக்கூடிய பகுதிகளைக் காட்டியனுப்பவேண்டும்.

சேவாகாலங்களைப் பற்றிய விவரம் கோயில் உள்வாசற்படியருகில் பலகைகளில் எழுதிவைக்கப்பட வேண்டும். அர்ச்சனை, ஆராதனை, அபிஷேகம் முதலிய வழிபாட்டுக்குரிய கட்டணங்களையும் அதில் குறித்து வைக்கவேண்டும். ஆண்டு முழுதும் நடைபெறும் திருவிழாக்களின் விவரமும் எழுதி வைக்கவேண்டும். ஒவ்வொரு சந்நிதியிலும் அந்தந்த மூர்த்திக்கு இனும் தஸ்தாவேஜுகளில் காணப்பெறும் பெயர்களை எழுதிவைக்கவேண்டும். அத்துடன் தேவார முதலிய திருமுறைகளில் உள்ள பெயர்களையும் வழங்கும் தமிழ்ப்பெயர்களையும் எழுதிவைக்க வேண்டும். கட்டளைகள், உபயங்கள் இவைகளைக் குறித்து விளம்பரம் பலகைகளில் எழுதித் தொங்கவிடவேண்டும். உபயதார் இல்லாத உற்சவங்கள் இருப்பது தெரிந்தால் அந்த உபயங்களுக்கு புதியவர்கள் முன்வர ஏதுவாகும். உணவு விநியோகத்திற்குக் கட்டளைகள் இருந்தால் அவைகளைப் பள்ளிப் பிள்ளைகளுக்கு மதிய உணவுக்காக கோயிலில் நைவேத்தியமாக உபயோகித்துப் பிரசாதமாகக் கொடுக்கலாம். வசதியுள்ள கோயில்களில்

நைவேத்தியத்தை அதிகப்படுத்தியும் குழந்தைகளுக்குப் பிரசாதமாக மதிய உணவு இலவசமாகக் கொடுக்கலாம்.

கோயில் குளங்களில் துணிகள் துவைப்பது, ஆடுமாடுகளைக் குளிப்பாட்டுவது முதலியவை நடக்காமல் தடுக்கப்பட வேண்டும். கூடுமானால் குளங்களைக் கவனிக்கக் காவல் ஏற்பாடு செய்வது நல்லது. உற்சவ மூர்த்திகள் திருவிழாக் காலங்களில் வெளியே வரும்போது சப்பரங்களிலும் இரதம் முதலிய வாகனங்களிலும் மின்சார விளக்குகள் உபயோகிக்காமல் இருப்பது நல்லது. காஸ் லைட்களை மூர்த்திகளின் திருமேனிகள் நன்றாகக் காட்டும் வகையில் ஆட்கள் தூக்கிச்செல்லும்படி ஏற்பாடு செய்யலாம். தீவட்டிகளையும் வேண்டுமளவு உபயோகித்துக் கொள்ளலாம். சுவாமி அம்பாள் தேர்களிலே வலம்வரும்போது கற்பூர ஆராதனை வெளியே யிருந்தே செய்வது நல்லது. தேருக்குள் தீவட்டிகள் எக்காரணம் கொண்டும் உபயோகப்படுத்தக்கூடாது. தேருக்குள் கர்ப்பூர ஆராதனை செய்ய வேண்டுமென்றால் தேர் புறப்படும்போதும், தேர் நிலைக்குவந்த பின்னரும் செய்யலாம். அல்லது கர்ப்பூர ஆரத்தியின்மேல் பல தொளைகள் உள்ள மூடியைக் கவிழ்த்து ஆராதனை செய்யலாம்.

## வரவு செலவு கட்டுப்பாடு

ஒவ்வொரு திருக்கோயிலிலும் ஆலயத்துக்கு வரவேண்டிய வருவாயைப் பெருக்குவதிலும் செலவினங்களைக் கட்டுப்படுத்துவதிலும், தாவர சங்கம சொத்துக்களைப் பாதுகாப்பதிலும் கவனம் செலுத்த வேண்டியது அத்தியாவசியம்.

அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லா கியாங்கு

என்பது தனிப்பட்ட மக்களுக்கும் குடும்பங்களுக்கும் மாத்திரமன்றி தேசங்களுக்கும் பொருளாதார நிலையங்களுக்கும் அறநிலையங்களுக்கும் பொருந்தும். திருக்கோயில்களில் வருவாயை அதிகரித்தால் தான் வசதிகள் செய்துகொள்வதற்கும் திருப்பணிகள் செய்வதற்கும் இயலும். வருவாயை அதிகரிக்க வேண்டுமானால் வழிபடும் மக்களுக்கு வசதிகளை அதிகரிக்க வேண்டும். ஆகவே வசதிகளை அபிவிருத்திசெய்யப் பொருள் வேண்டும். அதற்கு வழி வருமானத்தைப் பெருக்குவதும், செலவினங்களைக் கூடுமானவரைக் கட்டுப்படுத்துவதும்தான் பெரும்பாலான கோயில்களில் செய்யக்கூடியவை. கோயில்களில் திருமணங்கள் செய்ய வசதிகள் செய்து கொடுத்து மக்களுக்குப் பொருளாதாரத் துறையில் உதவி செய்வதோடுகூட திருக்கோயில்களின் வருமானத்தையும் பெருக்கிக் கொள்ளலாம் என்பது குறித்து அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் வெளியிட்ட அறிக்கை செப்டம்பர், 1960 'திருக்கோயில்' இதழில் பிரசுரமாகியிருக்கிறது. பல கோயில்களில் அர்ச்சகர்களுடைய ஊதியம் மிகக்குறைவாகவே இருக்கக் காண்கிறோம். முன்பெல்லாம் அர்ச்சகர்களுக்கு மானியங்கள் விடப்பட்டிருந்தன. அவைகளை நாளடைவில் பராதீனம் செய்துவிட்ட காரணத்தாலும், அவர்களில் பலர் பரம்பரை ஊழியத்தைவிட்டு வேறு துறைகளில் செல்ல வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டதாலும் பல்வேறு இதர காரணங்களினாலும் அவர்களுடைய மானியங்கள் மீண்டும் கைப்பற்றிக்கொள்ள முடியாத வகையில் பிறரிடம் சேர்ந்துவிட்டன. அவர்களுக்குக் கிடைக்கும் சொற்ப ஊதியத்தைக் கொண்டு அவர்களால் நல்லமுறையில் பணிசெய்ய முடியாத நிலை அநேக கிராமக் கோயில்களில் ஏற்பட்டிருக்கிறது. அவர்களுடைய வருமானத்தையும் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்த அறங்காவலர்களும், கிராமப் பெருமக்களும் குழுக்கள் அமைத்துக்கொண்டு கல்விச்சீரமைப்புத் திட்டங்கள் வகுக்கப்பட்டு பல கிராமங்களில் பணிசெய்து வருவதைப்போல கோயில் சீரமைப்புக் குழுவினரும் திட்டங்கள் வகுத்து அமுலுக்குக் கொண்டுவருவது நலம் என்று அரசாங்க ஆலோசனைக் குழுவினர் கருதுகின்றனர். இது குறித்து எல்லா மாவட்டங்களிலும் கூடுமானவரை திட்டங்கள் அமுலுக்குக் கொண்டுவரப் படவேண்டும் என்று ஏற்பாடாகி யிருக்கிறது. சில கோயில்களில் அர்ச்சனைகள் மூலம் கோயிலுக்கும் அர்ச்சகர்களுக்கும் வருமானம் வந்துகொண்டிருக்கிறது. முக்கியமான சில கோயில்களில் அர்ச்சனைச் சீட்டுக்கள் அமுலில் இல்லாமல் இருப்ப

தால் வழிபடும் மக்களுக்குச் சில சமயங்களில் தொந்திரவுகள் ஏற்படுகின்றன. இதைத் தவிர்க்க அறங்காவலர்கள் அர்ச்சனை, ஆராதனை, அபிஷேகங்கள் முதலிய வழிபாடுகளுக்குக் கட்டணங்கள் நிர்ணயித்து முன்பு அர்ச்சகர்கள் பெற்றுவந்த தொகைகளுக்குக் குறையாமல் கொடுத்து மிகுதியைக் கோயிலுக்கு வருமானமாக எடுத்துக்கொள்ளலாம் என்று சட்டத்தில் விதியிருக்கிறது. உயர்நீதி மன்றத்தில் இது சம்பந்தமான வழக்குகளில் இவ்வாறு செய்வது நியாயம் என்று தீர்ப்புக்கள் அளிக்கப்பெற்றுள்ளன. ஆனால் கட்டணங்கள் விதிப்பதற்கு முன்னால் ஏற்பட்டுள்ள கட்டளை அர்ச்சனைகளை அதிகப்படுத்துவது நியாயம் அல்ல என்று தீர்ப்பாகியுள்ளது.

கோயில் சொத்துக்களைத் தாவர சொத்துக்கள் என்றும், சங்கம சொத்துக்கள் என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். சங்கம சொத்துக்கள் நகைகள், பூசை பாத்திரங்கள், சேமிப்புப் பத்திரங்கள், சொத்துக்கள் சம்பந்தமான தஸ்தாவேஜுகள், இதர விலைமதிப்புள்ள பொருள்கள், வாகனங்கள், உண்டியல் வருமானம், இதர பொருட்கள், பறவைகள், மிருகங்கள் முதலிய காணிக்கைகள், தங்கக்கலசங்கள், தங்க விமானங்கள், பூசையில் உள்ளதும் பூசையில் இல்லாததுமான உற்சவ உருவங்கள் முதலியவையாகும். நகைகளைப் பரிசோதித்து அவற்றின் விலைகளை மதிப்பிட்டு தனிப் பதிவேடுகளில் எழுதப்பட்டுள்ளன. இவைகளைச் சரிபார்ப்பதற்கு ஒரு அதிகாரியும், பொன் வெள்ளி நவரத்தினங்கள் சோதிப்பதில் ஒரு வல்லுநரும் அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்டுள்ளனர். ஆனால் இந்த நகைகளை நன்கு பாதுகாத்துவரவேண்டிய பொறுப்பு ஆலய நிர்வாகிகளையும் அர்ச்சகர்களையும் சார்ந்தது. ஒரு கோயிலில் சுமார் 35 ஆண்டுகளுக்கு முன்பு உபயமாக கொடுக்கப்பட்ட ஆயிர ரூபாய்க்குமேல் மதிப்புள்ள ஒரு தங்க ஒட்டியாணம் சுமார் 1 ஆ ரூபாய் மதிப்புள்ள போலி ஒட்டியாணமாகக் காணப்படுகிறது. ஆலய நிர்வாகிகள் நகைகளை நன்கு கண்காணிக்காமலிருந்ததே இதற்குக்காரணம். இன்னொரு கோயிலில் சுமார் ரூபாய் ஆயிரம் பெறுமான கல்பதக்கத்தை சாதாரண கல் பதக்கமென்று கருதி பத்து ரூபாயாக கணக்கில் மதிப்பிட்டிருந்தது. இப்போது நகை தணிக்கை அதிகாரியும் வல்லுநரும் மூவாயிரம் ரூபாய்க்குமேல் மதிப்புள்ள நகைகள் இருக்கும் கோயில்களில் தணிக்கை செய்து இருக்கிறார்கள். மற்ற கோயில்களிலும் அறங்காவலர்கள் விரும்பினால் நகைகளைத் தணிக்கை செய்து மதிப்பிட்டு வைத்துக்கொள்ளுவது நலம். மூர்த்திகளுக்கு அலங்காரம் செய்யப்பட்டிருக்கும்போது நவரத்ன கற்கள் பதித்த நகைகளின்மேல் கற்பூர வெப்பமும் புகையும் படாமல் பார்த்துக்கொள்வது அவசியம். இல்லாவிடில் அரக்கு மெழுகு நெகிழ்ந்து கற்கள் இடம்பெயர்ந்து விழவும், நொறுங்கவும் ஏதுவாகும். அன்றாட உபயோகத்திற்கு அர்ச்சகரிடம் ஒப்புவிக்கப்பெறும் நகைகள் பாதுகாப்பில் வைக்கப்பெற்று அடிக்கடி சரிபார்த்துக்கொள்ள வேண்டியது அவசியம்.

தங்கம், வெள்ளி பொறித்த வாகனங்களையும் அடிக்கடி கவனித்துப் பழுது பார்த்துவரவேண்டும். ஒரு கோயிலில் வாகனக் கிடங்கில் இருந்த வெள்ளி வாகனங்களிலுள்ள வெள்ளித் தகடுகள் கொஞ்சம் கொஞ்சமாக எடுக்கப்பட்டு தணிக்கையின்போது பெருவாரியான வெள்ளி குறைந்திருந்தது. ஆலய நிர்வாகிகள் அவ்வப்போது கவனித்து இருந்தால் இதை உடனேயே கண்டுபிடித்திருக்கலாம். ஒவ்வொரு ஆண்டும் சிறு குறைகளைப் பழுது பார்த்துவந்தால் வாகனங்கள் நன்றாயிருப்பதோடு அவற்றைப் புதுப்பிக்கவேண்டிய செலவும் குறையும். தேர்த்திருவிழா முடிந்தவுடன் வெயில், மழை முதலிய காரணங்களால் தேர் கெட்டுவிடாமலும் தேரிலுள்ள உருவங்களை யாரும் கெடுத்துவிடாமலும் துத்தநாகத் தகடுகளால் மூடி வைக்கவேண்டியது அவசியம். ஆண்டுக்கொருமுறை திருவிழாவுக்கு முன்பு தேரைச் சுத்தம் செய்ய மர எண்ணெயை உபயோகிக்க வேண்டும்.

இதர விலையுயர்ந்த சாமான்களையும் சேமிப்புப் பத்திரங்கள், தஸ்தாவேஜுகள்,

முதலியவற்றையும் ஒவ்வொரு மாதமும் அறங்காவலர் குழு கூடும்போது தணிக்கை செய்து சரிபார்த்துக் கொள்ளவேண்டும். சில கோயில்களில் சரியான கவனிப்பில்லாமல் சில பத்திரங்கள் காலாவதியானதுடன் வட்டி நஷ்டமும் ஏற்பட்டு கோயில்களின் வருமானமும் பெருவாரியாகப் பாதிக்கப்பட்டது.

அநேக கோயில்களில் உண்டியல், காணிக்கை வருமானம் அதிகமாக வருவதுண்டு. பொதுவாகப் பிரார்த்தனைத் தலங்களில் இந்த வருமானம் முக்கியமானதாக இருக்கும். அதிக உண்டியல் வருமானமுள்ள கோயில்களில் மாதம் ஒரு முறையோ இருமுறையோ உண்டியல்களை உடைத்து எண்ணுவது அவசியம். அவ்வாறு எண்ணும்போதும் அறநிலையத் துறை அதிகாரிகளுக்குத் தெரிவிப்பதுடன் பொதுமக்களுக்கும் அறிவிப்பது நலம். காணிக்கைகள் பொதுவாக தானியங்கள், உப்பு, மிளகு, பறவைகள், மிருகங்கள், முதலிய பல்வேறு வகைகளில் செலுத்தப்படுகின்றன. சில கோயில்களில் இவை ஏராளமாக வருவதால் இவைகள் எல்லாவற்றையும் வைத்திருந்து ஏலம்போடுவது எளிதல்ல. கூடுமானால் உடனுக்குடனேயோ, ஒவ்வொருநாள் இறுதியிலுமோ அல்லது உற்சவம் முடிந்தவுடனேயோ சூழ்நிலைக்குத் தக்கவாறு ஏலம்போட்டால் அவைகளைப் பாதுகாக்கும் செலவும் அவைகளின் கணக்குகளில் நேரக்கூடும் தவறுகளும் குறையும். காணிக்கைப் பொருள்களில் தங்கம் வெள்ளி முதலிய விலையுயர்ந்த உலோகங்களால் செய்யப்பட்ட பொருள்கள் உபயோகத்திற்குத் தகுதியில்லாமல் இருந்தால் அவைகளை உருக்கிக் கட்டிகளாக வைத்துக்கொண்டு கோயில் தேவைக்கு வேண்டியபோது பயன்படுத்திக் கொள்ளலாம். தேவைக்கு மேற்பட்ட கட்டிகளை விற்றுப் பணமாக்கிக்கொள்ளலாம். சில கோயில்களில் முடி காணிக்கை அதிகமாக வருவதுண்டு. அம்மாதிரியிடங்களில் சுகாதார விதிகளை அனுசரித்து நல்ல வசதிகள் செய்து கொடுத்து முடிகாணிக்கைச் சீட்டுக்களையும் நல்ல முறையில் கட்டுப்படுத்தினால் வருவாயை அதிகரிக்கலாம். களையப்பட்ட முடிகளை ஏலம் எடுப்போர்களைக்கொண்டு உடனுக்குடன் அப்புறப்படுத்திச் சுத்தப்படுத்தவேண்டும். காவடிகள் எடுப்பவர்களுக்கு வசதியான இடங்கள் அமைத்துக் கொடுக்கவேண்டும். கூடுமானால் அவர்களுக்குத் தங்க இடமும் சமையல் செய்து சாப்பிட வசதிகளும் செய்து கொடுக்க வேண்டும்.

சில கோயில்களில் சுவாமி அம்பாள் விமானங்கள், கலசங்கள் தங்கத்தினால் செய்யப்பெற்றிருக்கின்றன. இவைகளைப் பாதுகாப்பது சுலபமல்ல. இவைகளைக் காப்பதற்கென்றே தனிக் காவல்காரர்கள் இருக்குமிடங்களில் திருடர்கள் தங்கத்தைச் சுரண்டி எடுப்பதைப் பல இடங்களில் காண்கிறோம். மின்சாரக் கம்பிகள்மூலம் தொட்டவுடனே காவற்காரர்களோ இதர ஊழியக்காரர்களோ இருக்குமிடத்தில் மணியோசை அல்லது வேறு ஒலி கேட்கும்படி ஏற்பாடு செய்து கொடுக்கவேண்டும்.

பூசையில் இருக்கும் உற்சவ மூர்த்திகளை மாதம் ஒரு முறையாவது நன்றாகச் சுத்தம்செய்து வைக்கவேண்டும். அதற்கு புளிக்காப்பு, எலுமிச்சம்பழம் அல்லது தம்பரத்தம் பழம் உபயோகிக்கவேண்டும். வேறுவிதமான ரசாயனப்பொருள்கள் எதுவும் உபயோகிக்கக் கூடாது. பூசையில்லாத விக்கிரகங்களை சென்னையில் ஆணையர் அலுவலகத்தில் அமைக்கப்பெற்றிருக்கும் அரும்பொருள் களஞ்சியத்திற்கு (Museum) அனுப்பிவைக்கலாம். அந்த கோயிலிலேயே புதிய விக்கிரகங்கள் செய்ய வேண்டிய அவசியம் இருந்தால் அவைகளுக்கு உபயோகப்படுத்திக்கொள்ளலாம். எக்காரணத்தைக் கொண்டும் தனிநபர்களுக்கோ வேறு நிலையங்களுக்கோ இலவசமாகவோ விலைக்கோ கொடுக்கக்கூடாது. சில கோயில்களிலிருந்து மறைமுகமாக சில நல்ல விக்கிரகங்களைப் பணத்திற்காக விற்றுவிட்டதாகத் தெரிகிறது. கணக்குகளைச் சரிப்படுத்துவதற்காக வேறு நூதன விக்கிரகங்களை அவைகளுக்குப்பதிலாக வைத்து தணிக்கையில் கண்டுபிடிக்க விடாமல் சில இடங்களில் பணியாளர்களே இதில் பங்கு கொண்டிருக்கிறார்கள். இதைத் தடுப்பதற்கு விக்கிரகங்களையும்

கூடுமானவரை நிறைபோட்டு உயரம், அகலம், பருமன் முதலிய விவரங்களை எழுதிவைத்துக்கொள்வது நலம்.

### தாவர சொத்துக்கள்

அநேக கோயில்களில் கோயிலுக்குள்ளேயும் அருகேயும் பல கடைகள் இருக்கின்றன. கோயிலுக்குள்ளேயிருக்கும் கடைகள் புஷ்பம், தேங்காய், பழம், வெற்றிலை பாக்கு, கூடம், சாம்பிராணி முதலிய வழிபாட்டுக்கு வேண்டிய பொருள்களைத் தவிர சாமான்களை அனுமதிக்கக்கூடாது. ஏற்கனவே இருக்கும் மற்ற கடைகளை எவ்வளவு விரைவில் வெளியேற்ற முடியுமோ அவ்வளவு சீக்கிரம் வெளிப்படுத்த வேண்டும். வேண்டுமானால் அவர்களுக்கு வேறு கடைகளை ஆட்சேபகரமில்லாத வெளியிடங்களில் கட்டிக்கொடுக்கலாம். கோயில் உள்ளும் புறமும் கோயிலிலிருந்தே கடைகளைக் கட்டிக்கொடுக்க வேண்டும். தனி நபர்கள் கட்டும் கடைகள் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமலும் பார்ப்பதற்கு விகாரமாகவும் இருக்கக் காண்கிறோம். நிலவாடகை மாத்திரம் வாங்கிக்கொண்டு கட்டிடங்கட்டவிடக் கூடாது. தற்காலிகமாகக் கட்டப்பட்டிருக்கும் கட்டிடங்களை குத்தகைகாலம் முடிவடைந்தவுடன் கோயிலிலிருந்தே கட்டிடங்கள் கட்டிக்கொடுத்து வாடகைப் பத்திரங்கள் வாங்கிக்கொள்ளவேண்டும். கும்பகோணத்திலும், திருத்துறைப்பூண்டியிலும், பழனியிலும் இம்மாதிரி கட்டிடங்கள் கட்டிக்கொடுத்ததன் மூலம் முன்பு கிடைத்ததைவிட அதிக வருமானம் கிடைத்து வருகிறது.

குடியிருப்பு வீடுகள், தங்கும் விடுதிகள், சத்திரங்கள் முதலியவைகளும் ஆலய நிதியிலிருந்தே கட்டிவைத்து பராமரிப்பது நலம். வழிபடும் மக்களுக்கு எவ்வளவுக்கெவ்வளவு வசதிகள் கொடுக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு வருமானம் அதிகரிக்கக் காண்கிறோம். பழனி, சுவாமிமலை, திருச்செந்தூர், திருக்குற்றாலம் முதலிய இடங்களில் வருமானம் அதிகரித்துக்கொண்டு போவதற்கு இதுவே காரணம்.

### நிலங்கள்

சட்டம் இடங்கொடுக்குமிடங்களிலெல்லாம் பகிரங்க ஏலத்தில் குத்தகைக்கு விடுவதுதான் நல்ல பயன் அளிக்கும். குத்தகைக்காரர்கள் கீழ்க்குத்தகைகள் விடுவதற்கு அனுமதிக்கக்கூடாது. சில கோயில்களில் பல்வேறு காரணங்களினால் நிலங்கள் சாகுபடியாகாமல் இருக்கின்றன. விவசாய இலாகா துணைகொண்டு இவைகளைச் சாகுபடிக்குக் கொண்டுவர வேண்டும். இல்லாவிடில் இவைகளைத் தோப்புக்கள் முதலியவைகளாக மாற்றவேண்டும். திருவெண்காடு, திருப்புகலூர், பண்பொழி முதலிய திருக்கோயில்களைச் சேர்ந்த நிலங்களில் சென்ற சில ஆண்டுகளாக, சவுக்கு, தென்னை, மா, பலா, கொய்யா முதலிய பல விருட்சங்களும் வைத்து அபிவிருத்தி செய்திருக்கிறார்கள். வசதியுள்ள இடங்களில் நல்ல நந்தவனங்கள் அமைக்க வேண்டுவது மிகவும் அவசியம். கோயிலுக்கு வேண்டிய அளவு புஷ்பங்கள் நந்தவனத்திலேயே கிடைக்கும்படி செய்ய வேண்டும் விவசாய இலாகாவினரைக் கலந்துகொண்டு ஆண்டு முழுதும் புஷ்பங்கள் கிடைக்கும் வகையில் செடிகள் அமைத்துப் பராமரிக்கவேண்டும். தவிர்க்க முடியாத காரணங்கள் இருந்தால் ஒழிய பண்ணை சாகுபடி செய்வது கோயில் நலனுக்கு உகந்ததல்ல. ஒரு கோயிலில் பண்ணை சாகுபடி செய்ததின் பயனைக வரவைவிட செலவு அதிகமாயிற்று. கணக்குத்தணிக்கையாளர் அந்தப் பண்ணை நிலங்களைச் சாகுபடி செய்யாமலே விட்டிருந்தாலும் கோயிலுக்கு நஷ்டமாவது இல்லாமல் இருந்திருக்கும் என்று குறிப்பிட்டுள்ளார். நிலங்களின் அபிவிருத்திக்காக கிணறுகளோ குழாய்த் திட்டங்களோ அவசியமானால் செய்துகொள்ளவேண்டும். தேவைக்கு மிஞ்சிய அளவு தண்ணீர் கிடைக்கும் கிணறுகள் இருக்கும் இடங்களில் பக்கத்து நிலங்களுக்கும் தண்ணீர் கொடுத்து அதற்கான கட்டணம் விதித்து வருமானத்தை அதிகப்படுத்திக்கொள்ளலாம்.

பொதுவாக திருக்கோயில்கள் சம்பந்தப்பட்ட சொத்துக்களைப் பாதுகாப்பதி

லும் அபிவிருத்தி செய்வதிலும் அவைகளி லிருந்து வருமானத்தை அதிகப்படுத்து வதிலும் அறங்காவலர்களும், இறைபணி யாளர்களும் தங்கள் சொந்த சொத்துக் களில் எவ்வளவு அக்கரை காட்டுவார் களோ அதைவிட அதிக கவனம் செலுத்த வேண்டும். சில இடங்களில் சொத்துக் களைச் செலவிடுவதிலும் கையாடல் செய் வதிலும் தங்கள் சொத்தைப்போல் மாத் திரம் வைத்துக்கொண்டு, வருமானத் திலோ, பாதுகாப்பாலோ அபிவிருத்தி யிலோ அதிக கவனம் செலுத்தாமலிருக்கக் காண்கிறோம். ஒல்லும் வகையால் ஆல யச் சொத்துக்களை நன்கு அபிவிருத்தி செய்து வருமானங்களையும் அதிகப்படுத்தி செலவினங்களை எல்லாவகையிலும் போது மான அளவு குறைத்துக்கொண்டு நிர் வாகம் செய்வதே கடமையாகக்கொண்டு ஆண்டுதோறும் உபரி வருமானத்திலிருந்து திருப்பணிகளும் வழிபாடு செய்யும் மக் களுக்கு வசதிகளும் செய்து கொடுக்க வேண்டும். நகரங்களிலும், பெரிய கிரா மங்களிலும் வீட்டு மனைகள் காலியாக இருந்தால் அவற்றில் ஆக்கிரமிப்புக்கள் ஏற்படுவது வழக்கம். கோயிலிலிருந்து கட்டிடம் கட்டி வாடகைக்கு விடமுடி யாத இடங்களில் அத்தகைய நிலங்களை யும் சாகுபடிக்குத் தகுதியில்லாதவையும் வேறுவித வருமானம் இல்லாதவையும் ஆகிய நிலங்களையும் சட்டப்படி அனுமதி பெற்று பகிரங்க ஏலத்தில் விற்று வேறு சொத்துக்கள் வாங்குவது நலம்.

மேற்கண்டவை பொது விதிகள். ஒவ்வொரு ஆலயத்துக்கும் தனிப் பிரச்னைகள் இருந்தால் அவைகளை சூழ் நிலைக்குத் தக்கவாறு அறங்காவலர்களும் இறைபணியாளர்களும் தக்கமுறையில் ஆராய்ந்து ஆவன செய்யவேண்டும். வேண்டும்போதெல்லாம் அறநிலையத் துறை அலுவலர்கள் கூடுமானவரை உதவிசெய்யக் கடமைப்பட்டுள்ளனர்.

---

நான் இதைப் பல முறை சொல்லியிருக்கிறேன். அதாவது, நம்மையும், நம் பெண்மணிகளை யும், நம் பிரார்த்தனை தலங்களையும், நம்மை கஷ்டத்திற்கு ஆளாக்கிக்கொள்ளுவதன் மூலம், அதாவது அஹிம்சா மார்க்கத்தின் மூலம் காப்பாற்றிக்கொள்ளுவது எப்படியென்று தெரியாவிட்டால், போராடியாவது காப்பாற்றியாகவேண்டும். அப்பொழுதுதான் நாம் மனிதர்களாவோம். —மகாத்மா காந்தி

---

# R. Dis. No. 42466/60 தேதி 8-12-60

(1) அக்டொபர் 1961-ல் தொடங்கும், 'திருக்கோயில்' நான்காவது ஆண்டுக் குரிய சந்தா புதுப்பித்தல்—சேர்தலுக்கான தொகை (ரூ. 10 ஒரு சந்தாவுக்கு) யை உதவி ஆணையர்களே வசூல் செய்யும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறது. அதற்கான மாதக்கணக்கு அறிக்கையும் (Monthly Statement of Demand—Collection—Balance) பணக்குறிப்பேட்டின் நகலும் (Cash Book Extract) அனுப்பும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறது.

(2) சந்தாதாரர்களும் சந்தா புதுப்பித்தல் அல்லது சந்தா சேர்தலுக்கான பணத்தை அவ்வவ் வட்டார உதவி ஆணையர் அலுவலகத்தில் செலுத்தி இரசீது பெற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

(3) அக்டோபர் 1960ல் தொடங்கிய மூன்றாவது ஆண்டுக்குரிய சந்தா தொகையை இதுவரை அனுப்பாதவர்கள் நேராக ஆணையர் அலுவலகம் சென்னைக்கு அனுப்பிவைக்கும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

#  செய்திகள் 

**மதுரை :** அனுமார் கோயிலில் 18-12-60 முதல் 20-12-60 வரை அனுமத் ஜெயந்தி நடைபெற்றது.

◆ ◆ ◆ ◆

**நாகப்பட்டினம் :** சௌந்தரராஜப்பெருமாள் கோயிலில் வைகுண்ட ஏகாதசி உற்சவம் 18-12-60 முதல் 27-12-60 வரை நடைபெற்றது.

◆ ◆ ◆ ◆

**திருவெண்காடு ;** சுவேதாரண்யசுவாமி கோயிலில் கார்த்திகைத்திங்கள் நான்கு சோமவாரங்களிலும் சுவேதாரண்யருக்கு 1008 சங்காபிஷேகமும் நான்கு பானுவாரங்களினும் அகோரமூர்த்திக்கு சிறந்த அபிஷேக அலங்காரங்களுடன் பூஜையும் நடைபெற்றன. சமயச் சொற்பொழிவுகளும் இன்னிசை யரங்கும் நடைபெற்றன.

◆ ◆ ◆ ◆

**சென்னிமலை :** சுப்பிரமணியசுவாமி கோயிலில் தைப்பூச உற்சவம் 19-1-61 முதல் 5-2-61 வரை நடைபெறும்.

◆ ◆ ◆ ◆

**சிதம்பரம் :** இளமையாக்கினார் கோயிலில் கணம்புல்ல நாயனார் திருவிழா 2-12-60-ல் நடைபெற்றது. திரு. ச. சேதுசுப்பிரமணியம் அவர்கள் 'கணம்புல்ல நாயனார்' வரலாற்றை விளக்கி உரையாற்றினார்கள்.

◆ ◆ ◆ ◆

**திருவான்மியூர் :** மருந்தீசுவரசுவாமி கோயிலில் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் 23-1-61-ல் நடைபெறும்.

◆ ◆ ◆ ◆

**திருப்புகலூர் :** அக்னீசுவரசுவாமி கோயிலில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட சுமார் 500 பேர்களுக்கு தினம் இரண்டு வேளைகள் அன்னம் வழங்கப்பட்டது. 20-11-60ல் அமைச்சர்கள் கனம் வி. இராமையா, கனம் பி. கக்கன் மாலை 6-மணிக்கு இக்கோயிலுக்கு வந்து வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களையும், இடங்களையும் பார்வையிட்டுச் சென்றார்கள்.

◆ ◆ ◆ ◆

**திருப்புகலூர் ;** அக்னீசுவரசுவாமி கோயிலுக்கு 25-11-60-ல் சென்னை கவர்னர் கனம் விஷ்ணுராம் மேதி அவர்கள் சுவாமி தரிசனம் செய்வதற்காக வந்தார்கள். அவர்களை பூரணகும்பம் மரியாதையுடன் திரு. எம். டி. தியாகராஜபிள்ளை அவர்கள் வரவேற்றார்கள். தஞ்சை அறநிலைய ஆட்சித்துறை துணை ஆணையரும், உதவி ஆணையரும், ஆலய அதிகாரிகளும் கலந்துகொண்டார்கள். கோயிலின் சிறப்புகளைப்பற்றி துணை ஆணையர் திரு. கே. சோமசுந்தர தேசிகர் அவர்கள் விளக்கினார்கள். அம்பாள் சந்நிதியில் கவர்னர் அவர்களுக்கு திரு. எம். டி. தியாகராஜபிள்ளை அவர்களால் பொன்னாடை போர்த்தப்பட்டதுடன் அப்பர் பெருமான் திருவுருவச்சிலை ஒன்றும் அளிக்கப்பட்டது.

**திண்டுக்கல் :** காளகஸ்தீசுவரர் கோயிலில் தனுர்மாத பூஜையை அனுசரித்து காலை, மாலை இருநேரங்களிலும் 'திருப்பாவை', 'திருவெம்பாவை' பாசுரங்கள் ஒலி பரப்பப்பட்டன. அத்துடன் 18-12-60, 25-12-60, 31-12-60 தேதிகளில் சமயச் சொற்பொழிவும் நடைபெற்றன. 8-1-61 திருப்பாவை—திருவெம்பாவை மாநாடும் நடைபெறும்.

◆ ◆ ◆ ◆

**லால்குடி :** சப்தரிஷீஸ்வரசுவாமி கோயிலில் ஆதிரை விழா 24-12-60 முதல் 3-1-61 வரை நடைபெறும். சமயச் சொற்பொழிவுகளும், இன்னிசையரங்கும் நடைபெறும்.

◆ ◆ ◆

**திருநீர்மலை :** அரங்கநாதசுவாமி கோயிலில் வைகுண்ட ஏகாதசி உற்சவம் 28-12-60 முதல் 7-1-61 வரை நடைபெறும்.

# யானை திறைகொண்ட விநாயகர்

(திருவண்ணாமலை திருக்கோயிலில் கிளிக்கோபுரத்தருகில் யானைதிறைகொண்ட விநாயகர் சந்நிதி இருக்கிறது. அதைப்பற்றிய புராணக்குறிப்பு கீழே தரப்படுகிறது)

**காப்பு**

நேரிசை வெண்பா.

**சதுரன்எழிற் கோண சயிலற் றுதிப்பன்**
**மதுரமொழி அன்பர் மனமாங்—குதிரைதிறை**
**கொண்டவனென் றேத்துங் குரைகழற்கால் யானைதிறை**
**கொண்டவனை யென்னுளத்தே கொண்டு.**

**(சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய சோண சைல மாலை)**

*(இ-ள்) இனிய சொற்களையுடைய அடியார்களது மனமாகிய குதிரைகளை கப்பமாகக் கொண்டருளுபவரென்று (உலகினர்) புகழும் ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகளையுடைய யானை திறை கொண்டவரென்னும் திருநாமம் வாய்ந்த விநாயகக் கடவுளை எனது மனத்திலே தியானித்து (அக்கடவுளுடைய அருளால்) சதுரப்பாட்டினை யுடையவராகிய அழகிய சோணசைலேசுரரை (யான்) துதிப்பேன் (எ - று.)*

*சதுரப்பாடாவது (ஈண்டு சிவபெருமானை யுணர்த்திற்று) ஆக்கல் ஆதிய கிருத்தியங்களை அம்புயனாதியர் தமது சந்நிதியில் இயற்று நிற்பத் தாம் இறைமை பூண்டு வாளா விருத்தல்.*

*அன்றி அரி பிரமர் தேடிக் காணுதற்கரியஅனலுருவாய் நின்றமையுமாம்,*

**யானை திறை கொண்ட சரிதம்.**

*வடதேசத்தினின்றும் வந்து திருவண்ணாமலையில் வசித்திருந்த முகிலன் என்னும் அரசன் சிவனடியார்களுக்கும் நகரத்தவர்களுக்கும் இடையூறு விளைத்தலைக் கேள்வியுற்று குகை நமச்சிவாய தேசிகர்,*

**சூலங் கரத்திருக்கச் சோதிமழு வாளிருக்க**
**ஆலமுண்ட காலத் தருளிருக்க—மேலே**
**யெரித்த விழியிருக்க விந்நாட் சோணேசர்**
**தரித்ததென்ன காரணமோ தாம்.**

*என்று துதித்தலும் சிவாஞ்ஞையால் விநாயகக்கடவுள் அன்றிரவிலே அம் முகிலனைப் பெரும்பயமுறுத்த அவன் அஞ்சிச் சிலையானைகளைத் திறையாகக் கொணர்ந்து விடுத்து வழிபட்டமையால் 'யானை திறைகொண்ட விநாயகர்' எனத்திருநாமம் பெற்றனர், என்பது குகை நமச்சிவாய தேசிகர் சரித்திரத்தில் காணப்படுகிறது, என்று—புதுவயல் அருட்கவி திரு. பி. மு. ராம முத்துக்கறுப்பன் அவர்கள் தெரிவித்துள்ளனர்.*



ஊர்த்துவ தாண்டவம்

# சைவத் திருமுறைகளின் அடைவு

[திரு. ரா. சண்முகசுந்தரம் செட்டியார்]

(முன் தொடர்ச்சி)

இங்ஙனமாக இறைவன்பால் நட்புரிமை பெற அவ்வுறவின் முதிர்ச்சியால் இறைவனிடத்து உறைத்த அன்புபெறுவதியற்கை. இம் முதிர்ந்த அன்பினை எடுத்துக்காட்டுஞ் சிறந்தது சுந்தரமூர்த்தி சுவாமிகள்தேவாரம். அத்திருப்பாட்டுக்களின் அருமையைப் பாராட்டி வண்பெற்ற என்ற அடைமொழி கொடுத்துச் சிறப்பித்தார் உமாபதி சிவனுர். வண்என்பது வளமை. ஈண்டு சுந்தரரது முதிர்ந்த அன்பினைக் குறித்தது. இவ்வன்பு காரணமாய்ச் சிவபெருமான் சுந்தரரைத் தோழமை கொண்டார். ஒருமணத்தைச் சிதைவுசெய்து இருமணத்தை இறைவனைக் கொண்டே செய்துகொண்ட பெருமை அவர் தம் உறைத்த அன்பினுலாயது. உலக வாழ்க்கைக்குரிய பொருள்களும் பற்பல காலங்களில் வேண்ட அவரைப் பெறும்படிச் செய்தது அவ்வன்பு. சேரவேந்தரோடு நட்பாங்கிழமை தந்ததும் அவ்வன்பே. இன்னும் உற்ற பிணியையும் பரவையார் புலவியையும் தீர்த்து வைத்தது அவ்வன்பே. மற்றும் அவ்வன்பு சுந்தரரை இறைவனையும் பணிகொள்ளும் வல்லாளனுகச் செய்வித்தது. இவை யாவும் வரலாற்றுப் பகுதியில் கிடைத்தவை. சுந்தரரது அன்பினுறைத்த பண்பினை அவரது தேவாரத்தினின்றும் தெளியலாகும். அப்பர் பெருமான்பாலுள்ள விநயம் சுந்தரர் பால் காண்டலரிது. நாவரசர் "தன்னடைந்தார் வினை தீர்ப்பதன்றோ தலையாயவர் கடனுவது" என்று விநயமுடன் கூறியதனை, "தொழுவாரவர் துயராயின் தீர்த்தலுன தொழிலே" என்று உறைப்புடன் கூறுவது சுந்தரர் இயல்பு. இறைவனை நிந்தைசெய்து பாடுகின்ற அன்பினுறைப்பு அவர்பால் அமைந்துள்ளது. அத்தகைய திருப்பாட்டுக்களுள் சில,

> ஆர்த்திட்ட தும்பாம்பு கைக்கொண்டதும்
> பாம்பு அடிகேளு மக்காட் செயஅஞ்
> சுதுமே—திருக்கோத்திட்டை யுந்திருக்
> கோவலூரும்—பண். இந்தளம்—க

> உடுகூறையுஞ் சோறுந்தந்தாளகில்லீர், ஆளா
> ளியவே கற்றீர் எம்பெருமான் அடிகேளு
> மக்காட்செய அஞ்சுதுமே—திருக்கோத்
> திட்டையும் திருக்கோவலூரும்—கூ

> வல்லதெல்லாஞ் சொல்லியும் மைவாழ்த்திறு
> லும்வாய்திறந் தொன்று
> இல்லையென்னீர் உண்டுமென்னீர் எம்மை
> யாள்வானிருப்ப தென்னீர்
> —திருஓணகாந்தன்றளி—பண். இந்தளம்—ச.

> தையலா ருலகுய்ய வைத்த, காரிரும்பொழிற்
> கச்சிமூதூர்க்காமக் கோட்டமுண்டாகநீர்
> போய், ஊரிடும்பிச்சை கொள்வதென்னே
> —திருஓணகாந்தன்றளி-பண்-இந்தளம்-சு

என வருவன. அவர் அன்பின் திறம்,

> தன்மையினுலடி யேனைத்தாமாட் கொண்ட
> நாட்சபைமுன்
> வன்மைகள் பேசிடவன் றொண்டனென்ப
> தோர் வாழ்வுதந்தார்
> புன்மைகள் பேசவும் பொன்னைத் தந்தென்
> னைப்போகம் புணர்த்த
> நன்மையினுர்க் கிடமாவது நந்திருநாவலூரே
> —திருநாவலூர்-பண்-தக்கராகம்-உ.

> மட்டார் பூங்குழன் மலைமகள் கணவனைக்
> கருதாதார் தம்மைக்கருதேன்
> ஒட்டீராகிலு மொட்டுவனடியேனும்
> மடியடைந்தவர்க் கடிமைப்
> பட்டேனுகிலும் பாடுதலொழியேன்
> பாடியும் நாடியுமறிய
> நட்டேனுதலால் நான்மறக் கில்லேன்
> நாட்டியத் தான்குடி நம்பீ
> —திருநாட்டியத்தான்குடி-பண்-தக்கராகம்-கு.

> எங்கேனு மிருந்துன்னடியே னுனைநினைந்தால்
> அங்கேவந் தென்னொடுமுடனுகி நின்றருளி
> இங்கேயென் வினையையறுத்திட் டெனையாளுங்
> கங்கா நாயகனே கழிப்பாலை மேயானே
> —திருக்கழிப்பாலை-பண்-நட்டராகம்-உ.

எனவரும் திருப்பாட்டுக்களாலும் அறியலாகும். திருவும் மெய்ப்பொருளும் செல்வமும்

தனக்கு இறைவனது சீருடைக்கழல்க ளென்றிருந்தவர் சுந்தரர்பெருமான். இங்ஙனமாக அவர் உறுதியும் அன்பினுறைப்பும் அவருக்கு இறைவனுடனுகை விளங்கும் அருள் வாழ்க்கையைத் தந்தன.

இனி உறுதியும் உறைத்த அன்பும் இறைவனது அருளைப் பெறச்செய்யவல்லன. எனவே அன்பின் வளமை குறித்த சுந்தரர் தேவாரத்தின் பின் அருளையே நாடிநின்ற மணிவாசகர் அருளிய திருவாசகமும் திருக்கோவையாரும் எட்டாந் திருமுறையாக அமைத்தனர். திருவாசகத்துள் ஒவ்வொரு பாட்டிலும் அருள் என்னும் சொல் வெளிப்படையாகவும் மறைமுகமாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. பிற திருமுறைப் பாட்டுக்களினும் திருவாசகத்தின் சிறப்பாவது அருள் வேட்கை நூல் முழுவதினும் திகழ்வதேயாகும். இறைவனை முன்னிலைப்படுத்தி உயிரை ஈர்த்து அவன்பாலமைத்து முறையிடுவதுபோல் இவ்வருணூல் அமைந்துளது. உயிரின் உள்ளுணர்ச்சி பெருகுவது கண்கூடு. அருள்வேட்கையின் திறத்தை,

மருவினிய மலர்ப்பாதம்
மனத்தில் வளர்ந்துள்ளுருகத்
தெருவுதொறும் மிகஅலறிச்
சிவபெருமா னென்றேத்திப்
பருகியநின் பரங்கருணைத்
தடங்கடலிற் படிவாமாறு
அருளெனக்கிங்கிடை மருதேஇடங்
கொண்ட அம்மானே

—திருவேசறவு க.

எனவரும் திருப்பாட்டினுள்ளும் உணரலாகும். திருக்கோவையாருள் தலைமகன் தலைமகள் கூட்டமும் புணர்வும் அருள்வழி நேர்வதன்றோ. இவ்விரு அருணூல்களுள் அன்பினெழுச்சியும் அருள்வேட்கையும் சிறப்பாகக் காணப்படுவன. எனவே அருள் என்னும் அடைமொழி எட்டாந்திருமுறைக்கு உரிமையாயிற்று.

இனி அருள்பெற்றோர் உலகப்பற்றை விடுபவராவர். அந்நிலையை அறிவிப்பது ஒன்பதாந்திருமுறையாகிய திருவிசைப்பா எனக் கருதி அது மோகமெறி திருவிசைப்பாமாலை என்று சிறப்பிக்கப்பட்டது. மோகமாவது எல்லாம் இறைவன்செயல்; அவன் இயக்கநாம் இயங்குகின்றோம் என்ற உண்மைத் தெளிவின்றி நாம்செய்தோம், நம்மாலாவதிது என்ற மயக்கவுணர்ச்சிபாற்படுவது. "யானெனது என்னுஞ் செருக்கு அறுப்பவன் வானோர்க்குயர்ந்த உலகம்புக" வல்லவன். திருமாளிகைத்தேவர் திருவிசைப்பாக்கள் இதனை நன்கு புலப்படுத்துவதாகும்.

பெருமையிற் சிறுமை பெண்ணோ டாணாய்
என்பிறப்பறுத்த பேரொளியே
கருமையின்வெளியே கயற்கணாள் இமவான்
மகளுமை யவள்களை கண்ணே
அருமையின் மறைநான் கோலமிட்
டரற்றும் அப்பனேஅம் பலத்தமுதே
ஒருமையிற் பலபுக்குருவி நின்றயைத்
தொண்டனேன் உரைக்குமா றுரையே

—கோயில்-பண்-கௌசிகம்-அ.

எனவரும் திருப்பாட்டினையும் மற்றும் பல திருப்பாட்டுக்களையும் ஆராயின் தெளியலாகும்.

இங்ஙனமாக இறைவன் இயக்க உயிர்கள் இயங்குகின்றன வென்றுணர்ந்த ஞான்று அவனொடு ஒற்றித்துநிற்க வேட்கையுடையராய் உறுதியுடன் இறைவனைப் பற்றிநிற்கின் சிவானந்தாநுபவம் பெறுவர். அதனைச் சிவபோகம் என்ப. அங்ஙனம் சிவயோகத்தால் இறைவனொடு கலந்துநின்று சிவானந்தாநுபவம் பெற்றுத் திருமந்திரம் மொழிந்தவர் திருமூலராகும். ஆகவே திருமந்திரமாகிய பத்தாந்திருமுறையைச் சிவபோகமிகு என்ற அடைமொழியால் சிறப்பித்தார். திருமந்திரங்கள் அனைத்தும் அநுபவக் கூற்றுக்களாகும்.

புளிக் கண்டவர்க்குப் புனலூறுமாபோற்
களிக்குந் திருக்கூத்துக்கண்டவர்க் கெல்லாம்
துளிக்கும் அருட்கண்ணீர் சோர்நெஞ்சுருக்கும்
ஒளிக்கு ளானந்தத் தமுதூறும் உள்ளத்தே (2778)

---

அஹிம்சைப் போராட்டத்தின் முடிவில் மனதில் வெறுப்பு குடிகொள்ளுவதில்லை. அந்த போராட்டத்தின் முடிவில் விரோதிகள் நண்பர்களாக மாறிவிடுவார்கள். தென்னப்பரிக்காவில் ஜெனரல் ஸ்மட்ஸுடன் போராடியபோது எனக்கு இந்த அனுபவம் ஏற்பட்டது ஆரம்பத்தில் அவர் என் கடுமையான விரோதியாக இருந்தார். கடுமையாக என்பேரில் குற்றம் சாட்டினர். ஆனல் இன்றைய தினம் அவர் என் நெருங்கிய நண்பராகயிருக்கிறார்.

—மகாத்மா காந்தி

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன்மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமாறெங்
ஙனே (2944)

எனவரும் திருமந்திரங்கள் போன்றவை பல சிவபோகாநுபவங்களை விரித்துரைப்பன.

இனி, இறைவனால் பேரின்பாநுபவம் கூடுகின்றமையின் அயரா அன்பினால் உயிர்கள் இறைவனை வழிபடுதல் இறைவனுக்குச் செய்யும் நன்றியாகும். இவ்வன்பினைப் பத்தி என்பர். "பித்தனைப் பெருந் தேவர் தொழப்படும், அத்தனை அணி ஆமாத் தூர்மேவிய, முத்தினை அடியேன் உள்முயறலும், பத்திவெள்ளம் பரந்தது காண்மினே" எனும் அப்பர் திருக்குறுந்தொகை நினைவு கூரத்தக்கது. பத்தியுடையார் இறைவன் திருநாமம் ஓதுதலும், பரவுதலும் பாடுதலும், ஆடுதலும் செய்வர். அவ்வாறாக பன்னிரண்டு மெய்யன்புடையார் பத்தியால் பாடிய நாற்பது பிரபந்தங்களின் தொகுதியைப் பதினொராந்திருமுறையாக்கி அதனைப் பத்திதரு திருமுறை என்று சிறப்பித்தார் திருமுறை கண்டபுராண ஆசிரியர்.

எனக்கினிய எம்மானை ஈசனை யான்என்றும்
மனக்கினிய வைப்பாக வைத்தேன்—எனக்
கவனைக்
கொண்டேன் பிரானாகக் கொள்வதுமே
இன்புற்றேன்
உண்டே எனக்கரிய தொன்று
—காரைக்காலம்மையார்-அற்புதத்
திருவந்தாதி-10.

சிந்தனைசெய்ய மனம் அமைத்தேன்
செப்ப நாஅமைத்தேன்
வந்தனைசெய்யத் தலை யமைத்தேன்
கைதொழ அமைத்தேன்
பந்தனை செய்வதற் கன்பமைத்தேன்
மெய் அரும்பவைத்தேன்
வெந்தவெண் ணீறணியீசற்
கிவை யான் விதித்தனவே.
—சேரமான்பெருமாள் நாயனார்-
பொன்வண்ணத்தந்தாதி—கூ.

கருமுதல் தொடங்கிப் பெருநாள் எல்லாம்
காமம் வெகுளி கழிபெரும் பொய்யெனுந்
தூய்மையில் குப்பை தொலைவின்றிக்
கிடந்ததை
அரிதின் இகழ்ந்து போக்கிப் பொருதிறன்
மையிருள் நிறத்து மதனுடை யடுசினத்து
ஐவகைக் கடாவும் யாப்பவிழ்த் தகற்றி
அன்புகொடு மெழுகி அருள்விளக் கேற்றித்
துன்ப இருளைத் துரந்து முன்புற
மெய்யெனும் விதானம் விரித்து நொய்ய
கீழ்மையில் தொடர்ந்து கிடந்த என்சிந்தைப்
பாழறை உனக்குப் பள்ளியறை யாக்கிச்
சிந்தைத் தாமரைச் செழுமலர்ப் பூந்தவிசு
எந்தை நீயிருக்க விட்டனன் ........
—பட்டினத்தடிகள்—திருக்கழுமல
மும்மணிக்கோவை—௪.

என்வரும் திருப்பாடல்களில் பத்தியால் இறைவனை மனக்கினிய வைப்பாக வைத்தலும் இன்புற்றநிலையும் இறைவனுக்கு மனம் முதலிய கரணங்களை அவனது பணிகளுக்கு விதித்தமுறையும், மனப்பாழறையை இறைவனுக்குப் பள்ளியறையாக மாற்றியமைத்ததிறமும் அழகுபெற குறித்தமை அறியத்தக்கது. இவையே அயரா அன்புடையார் செய்பணிகளாகும்.

இறுதியான பன்னிரண்டாந்திருமுறை யாவது திருத்தொண்டர் புராணமாகும். ஈண்டு அன்புடையராகிய அறுபான்மும்மை நாயன்மார்கள் ஒன்பது தொகையடியார்கள் வாழ்க்கைநிலையும் அவர்கள் சிவபெருமானைப் பேணியமுறைகளும் அவர்கட்கு இறைவன் வீடருளிய முறைமைகளும் அங்கையின் நெல்லிக்கனிபோல் விதந்தோதப்பட்டன. இல்லறம் துறவறம் என்ற வேறுபாடு களின்றி அன்புடையார் ஆண்டவனடி யடைதல் திண்ணம் என்பதனை விளக்கியது இவ்வருணூல். அன்புடையார் பத்தராய்ப் பணிவாரும் பரமனையே பாடுவாரும், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தாரும், முழுநீறு பூசிய முனிவருமாக விளங்கினர். குருபரனைப் பேணுவோரும், குருமணியைக் கண்மணியென்று கருதினோரும் காண்டற்குமுன்

நம் சிறுமையையும், அற்பத்தனத்தையும் ஏமாற்று வித்தையையும் நம் உள்ளத்திலிருந்து துடைத்து விடுமாறு நாம் கடவுளை நோக்கி வழிபடுவோமாக. அப்பொழுது அவர் நிச்சயம் நம் பிரார்த்தனைக்குச் செவி சாய்ப்பார். எப்பொழுதுமே பொய்யாகாத சக்தியாக அவர் விளங்குகிறார். அநேகர் இதே சக்தியைத்தான் எப்பொழுதும் நாடியிருக்கின்றனர். —மகாத்மா காந்தி

காதலாற்கலந்து அவர்தங் திருப்பெயரே மந்திரமாகக் கொண்டொழுகினேரும் சில ராவர். சிவலிங்க வழிபாடு விரதமாகக் கொண்டோரும் பலர். அடியார் தொண்டு, அவர்தமக்கு அமுதுபடைப்பு, திருமுறைகள் எழுதுதல் என்பன சிலர் செய்திருத்தொண் டாம். இன்னல்வரினும் இறைவன் பூசை மறவாப்பான்மையர். "கூடும் அன்பினில் கும்பிடலேயன்றி வீடும்வேண்டா விறலின்" விளங்கியவர். பூசையும் தொண்டும் முட்டி டின் இன்னுயிர் போக்கிக்கொள்ளவும் துணிந்தனர் சிலர். தம்மையாளுடைய பிரா ளுரும் சிவபெருமான் திருவடிமலர்களைச் சென்னியிலும் சிந்தையிலும் மலர்வித்துக் கொள்ளும் பெரும்புகழுடையவர். செயற் கரிய செய்கைசெய்து பெரியாரான வீரர்கள். இவர்தம் பெருமையைத் திருவாரூர்ப்புற் றிடங் கொண்டபெருமான்,

பெருமையால் தம்மை ஒப்பார்
பேணலால் எம்மைப் பெற்ருர்
ஒருமையால் உலகை வெல்லார்
ஊனம்மேல் ஒன்றுமில்லார்
அருமையாம் நிலையில் நின்ருர்
அன்பிளுல் இன்பம் ஆர்வார்
இருமையுங் கடந்து நின்ருர்
இவரைநீ அடைவாய் என்று

எனவரும் திருவிருத்தத்தில் அருளித் திருத் தொண்டர் கூட்டம் சாருமாறு சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு ஆணைதந்தார். இத்துணைப் பெருமக்கள் வரலாறுகள் அன்பு முதிர்ந்து அருள்வாழ்க்கை வாழக் கருதுவோர்க்கு வழி காட்டியாவன.

சைவத் திருமுறைதள் பன்னிரண்டும் திருமுறைகண்ட புராணத்தில் அவைகட்குக் குறித்துள்ள சிறப்புமொழிகளால் உயிர்கள் இறைவனை யடைந்துய்தற்கு ஒரு சோபான முறையைக் கற்பிப்பன என்பது தெளிவு. திருமுறைச் செம்பாடல்களைப் பாடுவோருக்கு உள்ளத்தினெழுச்சியும், அதனுல் உயிருக்கு மயக்க நீக்கமும், கனிவும், கசிவும் அன்பின் பெருக்கும் உளவாதல் கண்கூடு.

மண்ணுலகிற் பிறந்து நும்மை
வாழ்த்தும் வழியடியார்
பொன்னுலகம் பெறுதல் தொண்டனேன்
இன்று கண்டொழிந்தேன்
—திருநொடித்தான்மலை-பண்-பஞ்சமம்-ல.

என்பது சுந்தரர் அநுபவமொழி. இது, "இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" என் னும் பொய்யாமொழியை நினைவூட்டுவ தாகும். இறைவனை வாழ்த்துவோரே உலகப் பற்றுநீங்கி இறையின்பம் பெறுவர் என்பது உறுதி. "போற்றிப் புகழ்ந்திருந்து பொய் கெட்டுமெய்யானுர்" என்பது திருவாசகம். திருஞானசம்பந்தப் பெருமான்

ஞாழல்கமழ் காழியுள் ஞானசம்பந்தன்
வேழம் பொருதெண்ணீரதிகை வீரட்டானத்துச்
சூழுங் கழலானைச் சொன்னதமிழ்மாலை
வாழுந் துணையாக நினைவார் வினையிலரே
—திருவதிகைவீரட்டானம்-
பண்-தக்கராகம்-சக.

என்று அறிவுறுத்தியபடிச் சைவத் திரு முறைகளைப் போற்றிப்பாடி நம் வாழ்க் கைக்கு உறுதுணையாகக் கொண்டொழுகி யுய்வோமாக.

---

என் பொதுவாழ்வில் பழிக்குப்பழி வாங்கும் சக்தி பலமுறை எனக்குக் கிடைத்திருந்தும், நான் அவ்விதம் செய்யவில்லை; அவ்விதம் செய்யக்கூடாதென்று நண்பர்களுக்கும் உபதேசம் செய்தேன். இந்த கொள்கையை பரப்புவதற்காக என் வாழ்க்கை அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கிறது.

மனித வர்க்கத்துக்கு அஹிம்சை போதம் செய்வது இந்தியாவுக்கென்று விதிக்கப்பட்ட கடமையென நான் உறுதியாக நம்புகிறேன். இது நடைபெற அநேக காலம் பிடிக்கலாம். ஆனல், இந்தக் காரியத்தைச் செய்வதில் வேறு எந்த தேசமும் இந்தியாவை முந்திக்கொள்ளாது என்பதே என் எண்ணம்.

இன்னதென்று வரையறுத்துக் கூறமுடியாத ஒரு சூட்சும சக்தி எல்லாவற்றிலும் நிறைந்திருக் கிறது. அதைப் பார்க்க முடியவல்லை; ஆனுல் உணருகிறேன். கண்ணுக்குப் புலனுகாத இந்தச் சக்தி உணர்வுக்குப் புலனுகிறது. ஆனுலும் அது இருப்பதை நிரூபிக்க இயலாது. ஏனென்ருல், நாம் புலன் களின் (இந்திரியங்களின்) மூலமாகக் காணும் எதைப்போலவும் அது இல்லை. அது புலன்களைத்தாண்டி நிற்கிறது. எனினும் கடவுள் இருக்கிருர் என்று ஒரு குறிப்பிட்ட அளவு வரை காரணத்தோடு விவாதிக் கலாம். நம்புகிறவர்களுக்கு கடவுள் இருக்கிருர்.

—மகாத்மா காந்தி



பெருஞ்சேரி—சோமஸ்கந்தர்

# பெருஞ்சேரி

கரும்பினும் இனியான்தன்னைக்
    காய்கதிர்ச் சோதியானை
இருங்கடல் அமுதந்தன்னை
    இறப்பொடு பிறப்பிலானைப்
பெரும்பொருட் கிளவியானைப்
    பெருந்தவமுனிவர் ஏத்தும்
அரும்பொனை நினைந்த நெஞ்சம்
    அழகிதாம் நினைந்தவாறே.

தஞ்சை மாவட்டத்தில் மாயூரப் பகுதியில் பெருஞ்சேரி என்ற ஒரு சிவத்தலம் இருக்கிறது. மாயூரம்—அறந்தாங்கி இருப்புப் பாதையில் மங்கநல்லூர் என்ற நிலையத்தில் இறங்கி வடகிழக்கே சுமார் ஒருகல் சென்றால் இத்தலத்தையடையலாம். அல்லது மாயூரமிருந்து திருவாரூர் செல்லும் பஸ்ஸில் ஏறி ஐந்துகல் தொலைவிலுள்ள சுந்தரப்பன் சாவடி என்ற இடத்தில் இறங்கி சுமார் முக்கால் கல் தூரம் கிழக்கே சென்றால் இப்பதியைச் சேரலாம்.

பெருஞ்சேரி என்று வழங்கப்படும் இத்தலம், வழுவூர் மகாத்மியமான வடமொழிப் புராணத்தில் பிருஹத்சிரேணி என்று குறிக்கப்பெற்றிருக்கிறது. பிருஹத் + சிரேணி என்றால், பெரிய + கூட்டம் என்பது

பொருள். கூட்டம் அதிகமாகவுள்ள இடத்தைச் சேரி என்பர். பார்ப்பனச்சேரி, ஆயர் சேரி, எயினர்சேரி என்று இலக்கியங்களில் வருதல் காண்க. முனிவர்களான பெரியோர்கள் இங்கிருந்து தவம் செய்ததால் பெருஞ்சேரி எனப்பெயர் வரலாயிற்று. தேவ தாரு மரங்கள் நிறைந்திருந்ததால் தேவதாருவனம், தாருவனம் எனப் புராணங்கள் கூறுகின்றன. மாயூரத் தலபுராணம், கந்த புராணம் இவைகளில் இத்தலம் தாருகவனம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

சிவபெருமான் திருக்கோயில் வீர சோழன் ஆற்றுக்கு வடபால் சோலைகள் சூழ்ந்த இடத்தில் அமைந்திருக்கிறது. ஆலயம் கிழக்குநோக்கியிருக்கிறது. தெற்கு ரத வீதிக்குத் தெற்கே உள்ள பெரிய தெருவை எருஞ்சேரி என்பர். இவ்விடத்தேதான் முனிவர்கள் யாகம் செய்ததாகச் சொல்லப்படுகிறது. திருவாரூர் செல்லும் நெடுஞ்சாலையிலிருந்து இவ்வூருக்கு வரும்வழியில் அடர்ந்த இலுப்பைத் தோப்பு ஒன்றிருக்கிறது. இதைச் சின்னதாருகாவனம் என்று கூறுகின்றனர். இதில் கங்காளநாதர் கோயில் ஒன்றும் உண்டு. இதற்கு சற்று தொலைவில் பெரிய புத்த விக்கிரகம் ஒன்றும் காணப்படுகிறது. அவரை மக்கள் தாருகாவனத்து முனிவர்களில் ஒருவராகக் கொண்டாடுகின்றனர்.

பெருஞ்சேரி கோயிலில் இரண்டு பிரகாரங்கள் உள்ளன. கிழக்கு வாயிலில் மூன்று நிலைக்கோபுரம் இருக்கிறது. பிரகாரங்களில் விநாயகர், முருகர், தென்முகக் கடவுள், சண்டேசுரர் முதலிய சந்நிதிகள் இருக்கின்றன. கலைமகள் இலிங்க வழிபாடு செய்தல், சுந்தரர் பரவையாருடன் எழுந்தருளியிருத்தல் இவை முக்கியமானவை. இங்குள்ள சோமாஸ்கந்தர் திருவுருவம் மிகவும் அழகியது, (படம் காண்க.) கோயிலின் தென்கிழக்கே அம்பிகை சந்நிதிக்கு நேரே தத்தசோழன், அவன் மனைவி இவர்களுடைய உருவங்கள் காணப்படுகின்றன.



பெருஞ்சேரி—கோயிலும் குளமும்

# திருநாராயணபுரம்

குலம்தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள்விசும்பு அருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலந்தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்

**திருநாராயணபுரம்** என்னும் திவ்விய திருப்பதி திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் முசிரிப் பகுதியிலிருக்கிறது. முசிரிக்கு மேற்கே 9 கல் தொலைவில் காவிரிநதிக்கு வட கரையிலிருக்கிறது. திருச்சிராப்பள்ளி கரூர் இருப்புப் பாதையிலுள்ள லாலாபேட்டை, மகாதானபுரம் நிலையங்களிலிறங்கி, காவிரி யாற்றைக்கடந்தும் இத்தலத்தை அடையலாம். மைசூர் மேல்கோட்டையிலிருக்கும் திரு நாராயணபுரம் என்னும் தலம் இதனின் வேறானது. சோழநாட்டுத் திருநாராயண புரத்துக்கு வேதபுரி என்ற பெயரும் உண்டு. ஆதிரங்கம் என்றும் கூறுவர்.



கருடாழ்வார் மண்டபம்

இத்தலத்திறைவனின் திருநாமம் வாகீசு வரர் என்பது. வாக்குவள்ளல் என்று கூறும் மாயூரத்தலபுராணம். அம்பாளின் திருப் பெயர் சுவாந்தர நாயகி என்பர். சுவாமி கர்ப் பக்கிரக விமானம் வட்டவடிவமாக இருப் பது தனிச் சிறப்புடையது. இதை இந்திர விமானம் என்பர். கோயிலுக்கு வெளியே வடகிழக்கில் ஞானதீர்த்தம் என்னும் திருக் குளம் இருக்கிறது. இது வியாழ பகவானால் ஏற்படுத்தப்பட்டது. மாசி பௌர்ணமியன்று தீர்த்த விசேஷம். மார்கழி மாதம் வியாழக் கிழமைகளில் இங்கு நீராடி இறைவனை வழி பட்டால் நல்ல பலன் உண்டென்பர். இந்த நாட்களில் பஞ்ச மூர்த்திகளும் எழுந்தருளித் தீர்த்தம் கொடுப்பது வழக்கம். இதில் சந் திரன், தாரை, கலைமகள், தத்தசோழன் ஆகி யோர் படிந்து பேறு பெற்றார்கள்.

இத்தலத்தைப்பற்றி மாயூரத் தலபுரா ணம், கந்தபுராணம் இவைகளில் காணப் படுவதுடன், வழுவூர் மகாத்மியம் என்ற வடமொழி நூலில் இரண்டு அத்தியாயங் களில் சொல்லப்பட்டிருக்கிறது. வியாழ பகவான் தலயாத்திரையாக வந்து கோயில், குளம் அமைத்தது, வீரபத்திரக் கடவுளால் மூக்கறுபட்ட கலைமகள் வழிபட்டது, தத்த சோழன் என்பான் தேவியை வழிபட்டு அவள் அருளால் பகைவனை யொழித்தது, தாருகவனத்து முனிவர்கள்கொண்ட அகந் தையை இறைவன் பிட்சாடனர் திருக் கோலத்தில் வந்து அடக்கியது முதலிய வைகள் புராண வரலாறுகள்.

இந்த கோயிலில் மூன்றாம் குலோத்துங்க சோழன் (கி. பி. 1177—1218) காலத்துக் கல்வெட்டு காணப்படுகிறது. அதில் உய்யக் கொண்ட சோழவளநாட்டு, திருவழுந்தூர் நாட்டு பெருஞ்சேரியுடைய மாதேவர் வாகீசுவர முடையார் கோயில் என்று குறிக்கப்பெற் றிருக்கிறது. இக்கோயில் 750 ஆண்டுகட்கு முற்பட்ட பழையகோயில் என்று தெரி கிறது.

எம்பெருமான் திருக்கோயில் இயற்கை யெழில் சூழ்ந்த இடத்தில் அமைந்திருக்கிறது. மூன்று நிலைக்கோபுரம் கோயிலின் கிழக்கு வாயிலை அணி செய்கிறது. தென் பிரகாரத்தில் பொன்மண்டபமும், நாச்சியார் சந்நிதியும் உள்ளன. வடமேற்கு மூலையில் ஆண்டாள் சந்நிதி யிருக்கிறது. வடக்குப் பிராகாரத்தில் தலவிருட்சமான வில்வமரம் இருக்கிறது. கோபுரவாயிலைத்தாண்டி உள் நுழைந்ததும் எதிரில் கருடாழ்வார் காட்சி தருகின்றனர். வலப்பக்கம் சேனைமுதலியார் சந்நிதி இருக்கிறது.

எம்பெருமான் திருநாமம் வேதநாராயணப் பெருமாள் என்பது; நாச்சியார் திருப்பெயர் வேதநாயகி என்பதாம். இக்கோயில் விமானமும் வேதவிமானம் என்பர். இறைவன் பாம்பணையில் பள்ளிகொண்டு கிழக்கே திருமுகமண்டலத்துடன் சேவை சாதிக்கிறார். சீதேவி, பூதேவி, பிரகலாதன் இவர்கள் திருவடியருகே இருக்கின்றனர்.

இத்திருப்பதி கருடனால் ஸ்தாபிக்கப் பெற்றதென்று புராணம் கூறுகிறது. பகவான் நரசிங்க உருவம் மாறி நாராயணனுக்ச் சாந்த சொரூபமாகப் பிரகலாதாழ்வானுக்குப் பிரத்தியட்சம் ஆனான். திருநறையூர் அரையர் என்ற மகாபக்தரும் இங்கு பேறு பெற்றதாக வரலாறு ஒன்றுண்டு. அதாவது: ஒரு காலத்தில் திருநறையூர் அரையர் என்னும் அடியவர் குடும்பத்துடன் மைசூர் மேல்கோட்டைத் திருநாராயணபுரம் செல்ல இத்திருப்பதி வழியே வந்தார். வேதநாராயணப் பெருமாளை சிலநாட்கள் இருந்து சேவித்து வந்தார். கோயில் பனை ஓலைகளால் வேயப்பட்டிருந்தது. பிறமதத்தினர் அதற்குத் தீவைத்தனர், அதைக்கண்டஞ்சிய அரையர், தானும் தம் மக்கள் அறுவருமாக இறைவன் திருவுருவத்திற்குப் பங்கம் வராதபடி போர்வைபோல் மறைத்துக் காத்தனர். தீயும் அணைந்தது. பெருமாள் அரையருக்குக் காட்சி கொடுத்து மோட்சம் அருளினர்.



திருநாராயணபுரம் கோயில்

"பிள்ளை திருநறையூர் அரையர் திருமேனியை உபேட்சித்தாற் போல" என்று ஸ்ரீவசன பூஷணம் என்னும் நூலில் குறிக்கப்பெற்றிருக்கிறது. பிள்ளை லோகாசாரியார் இதற்கு விரிவான வியாக்கினம் செய்திருக்கின்றனர். இத்தலத்தின்மேல் அவருக்கு மிகுந்த அபிமானம் உண்டு. ஸ்ரீஇராமானுஜர் மைசூர் மேல்கோட்டைக்குப் போகும்போது இந்தப் பெருமாளை வழிபட்டு, இத்தலத்தில் காவியுடையைக் களைந்து வெள்ளை ஆடை அணிந்து சென்றார் என்று சொல்லப்படுகிறது.

இத்தலத்திற்கு வேததீர்த்தம், குசதீர்த்தம், அசுவத்தீர்த்தம், பதுமதீர்த்தம், திருப்பாற்கடல் என்ற ஐந்து தீர்த்தங்கள் உண்டு. காவிரியாறும் இக்கோயிலுக்குத் தெற்கே ஓடுகிறது.

இங்கே நாள்தோறும் நாலு கால பூசை நடக்கிறது. வைகாசியில் பிரம்மோற்சவம், புரட்டாசியில் நவராத்திரி விழா, மார்கழியில் அத்தியயன உற்சவம், வைகுண்ட ஏகாதசி முதலிய விழாக்களும் மற்றும் சில மாத விழாக்களும் நிகழ்கின்றன. மாசி மகத்திலும், சித்திரை மாதத்திலும் பெருமாள் காவிரியாற்றுக்கு எழுந்தருளுவார். பிரமன், பிரகலாதன், சுக்கிரீவன், கருடன், அனுமான், சோழர், அரையர், முதலியோர் இத்தலத்து எம்பெருமானை வழிபட்டுப் பேறுபெற்றார்கள்.

'வேதநாராயணப்பெருமாள் திருப்பணி மாலை' என்ற நூலில் இக்கோயிலில் முன் காலத்தில் செய்யப்பெற்ற திருப்பணிகளைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. 'வேதநாராயண தோத்திரம்' என்ற கிரந்த நூலும் எம்பெருமான் பெருமைகளை எடுத்தியம்புகின்றது. கோயிலிலுள்ள கல்வெட்டுக்களும், செப்பேடுகளும், பிரம்மாண்ட புராணமும் இப்பதியின் சிறப்புக்களைப் பலபடியாக எடுத்து விளக்குகின்றன.

கல்லெழுத்துக்களில் இவ்வூர் இராஜராஜ வளநாட்டு ஐகரை நாட்டு திருநாராயணபுரம் என்றும், இறைவன் பெயர் திருநாராயண புரத்து நாயனார் என்றும் காணப்படுகின்றன. திருச்சிராப்பள்ளியிலிருந்து அரசாண்ட விஜய ரங்க கிருஷ்ணமுத்துவீர சொக்கநாத நாயக்கரும், நெமலி உடையானும், மகாபலிவாண ராயனும் கோயிலுக்கும், பட்டர்களுக்கும் நிலம் வழங்கியதை அவைகள் அறிவிக்கின்றன. செக்கிறை, தட்டாரப்பாட்டம், ஏர்வரி, இனவரி, ஆள்வரி, இடையர் வரி, மனைவரி முதலிய வரிகள் அக்காலத்தில் விதிக்கப்பெற்றதைக் குறிக்கின்றன. கோயமுத்தூர் மாவட்டத்தில் உடுமலைப்பேட்டைப் பகுதியிலுள்ள கொழுமம் குமரலிங்கத்திலிருக்கும் கரிவரதப்பெருமாள்கோயில் வீரராஜேந்திர சோழன் கல்வெட்டொன்று, "திருநாராயண புரம் எம்பெருமான் வேதநாயகப் பெருமாளின் நந்தவனக் கைங்கரியத்திற்காக நிலதானம்" செய்யப்பட்டதைத் தெரிவிக்கின்றது.

மதிமகிழ மணவாள மாமுனிகள் சுருதியினால்
மனமகிழ வந்த பெருமாள்
மதிளரங் கேச ரிடமணி கிரண
நவரத்தின மகுடந்தரித்த பெருமாள்
விதிவச்சிர பாணிமுதல் முப்பத்து முக்கோடி
தேவர்கள் விதித்த பெருமாள்
விஷ் ணுமணிகிருஷ்ண குலரக்ஷண
[விசக்ஷண
விலக்ஷணமறிந்த பெருமாள்
நால்வேதம் நாற்பத் தெண்ணாயிரம் இருஷிகள்
ஆதரின் வந்த பெருமாள்
சுருதி மதுரகவி யாழ்வார்கள் அனைவரும்
தோத்திர பிரபந்த மிடவே
சுகவசன மனமகிழ வேத நாராயணர்
திருவடிகள் மிக வாழியே

---

அனேகர் தங்களை கலைஞர், (அறிஞர், புலவர்)கள் என்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். அவர்களைக் கலைஞர்கள் என்று அங்கீகரித்தும் இருக்கிறார்கள். ஆனாலும், அவர்களுடைய படைப்புக்களில் ஆத்மாவின் முற்போக்குத் துடிப்பும், பரபரப்பும் கொஞ்சம்கூடக் காணப்படவில்லை.

கடவுள், தாம் அளிக்கின்ற உண்மையான சுதந்திரத்துக்கு விலையாக, பரிபூரண சரணாகதியைத் தான் விரும்புகிறார்; அதற்குக் குறைந்த எதையும் அவர் விரும்பவில்லை. ஒருவன் இவ்வாறு தன்னைப் பரிபூரணமாக அர்ப்பணம் (நிவேதனம்) செய்த மாத்திரத்தில் தான் சகல உயிர்களுக்கு ஊழியன் என்பதை அறிந்து கொள்ளுவான்.

—மகாத்மா காந்தி



தாராசுரம் கோயில் முன் மண்டபம்

# தாராசுரத்து இராசராசேச்சுரம்

[திரு. K. M. வேங்கடராமையா, M.A., B.O.L. திருப்பனந்தாள்]

## முன்னுரை

கும்பகோணத்துக்கு மேற்கே தாராசுரம் என்ற புகைவண்டி நிலையமுளது. அதற்குக் கால் கல்தொலைவில் வடபுரத்தில் கோயிலொன்று புலப்படும். அதனை இந்நாளில் ஐராவதேசுவரர் கோயில் என்று வழங்குவர். ஆனல் முன் நாளில் இக்கோயில் இராசராசேச்சுரம் என்று பெயர்பெற்றிருந்தது; ஊர் இராசராசபுரம் என்று கூறப்பெற்றது.

## இராசராசபுரம் தாராசுரமானது

பண்டைச் சோழ மன்னர்களுக்கு இரண்டாவது தலைநகரமாக விளங்கியது பழையாறை என்ற பெருநகரமாகும். இந்நாளில் காணப்பெறும் பழையாறு, முழையூர், பட்டீச்சுரம், திருச்சத்திமுற்றம், சோழ மாளிகை, ஆரியப்படையூர், புதுப்படையூர், தாராசுரம் முதலிய ஊர்களைத் தன்னகத்துக் கொண்டதாய்ப் பழையாறை முன்னாளில் சிறந்துவிளங்கியது.* முதல் இராசேந்திரன் காலத்தில் இந்நகர் முடிகொண்ட சோழபுரம் என்ற பெயரெய்தி இருந்தது. (271 of 1927). இரண்டாம் இராசராசன் (கி. பி. 1146—1163) பழை

* திரு. பண்டாரத்தார். பிற்காலச் சோழர் சரித்திரம்-பகுதி I. பக்கம் 81—82.



துவாரபாலகர் கல்யாணபுரமிருந்து கொண்டுவந்த வெற்றிச் சின்னம்

யாறைக்கு இராசராசபுரம் என்று பெயரமைத்தான்.† இந்நகரம் இராசராசபுரம் என்று வழங்கியமை மூன்றும் இராசேந்திரனது குத்தாலம் கல்லெழுத்தாலும் (495 of 1907), திருவீழிமிழலைச் சாஸனத்தாலும் (392 of 1907) அறியப்பெறும். ஒட்டக்கூத்தர், 'எண்டிசைத்தேவரும் புகுதும் ராசராசபுரி' என்றும், 'செம்பொன் மாட நிரை இராசராசபுரி' என்றும் தக்கயாகப் பரணியில் குறிப்பிட்டிருக்கிறார். அஃது இந்நாளில் ஒருசிறு பகுதிக்கு மட்டும் பெயராகித் தாராசுரம் என்று சொல்லப்படுகின்றது. சகம் 1408 க்குரிய கல்வெட்டில் (22 of 1908) இராசராசபுரம், இராசராசுரம் என்று காணப்பெற்றது. ஆனால் இக்காலத்துக்கு முன்னைய காலத்திலேயே, மூன்றும் இராசராசனது 33-ம் ஆண்டுக் கல்லெழுத்திலும் (569 of S. I. T. I. Vol. II), மாறவர்மன் ஸ்ரீ வல்லபதேவனது கல்லெழுத்திலும் (23 of 1908) இராராசுரம் என்று மருவியதைக் காணலாம். ராராசுரம் பின்னும் மருவித் தாராசுரம் ஆயிற்று!

† பண்டாரத்தார் பகுதி II-பக்கம் 114—115

## இராசராசேச்சுரம்

இராசராசபுரமாகிய தாராசுரத்தில் எடுப்பிக்கப்பெற்ற கோயில் இராசராச ஈசுவரம் என்ற பெயரால் திகழ்ந்தது. இச்செய்தி, மூன்றும் குலோத்துங்கன் (20 of 1908), வீரபாண்டியதேவன் (21 of 1908), மூன்றும் இராசராச சோழன் (17 of 1908) கல்லெழுத்துக்களால் அறியப்பெறும். தக்க யாகப் பரணியில், "தாரக அண்டம் தொடுத்தணிந்தார், தமக்கிடம் போதத்தமனியத்தால், சீராச ராசீச்சரம் சமைத்த, தெய்வப்பெருமாளை வாழ்த்தினவே" என்று இத் திருக்கோயில் குறிக்கப்பெற்றுள்ளது. இரண்டாம் இராசராசன் தன் பெயர் நின்று நிலவ அமைத்த ஊர்ப்பெயரும் தேய்ந்து தாராசுரம் ஆயிற்று! திருக்கோயில் பெயராகிய இராசராசேச்சுரமும் மறைந்து ஐராவதேசுவரம் ஆயிற்று.

## திருக்குடந்தைப் புராண வரலாறுகள்

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் திருக்குடந்தைப்புராணம் என்ற நூலையும் எழுதியுள்ளார்கள். அதில் தாரேச்சுரப் படலத்தில் தாராசுரத்துக் கோயில் கொண்ட பெருமானைப்பற்றிய புராண வரலாறுகள் தரப்பெற்றுள்ளன. ஒருசமயம் ஐராவதம் என்ற யானை துருவாசமுனிவர் இட்ட சாபத்தால் நீலநிறம் உற்றதாம்; அந்த யானை இத்தலத்துக்கு வந்து அங்குள்ள யமதீர்த்தம் என்ற தீர்த்தத்தில் நீராடிச் சிவபெருமானைப்போற்றிப் பண்டை நிறத்தையடைந்தது; இதனால் இறைவன் ஐராவதேசுவரர் எனப்பெற்றார்; ஊரும் அயிராவதம் நகர் எனப்பட்டது;—இஃது அப்புராணத்துள் கண்ட வரலாறு. இன்னொரு வரலாறு; தாரன் என்னொரு அசுரன் இருந்தான்; தாரன் பூசித்தமையால் தாரேச்சுரம் எனும் பெயர் எய்தியது:

'வலிவி ராயவத் தாரன்பூ சித்திடு மாண்பால்
ஒலிவி ராயதா ரேச்சுரம் எனும்பெய ரோங்கும்'

என்பது திருக்குடந்தைப் புராணப் பாடலாகும்.

### தக்கயாகப் பரணியில்

தக்கனது யாகம் அழிக்கப்பட்டது; உமாதேவியார்க்குப் போர்க்களம் காட்டினன் இறைவன்; தேவி சினம் தணிந்தனள்; இறைவனும் யாவர்க்கும் அருள்புரிந்தார்; இங்ஙனம் எழுந்தருளிய இறைவர் இந்த இராசராசபுரியீசரே என்பர் ஒட்டக் கூத்தர். அத்தாழிசை பின்வருமாறு:—

ஒருமருங் குடைய மூலநாயகியொ
டொற்றை வெள்விடை யூர்திமே
லிருமருங்கு மறை தொழவெழுந்தருளி
இராச ராசபுரி யீசரே.

### கோயிலமைப்பு-இன்றைய நிலை

கோயில் எடுப்பித்த காலத்தில் இது மூன்று திருச்சுற்றுகளையேனும் உடையதாய் இருந்திருந்தல் வேண்டும் என்று தோன்றுகிறது. சோழப் பேரரசு மறைந்த பின் இக் கோயிலைப் புரப்பார் இன்றியொழியப் பிரகாரங்களும் இடிந்தழிந்தன! வெளிக் கோபுரம் ஒன்று தானும் பண்டைப் பரப்பினைத் தெரிந்துக்கொண்டு பொலிவின்றி நிற்கின்றது. இக்கோபுரத்துக்கும் மேல் நிலை ஒன்றுகூட இல்லை. நந்தி மண்டபம் அழகாக இருக்கின்றது. பலிபீடமும் அங்ஙனமே. அதன் மருங்கில் உள்ள படிகள் வேலைப்பாடு உடையன. நல்ல ஒலியும் உடையது அந்தக் கல். அடுத்து உள்ளது கோயிலுக்குள் செல்வதற்குரிய கோபுர வாயில்; வாயிலின் இருமருங்கிலும் உயர்ந்த திண்ணை; ஒவ்வொரு திண்ணையிலும் இரண்டு தூண்கள் உள; தூண்கள் வேலைப்பாடு கொண்டவை. உள்ளே செல்வோம். காண்பது என்ன? கல்லும் முள்ளும் நிறைந்த உட்பிரகாரம்; இடிந்து கிடக்கும் திருச்சுற்றுலை ஒருபுறம்; செல்வதற்கு அச்சம்தரும் திருச்சுற்றுலை மற்ற இரண்டு பக்கங்களிலும்; பாழ்பட்டு, மேல்தளம் ஓரளவு இடிந்தும் செடிகள் வளர்ந்தும் உள்ள முன்மண்டபம். இது ஒரு மாடக்கோயில். இக்கோயிலுக்கு நான்குகால பூசையுண்டு. தஞ்சை அரண்மனை மேற்பார்வையில் உள்ளது. இக்கோயிலுக்கு வடபுறத்தில் சிறிது தொலைவில் அம்மன் கோயில் உள்ளது; அம்மன் கோயில் முன் மண்டபம் நீரில் மிதக்கும் தெப்பம் போன்று காணப்பெறுகிறது என்பர்; அம்மன் கோயில் மிக அழகாகத் திகழ்கிறது.



இரண்டாம் இராஜராஜனும் அவன் மனைவியும்

### இராசகம்பீரன் திருமண்டபம்

சுவாமி கோயிலில் நுழைந்து வலமாகச் சென்றால் எதிர்ப்படுவது இந்த மண்டபமே. இது குதிரைகள் பூட்டிய, சக்கரமுள்ள, தேர்போன்ற அமைப்புடையது இம்மண்டபத்தில் பதினாறு கற்றூண்கள் உள்ளன. இவற்றுள் ஆறு யாளியின் தலைமேல் தூண்கள்; மற்றவை வேலைப்பாடுடையவை; நான்கு தூண்களில் இராசராச கம்பீரன் திருமண்டபம் என்று அந்நாள் எழுத்தில் வெட்டப்பட்டுள்ளது (256 of 1927). இத்திருக்கோயிலை எடுப்பித்த இரண்டாம் இராசராசனுக்கு இராசகம்பீரன் என்ற சிறப்புப் பெயர் அந்நாளில் வழங்கியது. இதனைக் கல்லெழுத்தாலும் (440 of 1912; 44 of 1914), தக்கயாகப்பரணி 774-ம் தாழிசையாலும் அறியலாம்.

என்வே இம்மண்டபத்துக்கு இடப்பெற்றது இரண்டாம் இராசராசனது சிறப்புப் பெயரேயாகும்.

## இறையகம் : அறுபத்துமூவர்

இறையகத்து (கர்ப்பக்கிரகத்து) மேல் விமானம் தஞ்சையிலும், கங்கைகொண்ட சோழபுரத்திலும், திருபுவனத்திலும் இருப்பதுபோல அவ்வளவு பேருருவில் இல்லையெனினும், சிறிய அளவில் அவற்றைப் பெரிதும் ஒத்திருக்கின்றது என்னலாம். இறையகப் புறச்சுவரில், "அடிப்பக்கத்துப் பட்டியல் பகுதிகளில்," வலமேவரின், அறுபத்துமூவரின் வாழ்க்கை வரலாறுகளைத் தெரிவிக்கும் முறையில் உருவங்கள் செதுக்கப்பெற்று இருத்தலைக் காணலாம். அன்னார் பெயர் பெரும்பாலனவற்றில் செதுக்கப்பெற்றுள்ளன; சிலவற்றின்மேல் சிவப்பு நிறத்தால் எழுதப்பெற்றுள்ளன; அவை படித்தற்கு இயலுமாறு நன்றாகத் தெரிகின்றன. நிறத்தால் எழுதியவை, கல்லெழுத்து வெட்டப்பெற்றபொழுதே தீட்டப்பெற்றனவா என்பது ஐயத்துக்கு இடம் தருகிறது. எண் 47 அய்யடிகள் காடவர்கோன் என்பது இந்நாளைய எழுத்துருவிலேயே அமைந்துள்ளது கவனிக்கத்தக்கது. [சிவப்பு நிறத்தில் காணப்பெறுவனவற்றைக் கனத்த எழுத்திலும்†, பெயர் எழுதப்பெறாமலோ, முற்றும் அழிந்தனவற்றையோ* பிறை வளைவிலும் கீழே தரப்பெற்றுள்ளன; எஞ்சியவை கல்லெழுத்தாக உள்ளன.] அவை வருமாறு:—

1. **தில்லைவாழந்தணர்**†
2. **திருநீலகண்டர்**†
3. **இயற்பகை**†
4. இளையான்குடிமாறர்
5. (மெய்ப்பொருளார்)*
6. (விறன் மிண்டர்)*
7. (அமர்நீதி)*
8. (எறிபத்தர்)*
9. (ஏனாதி நாதர்)*
10. (கண்ணப்பர்)*
11. **குங்குலியக் கலயனர்**†
12. (மானக்கஞ்சாறர்)*
13. (அரிவாட்டாயர்)*
14. (ஆனாயர்)*
15. (மூர்த்தியார்)*
16. **(முருகாண்டார்)**†
17. (உருத்திர பசுபதியார்)*
18. திருநாளைப் போவார்
19. திருக்குறிப்புத் தொண்டர்
20. ஸ்ரீ சண்டேசப் பிள்ளையார் கதை
21. திருநாவுக்கரசாண்டார் கதை
22. (குலச்சிறை) *
23. (மிழலைக் குறும்பர்)*
24. (பேயார்)*
25. (அப்பூதி)*
26. (நீலநக்கர்)
27. நமிநந்தியடிகள்
28. ஆளுடையபிள்ளையார்
29. ஏயர்கோன் கலிக்காமாண்டார்
30. (திருமூலர்)*
31. (தண்டியடிகள்)*
32. (மூர்க்கர்)*
33. சோமாசி மாறனர்†
34. சாக்கியனர்
35. சிறப்புலியாண்டார்
36. சிறுத்தொண்டாண்டார் கதை
37. சேரமான்பெருமாள் கதை
38. கணநாதாண்டார் கதை
39. கூற்றுவனர்
40. பொய்யடிமையில்லாதவர்
41. புகழ்ச் சோழனர்
42. நரசிங்க முனையரையர்
43. அதிபத்தர் கதை
44. கலிக்காமாண்டார் கதை
45. கலியனர்
46. சத்தியாண்டார்
47. ஐயடிகள் காடவர்கோனர்
48. கணம்புல்லாண்டார்
49. காரியார்
50. நெடுமாறனர்
51. வாயிலார்
52. முனையடுவார்
53. கழற்சிங்கனர்
54. இடங்கழியாண்டார்
55. செருத்துணையாண்டார்
56. புகழ்த்துணையார்
57. கோழ்ப்புலியாண்டார்
58. பத்தராய்ப் பணிவார்
59. பரமனையே பாடுவார்
60. (சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்)*
61. திருவாரூர் பிறந்தார்
62. முக்காலும் திருமேனி தீண்டுவார்

63. முழுநீறு பூசிய முனிவர்
64. அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்
65. பூசலார்
66. பாண்டிமாதேவி
67. நேசாண்டார்
68. கோசிங்க பெருமாள்
69. திருநீலகண்டப் பெரும்பாணனர்
70. சடையனர்
71. இசை ஞானியார்
72. உடைய நம்பி எழுந்தருளுகிருர்
73. ஆவணஓலை காட்டினபடி
74. உடைய நம்பியை ஆண்டுகொண்டருளினபடி
75. உடைய நம்பிக்கு ஒல்லென்றருளினபடி
76. உடையநம்பியை வேடர் பறித்தருளினவிடம்
77. திருமுருகன் பூண்டியில் பெற்றபடி
78. அவிநாசியாண்டார் முதலைவாய்ப் பிள்ளை

எறிபத்தர்கதை மூன்று பகுதிகளில் உள்ளது; அரிவாட்டாயர் சிற்பம் சிதைந்துளது; உருத்திரபசுபதியார் மார்பளவு நீரில் இருப்பதாகக் காணப்பெறுகிருர்; திருநாவுக்கரசர் திருவடி சூட்டப்பெற்ற கதை செதுக்கப்பெற்றுள்ளது; குலச்சிறையார் வரலாறு, புனல்வாதம்--கழுவேற்றல் ஆகிய இருபகுதிகளாக வுளது; பேயார் தலையினுல் நடக்கிருர்; சிற்பம் சிதைந்துளது; சேரமான் பெருமாள் வண்ணுளை வணங்கும் காதையால் குறிக்கப்பெற்றுள்ளார்; 57-கோட்புலியார் எனற்பாலது கோழ்ப்புலியார் என்றுளது: பரமனையே பாடுவார் கையில் தாளம் வைத்துள்ளனர்; 62-முப்போதும் திருமேனி தீண்டுவார் என்பது முக்காலும் திருமேனி தீண்டுவார் என்றுளது; சிவலிங்க பூசை செய்வதுபோல் மூவர் உளர்; கோசிங்கபெருமாள் என்பது கோச்செங்கட் சோழரைக் குறிக்கும்; 72-'உடையநம்பி எழுந்தருளுகிருர்' என்பது முதல், 78- 'அவிநாசியாண்டார் முதலைவாய்ப் பிள்ளை' என்பதுவரையுள்ளவை சுந்தரருடைய வரலாற்றை நிரலே குறித்தன



பலிபீடம் - ஓசைப் படிகள்

வாகும்; இதனுள் 75-'ஒல்லென் றருளினபடி' என்பது சுந்தரர்பொருட்டுத் (திருவையாற்றுக்கருகில்) காவிரி வெள்ளம் விலகியதைக் குறிப்பிடுவதாக அமைந்துளது, இங்குக் கண்ட நாயன்மார்கள் வரிசைமுறை சுந்தரர் அருளிய திருத்தொண்டத் தொகையிற்கண்ட வரிசையேயாகும் என்பது தெளிவு.

இவ்விரண்டாம் இராசராசனுக்குத் தந்தையாகிய இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் வாழ்ந்தவரே சேக்கிழார் என்று ஒருசாரார் கூறுவர். அங்ஙனமாயின் நாயன்மார்களுடைய வரலாற்றை அறிவிக்கும் நூலாகிய பெரியபுராணம் எழுதப்பெற்ற காலத்துக்கு மிக அண்மைக் காலத்திலேயே, நாயன்மார்களுடைய சரிதங்களை அறிவிக்கும் வகையில், இத்திருக்கோயிலில், இச்சிற்பங்களைச் செதுக்குவித்துக் கண்ணுரைக் கண்டும், காணச்செய்தும் மகிழ்ந்தனன், இந்த இராசகம்பீரன் என்பது அறியத்தகும்.

## திருப்பனந்தாளில்

திருப்பனந்தாள் திருத்தாடகை யீச்சரத்து வலது பக்கத்து உட்புறச் சுவரில் மூன்று வரிசைச் சிற்பங்கள் இருத்தலைக் காணலாம். அவற்றுள் பெரும்பகுதி சுப்பிரமணிய சுவாமி சன்னிதி பின்புறச் சுவரால் மறைக்கப் பட்டுள்ளது. இச்சிற்பங்களும் திருத்தொண்டத் தொகை வரிசையிலேயே செதுக்கப்பெற்றுள்ளன என்பதில் ஐயமில்லை; காணப்பெறும் சிற்பங்களும் பின்வருவனவே ஆகும் என்பதிலும் சிறிதும் சந்தேகம் இல்லை.* அவை வருமாறு :—

முதல்வரிசை: 1. தில்லைவாழந்தணர்; 2. திருநீலகண்டர்; 3. இயற்பகையார்; 4. இளையான்குடிமாறர்; 5. மெய்ப்பொருள ர்; 6. விறன்மிண்டர் (Built in).

இரண்டாம் வரிசை: 1. திருக்குறிப்புத் தொண்டர்; 2. சண்டேசுவரர்; 3. திருநாவுக்கரசர்; 4. குலச்சிறை; 5. பெருமிழலைக்குறும்பர்; 6. பேயார்; 7. அப்பூதியடிகள்.

மூன்ருவது வரிசை: 1. கலியனர்; 2. கழற்சத்தியார்; 3. ஐயடிகள் காடவர்கோன்; 4. கணம்புல்லர்; 5. காரியார்; 6. நெடுமாறர்; 7. வாயிலார்; 8. முனையடுவார்; 9. கழற்சிங்கர்; 10. செருத்துணையார்.

இங்குக்கண்ட சண்டீசர் சிற்பம் சிறப்பாயமைந்துளது; திருநாவுக்கரசர் உழவாரப் படையுடன் திகழ்ந்துளார்; பேயார் வடிவம் நன்ருகவுளது; இச்சிற்பங்களின்மேல் எழுத்துக்கள் எழுதப்பெறவில்லை என்பது அறிதல் தகும்.

## பிற சிற்பங்கள்

தாராசுரத்துக் கோவிலுக்குள் சென்றதும் முதலிற் காட்சியளிப்பது, மூன்று தலைகளுடனும் எட்டுத் திருக்கைகளுடன் அமைந்துள்ள அர்த்தநாரி வடிவமாகும். இராசகம்பீரன் திருமண்டபப் படிகளுக்கு அருகில் நின்ருல் அகத்தியரைக் காணலாம். 'இராசகம்பீரன் திருமண்டபம்' என்று எழுதப்பெற்ற முதல்தூணில் இரண்டு அங்குலம் விட்டமுள்ள ஒரு வட்டத்தில் நர்த்தன விநாயகரும், இன்னெரு பக்கத்தில் அதே அளவில் பிட்சாடனரும் காட்சியளிக்கிருர்கள். அங்கிருந்து முன்மண்டபத்துக்குள் சென்றதும் அன்னபூரணியைக் காணலாம். இராசகம்பீரன் மண்டபத்துக்கு மேற்கில் சரபமூர்த்தி ஆலயம் காணப்பெறுகிறது. (இது மண்டபச் சுவரை யொட்டியேயுளது; சரபமூர்த்தி உருவம் கோயிற்சுவரிலேயேயுள்ளது.) இங்குள்ள நரசிங்கத்துக்கு 8 கைகள் உள்ளன. திருபுவனத்தில் சரபமூர்த்தி ஆலயம் தனியே கட்டப்பெற்றுள்ளது; அங்கு அவ்வாலயம் தோன்றுவதற்கு முன்னரே, தாராசுரக் கோயிலில் சரபமூர்த்தி அமைக்கப்பெற்ருர் என்பது அறிதல் தகும்.

## திருச்சுற்று மாளிகையில்

இங்கு அடிப்பக்கத்துப் பட்டியல் பகுதிகளில் சிறந்த சிற்பங்கள் சிறிது சிறிதாகச் செதுக்கப்பெற்றுள்ளன. ஒருதலை—நான்கு புறங்களிலும் இவ்விரண்டு கால்கள்—இங்ஙனம் ஒரு நடனமாதின் உருவம். இருவர்—ஒருவர்கை இன்னெருவரின் காலை இறுகப் பிடித்து ஒரு வட்டத்தை அமைத்துக் கொள்ளுதல்—இன்னெருகால் நேர்கோணமாக வட்ட வளைவுக்குள் நீட்டப்பெற்று ஒருவனுடைய காலை இன்னெருவன் இறுகப் பிடித்தல்—இங்ஙனம் அமைந்து ஒரு மனிதச் சக்கரம்—இம் மனிதச் சக்கரம் உருண்டோடும்

*திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் வித்துவான் திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்களும் யானும் இச்சிற்பங்களை மும்முறை கண்டு, ஆய்ந்தபிறகே இங்குத் தரப் பெற்றன.

**போதும்!!** ஒரு உண்மைத் துறவி—அவரைப் பலவந்தப்படுத்தற்கு ஒருமாது இழுக்கிருள்—ஒருபெண் இங்ஙனம் பலவந்தப்படுத்துவதால், 'அவள் பெண் அல்ல, கழுதை' எனலாம் அன்றே?—இதனைச் சொல்லாமல் உணர்த்த, இழுக்கும் மாது **கழுதைத்தலை** உடையவளாக இருக்கிருள்! ஒருவன் **புலியோடுபோர்** செய்வதாகச் சிற்பமொன்றுளது. **வாலிசுக்கிரீவன் போர்**—இராமன் மறைந்து அம்பு எய்தல்—வாலி அம்பு தைத்துவிழுந்து கிடத்தல்—வாலியின் மனைவி (பல குரங்குகள் புடைசூழ) அழுதல்—இங்ஙனம் ஒரு செதுக்குவேலை. நடராசர் மண்டபத்துக்குச் செல்லும் படிக்கட்டின் பக்கப்பகுதியில் அழகொழுகும் ரிஷபகுஞ்சரம்; யானையும் காளையும் ஒன்ருேடொன்று இடைமிடைந்த உருவமே இங்குக் காணப்படுவது; ஒருபுறத்தினின்று பார்த்தால் காளையின் உருவமும், இன்னொரு புறத்தினின்று பார்த்தால் யானையின் உருவமும் நன்கு புலப்படும். இன்னும் பலவுள; நேரில் பார்த்தே சிற்பத்திறனை நுகரலாம்.

## நூற்றெண்மர் உருவங்கள்

மேற்குறித்த ரிஷபகுஞ்சரமுள்ள படிக்கட்டுகளினின்று வடக்குநோக்கிப் பார்த்தால் திருச்சுற்று யாளிகையின் சுவரில் 108 உருவங்கள் செதுக்கியிருத்தலைக் காணலாம். எல்லாவுருவங்களும் ஒரே அளவில் அமைந்துள்ளன: சிலர் தாடியுடையராக உள்ளனர்; சிலர் மழித்த தலையினர்; தலையில் சிலர் உருத்திராக்க மாலையுடையவர்; யாவரும் கூப்பிய கையினர். ஒவ்வொரு உருவத்துக்கு மேற்பகுதியில் அவ்வுருவத்தின் பெயர் அந்நாளைய தமிழ் எழுத்தில் வரையப்பெற்றுள்ளது. பல அழிந்துவிட்டன; படிக்கத்தக்கனவாய் உள்ளனவை பின்வருமாறு:—

21. ......நாயகரான அகோர சிவர்.

23. தத்தனூருடையார் திருச்சிற்றம்பலமுடையரான ...சிவர்.

24. நாங்கூருடையார் மாதேவரான தத்புருஷ சிவர்.

25. நாங்கூருடையார் செய்ய பாதத்தரான அகோரசிவர்.

26. நல்லாவூர் பொன்னம்பலத்தாரான ஈசான சிவர்.

33. ஆயம்பூருடையாரான சதாசிவர்.

34. காவர மங்கலமுடையாரான சந்திரசேகரரான ஆனந்த சிவர்.

35. ஐயூருடையார் திருமறைக்காடுடையாரான ஈசான சிவர்.

37. அயற்காடுடையார் காலம்பெற உழுதாரான தத்புருஷ சிவர்.

38. ஆலத்தூர் உடையார் புற்றிடங்கொண்டாரான தர்ம்மசிவர்.

39. வேற்குடையார் காலம்பெற உழுதாரான தத்புருஷசிவர்.

40. கொற்றங்குடையார் சிவகருணையரான ஈசான சிவர்.

47. நாட்டியத்தான்குடி ............... ஈசான சிவர்.

50. அண்ண வாயிலுடையார் தில்லைக்கூத்தரான அகோர சிவர்.

52. கழுமலமுடையார் புற்றிடங்கொண்டாரான ............. சிவர்.

54. மண்ணிக்குடையார் மாதேவரான வைராக்கிய சிவர்.

55. வடுகக்குடையார் ஆநந்தக்கூத்தரான ஈசான சிவர்.

59. கொமருடையார் தில்லைக்கூத்தரான அகோர சிவர்.

61. எத்....குடையார் மாதேவரான ஹ்ருதய சிவர்.

62. களத்தூருடையார் புற்றிடங்கொண்டாரான... சிவர்.

63. காஞ்சிரம்பாடியுடையார் ஆவுருடையாரான......

65. அயிற்காடுடையார் த...... வேந்தரான தத்புருஷ சிவர்.

67. சேமங்கலமுடையார் பொன்னம்பலக்கூத்தரான சத்யசிவர்.

68. ஒக்கூருடையாரான முத்திக்குணமகரான ஹ்ருதய சிவர்.

70. மயிலாப்பூருடையார் கருமூலகாரணரான சதாசிவர்.

---

நம்மைச் சுற்றிலும், நமக்குள்ளேயும் உள்ள ஒவ்வொரு அணுவிலும் கடவுள் இருக்கிருர். ஆனல், தாம் விரும்புகிறவர்களுக்குத்தான் அவர் காட்சி தருகிருர் இந்த உரிமையை அவர், தம்முடைய உரிமையாகவே வைத்துக்கொண்டிருக்கிருர்.

—மகாத்மா காந்தி

97. நாவலூருடையார் திருநாகீஸ்வர முடையாரான அகோரசிவர்.

100. ............பொன்னம்பலக்கூத்த ரான தர்மசிவர்.

101. வல்லங்கிழாரான தேவகள் தேவ ரான அகோர்சிவர்.

102. குறுக்கை உடையார் ஆதித்த தேவரான ஈசானசிவர்.

103. குடவாயில்கிழார் உமாபதி ஆழ் வாரான ஈச்வரசிவர்.

104. புழுதிமாக்கிழார் அருமொழி தேவரான தர்ம்ம சிவர்.

105. நெடுமணலுடையார் சிற்றம்ப லக் கூத்தரான ஹ்ருதய சிவர்.

107. பெருவேளூர் கிழவர் திருச்சிற் றம்பலமுடையாரன தர்ம்மசிவர்.

108. மழவச்ச உடையார் திருச்செம் பொன்பள்ளி யுடையாரான......சிவர்.

[இவற்றைத் திருப்பனந்தாள் செந் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியரான வித்து வான் திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள் நேரில் பார்த்துப் படியெடுத்து உத வினார்கள்.]

தஞ்சாவூர் இராசராசேச்சரத்தில், முத லாம் இராசராசன் நியமித்த நாற்பத்தெண் மர் பிடாரர்கள் (திருப்பதிகம் விண்ணப்பம் செய்பவர்) பெயர்களும் மேற்குறித்த பெயர்கள்போலவே அமைந்துள்ளன; அவர் களைப்போலவே முதலில் ஊர்ப்பெயரும் இறுதியில் 'ஈசானசிவர், தர்மசிவர்' என்று தீக்ஷாநாமமும் குறிப்பிடப் பெற்றுள்ளது. ஆகவே இத் திருக்கோயிலில் இறைவன் திரு திருமுன்னர் திருப்பதியம் விண்ணப்பிக்க (தேவாரம் ஓதுவதற்காக) நூற்றெண்மர் நிய மிக்கப்பட்டனர் என்றும், தஞ்சையில் பெயர்கள்மட்டும் தருமசாஸனக் கல்லெழுத் தில் அமைந்திருக்க, இத்திருக்கோயிலில் உரு வங்களையும் செதுக்குவித்துப் பெயர்களையும் பொறிக்கச் செய்தான், இவ்விரண்டாம் இராசராசன் என்றும் உய்த்துக்கொண் டுணரலாம்.

## வெளிக்கோபுரம்

மேல்நிலைகள் இல்லாது, செடிகொடிகள் முளைத்துப் பாழடைந்து கிடக்கும் வெளிக் கோபுரம் முன்னாளில் பிரதான கோபுரமாக இருந்திருத்தல் வேண்டும். இக்கோயிலில் ஒரு கருங்கல்லில் கண்ட கல்லெழுத்தொன்று (27 of 1908) "ஈகை மூவேந்திரையர் திருக் கோபுரம்" என்பது இக்கோபுரத்தின் பெயர் என்று கூறுகிறது. இக்கோபுரத்தில் மாடங்கள் பலவுள்ளன; முன்னாளில் ஒவ் வொரு மாடத்திலும் ஒவ்வொரு சிலை இருந் திருத்தல்வேண்டும்; இந்நாளில் பெரும்பாலன காணப்பெறவில்லை; ஓரிரண்டுதானும் உருத் தெரியாதவாறு சிதைந்துள்ளன. எனினும் அம்மாடங்களின் மேற்பகுதியில் ஒவ்வொன் றிலும் இருந்த உருவத்தின் பெயர் எழுதப் பெற்றுள்ளது (Para 68 of ARE for 1908). அவை வருமாறு:—

வடபுறம்:—1. ஆதிசண்டேசுவரர்; 2. கங்காதேவி; 3. தும்புருநாரதர்; 4. வைச்ரவ (ணன்); 5. சந்திரன்; 6. மஹாசாஸ்தா; 7. நாகராஜா; 8. வாயு.

மேற்புறம்:—9. ஹ்ரில்லேகாதேவி; 10. ருத்ரா(ணி); 11. வைஷ்ணவி; 12. ப்(ரா) ஹ்(ம)ாணி; 13. வருணன்; 14. ஸ்ரீ நந்தி கேச்வர (தேவர்); 15. பெரியதேவர்; 16. சாந்த்யாதீத சக்தி; 17. சாந்தி சக்தி; 18. வித்யா சக்தி; 19. பிரதிஷ்டா சக்தி: 20. நிவ்ரித்தி சக்தி;

தென்புறம்:—21. தக்ஷப்ரஜாபதி; 22. யமுனாதேவி; 23. ரதி; 24. காமதேவன்;

கீழ்ப்புறம்:—25. அக்னிதேவர்; 26. அகஸ்த்யதேவர்; 27. ஸ்ரீதேவி; 28. துர்கா தேவி; 29. தேவேந்த்ரன்; 30. பத்மநிதி; 31. சூர்யதேவர்; 32. சுப்ரஹ்மண்யதேவர்; 33. க்ஷேத்ரபாலர்; 34. ஸரஸ்வதி; 35. விச்வ கர்மா; 36. ஈசானதேவர்.

இவற்றுள் வைச்ரவணன் (4) என்பது குபேரனைக் குறிக்கும். பெரியதேவர் (15) என்பது இரண்டாம் இராசராச சோழனு டைய தந்தையாகிய இரண்டாம் குலோத்துங்க

எல்லா உண்மைக்கலையும் கல்வியுணர்வும் தன்னை (ஆத்மாவை) அறியத் துணை புரியவேண்டும். ஆத்மா தன்னை அறிவதற்கு எவ்வளவு தூரம் உதவ முடியுமோ அவ்வளவு தூரமே மனிதனுடைய கலா புடைப்புக்கு மதிப்புண்டு.
—மகாத்மா காந்தி

சோழனுதல் கூடும்; இவரே தக்கயாகப்பாணி 773-ம் தாழிசையில் பெரிய பெருமாள் என்று குறிக்கப் பெற்றுள்ளார். 16 முதல் 20 வரையுள்ளவை ஐந்து கலைச் சக்திகளாம்; அருட் சக்தி உயிர்களை உய்விக்கக் கலைவடிவம் கொள்ளும்; உயிர்களுக்கு விடுதலையளிக்கும் பொழுது நிவர்த்திக்கலை ஆகின்றது: அவ் விடுதலையை நிலைத்திருக்கச் செய்யப் பிரதிட்டாகலை ஆகின்றது; உண்மைப் பொருளை உணர்த்துங்கால் வித்தியா கலையாகத் திகழ்கிறது; உணர்ந்த பொருளில் ஒடுக்கும் பொழுது சாந்திகலை எனச் சார்கிறது; அடங்கிய உயிர், அமைதி பெற்றுளேம் என அறியும் அறிவையும் கடந்து அமையும்பொழுது சாந்தியா தீதகலை எனத் தழைக்கின்றது* எட்டுத்திக்குப் பாலகர்களுள் இதில் அறுவர் மட்டுமே குறிக்கப் பெற்றுள்ளனர்.

## வெளியே எடுத்துச் செல்லப்பெற்றவை

அரசன் அரசி உருவம்: கோயில் கிழக்குத் திருச்சுற்று மாளிகையின் வடபாகத்தில் இக்கோயிலை எடுப்பித்த சோழ அரசனுகிய இரண்டாம் இராசராசன், அவனுடைய கோப்பெருந்தேவி, ஆகிய இருவருடைய உருவச்சிலைகள் இருந்தன. (—சோழர் கோயிற்பணிகள்—J. M. S.-பக்கம் 107). அவ்வுருவச் சிலைகள் இந்நாளில் தஞ்சைக் கலைக்கூடத்தில் வைக்கப்பெற்றுள்ளன.

துவார பாலகர்: இக்கோயில் கோபுரத்தின் இடதுபக்கத்தில் துவாரபாலகர் உருவம் ஒன்று வைக்கப்பெற்றிருந்தது. அவ்வுருவத்தின் பீடத்தில், "ஸ்வஸ்திஸ்ரீ உடையார் ஸ்ரீவிஜய ராசேந்திரதேவர் கல்யாணபுரம் எறிந்து கொடுவந்த துவாரபாலர்" என்று அந்நாளைய எழுத்தில் எழுதப்பெற்றுள்ளது (24 of 1908). இதிற் குறிக்கப்பெற்ற விஜய ராஜேந்திரன், முதலாம் இராசாதி ராசனே யாவன் என்று ஆய்வாளர்† கருதுவர் (Para 56 of ARE for 1908). முதல் இராசாதி ராசனுல் ஏறத்தாழ கி. பி. 1035-ல் கல்யாண புரத்தினின்று வென்று கொண்டுவரப்பெற்ற இவ்வுருவம், (கண்கவர் வனப்புடன் இன்றும் திகழ்கின்றமையின்) இதனைத் தான் எடுப்பித்த இத்திருக்கோயிலில் இரண்டாம் இராசராசன் அமைத்தனன். இவ்வுருவம் இற்றைநாளில் தஞ்சைக் கலைக்கூடத்துக்கு வருபவரை வரவேற்றுக்கொண்டு இருத்தல் அறியத்தகும்.

பிக்ஷாடனர்: திருச்சுற்று மாளிகையில் நடராசர் கோயிலுக்கு அருகில் பிக்ஷாடனர் உருவமும் விரக வேதனையிலகப்பட்ட தாருக வன முனிவருடைய பத்தினிகளின் உருவங்களும் அமைக்கப்பெற்றிருந்தன. அவை இப்பொழுது அங்கு இல்லை.

## திருபுவனக் கல்லெழுத்து

திருபுவனம், தஞ்சை மாவட்டத்தில் திருவிடைமருதூர்க்கு அருகிலுள்ள தலம். இத்தலத்துக் கம்பஹரேசுவரர் கோயிலில் கண்ட வடமொழிச் சாஸனம் (190 of 1907) மூன்றும் குலோத்துங்க சோழனுடைய திருக்கோயில் திருப்பணிகளை விவரிக்கின்றது. அதில் 7-ம் சுலோகத்தின் மொழிபெயர்ப்புப் பின்வருமாறு:—

[காஞ்சீபுரத்திலே] ஏகாம்பரேசருடைய அழகுபொருந்திய கோயிலையும், மதுரையில் ஆலவாயாருடைய கோயிலையும், [திருவிடைமருதூர்] மத்தியார்ஜுனத்தின் கோயிலையும், [தாரா சுரத்திலுள்ள] ஸ்ரீராஜராஜேச்சுர ஆலயத்தையும், [திருவாரூரிலுள்ள] வன்மீகநாதருடைய கோயிலையும், இந்நிலவுலகில் பொன்மயமாக விளங்கும்படி அமைத்தான்...... (S. I. T. I. Volume II பக்கம் 950).

இதனுல் மூன்றும் குலோத்துங்கனுல் தாராசுரத்து இராசராசேச்சுரம் பல சிறப்புக்களை அடைந்தது என்பது அறியக்கிடக்கின்றது.

## முடிப்புரை

இத்தகைய சிறப்பு வாய்ந்த திருக்கோயில் சிறந்தமுறையில் பாதுகாப்பார் இன்றித் தவிக்கிறது. இத்திருக்கோயில் திருப்பணி செய்து பண்டைநிலையை எய்துவித்தல் சைவர்தம் முதற்கடமையாகும்.

* கந்தர் கலிவெண்பா—விரிவுரை — குகஸ்ரீ பு. பா. ரசபதி—பக்கம் (118—119).

† திரு. பண்டாரத்தார்: சோழர் வரலாறு—பாகம் I, பக்கம் 197.

கடவுள் நம்முடைய கற்பனைப் படைப்பு என்று சிலர் கருதுகிருர்கள். அவர்களுடைய கருத்து உண்மையென்ருல், அப்புறம் உலகத்தில் எதுவுமே உண்மையன்று. —மகாத்மா காந்தி

# நவதிருப்பதி அநுபவம்

திரு. K. பட்சிராஜன், B.A., B.L.

## தொலைவில்லிமங்கலம்

நம்மாழ்வார் பராங்குசநாயகியாகி இறைவனை நாயகனுகக் கொண்டு பாடிய பதிகங்கள் பல. அதேபோலத் தன் தன்மையை மற்ருெருவர் வாயிலாக வெளியிடும் பதிகங்களும் பல. தன் தன்மையைத் தாய் பேசுவது போலவும் தோழி பேசுவது போலவும் அமைவன இப்பதிகங்கள். அப்படி ஆழ்வார் தன் தன்மையைத் தாயாருக்குத் தோழிகூற்ருகக் கூறுவது 'துவளில் மாமணி மாடம்' என்ற பதிகம். தொலைவில்லிமங்கலம் என்ற இரட்டைத் திருப்பதியிலுள்ள இரு பெருமான்களையும் ஸேவித்து அதே மோகமாய் மயங்கிக்கிடக்கும் மகளின் தன்மையைப்பற்றித் தாய்மார்கள் நாயகியின் தோழியிடம் கூறிப் பரிகாரம் வினவ தோழி அவர்களுக்கு விடையிறுப்பதாக அமைந்தது பதிகம்.

இப்பதிகத்துக்கு முன்னையது 'குரவை ஆய்ச்சியர்' என்னும் பதிகம். அப்பதிகத்திலே ஆழ்வார் கிருஷ்ணுவதாரத்தில் எம்பெருமான் செய்த ஆனைத்தொழில்களையும் ஆச்சர்ய சேஷ்டிதங்களையும் மனத்திலே நினைந்து அனுபவிக்கிருர். அவனுடைய திருவிளையாடல்களையே நினைந்தும் பேசியும் பொழுது போக்கிய எனக்குக் குறையேது நிகர் எவ்வுலகத்துண்டு, நோவேது, வேண்டுவதேது, இகல் ஏது, மனப்பரிப்பு ஏது, இவ்வுலகில் நிகர் ஏது, கலக்கமேது, மண்மிசை மாறு ஏது என்று தன்னைத்தானே வியக்கின்ருரோ என்று சொல்லத்தக்க முறையில் தன் மனம்பெற்ற மகிழ்ச்சியின் நிறைவை வெளியிட்டுக் கடைசியாக

மண்மிசைப் பெரும்பாரம் தீர
ஓர்பாரதமா பெரும்போர்
பண்ணி மாயங்கள்செய்து சேனையைப்
பாழ்பட நூற்றிட்டுப்போய்
விண்மிசைத்தன தாமமேபுக
மேவிய சோதி தன்தாள்
நண்ணி நான் வணங்கப்பெற்றேன்
எனக்கார் பிறர் நாயகரே

என்று அந்த ஜோதி சொரூபனுன க்ருஷ்ணனுடைய திருவடிகளைக் கிட்டிப் பணிசெய்யும் கைங்கர்ய சாம்ராஜ்யத்தைப் பெற்றுப் பூரித்திருக்கிற எனக்கு வேறு எவர் நாயகர்? என்று முடித்தார். அந்த அனுபவம் பூராவும் மானஸிகமாகவே யிருந்தது. அது பற்ருதே வெளிப்படி அவனைக்கிட்டிப் பணிசெய்து அனுபவிக்கவேணும் என்ற அவா பிறந்தது. அந்த அவாவே நினைவாய்த் துடிக்கும் நாயகியை (ஆழ்வாரை) அவள் தாய்மார்கள் தங்களோடு தொலைவில்லிமங்கலத்துக்கு அழைத்துச்சென்று பெருமாள் ஸேவை பண்ணிவைத்தால் திருமென்று கொண்டு அவளைத் தொலைவில்லிமங்கலம் கொண்டுபோய் தேவபிரானையும், அரவிந்தலோசனனையும் ஸேவிக்கப் பண்ணினர்கள். அவர்கள் செயல் உள்ளே கனிந்துகொண்டிருக்கும் நெருப்புக்குமேலே நெய்வார்த்தது போலவாகி அவள் நோய் முறுகி அதுவரை வாய்திறவாதிருந்தவள் அவன் பெயரைக் கூவிப் புலம்ப ஆரம்பித்தாள். தாய்மார்கள் பயந்து செய்வதறியாராய் நாயகியின் தோழியைக்கூவி நீதான் இப்பெண்ணை எங்களை விட நன்ருக அறிந்தவள். இப்பெண்ணுக்கு வந்த நோய்க்கு மருந்துதான் ஏது. இந்த தசையிலிருந்தும் இவளை மீட்க வழி என்ன? என்று வினவினர்கள். தோழி இவளுடைய மையல்நோயை நீங்களே உங்கள் செயலால் வளர்த்துவிட்டீர்கள். முன்பே அது தீராவியாதியாயிருந்தது. இப்போது இன்னும் முற்றிவிட்டது. இந்த தசையில் அவளை மீட்க நினைப்பது முடியாத காரியம். அவள் உயிருக்கு தாரகம் இந்த அனுபவம்தான். ஆகவே இனி உங்கள் மகளாக மீண்டு வரு

வாள் என்ற ஆசையை விடுங்கள். நீங்களும் இதன் காரணமாக அவளை வெறுக்காமல் அவள் ஆசை நிறைவேற உதவிசெய்து அவளை வாழ்வியுங்கள் என்கிருள் மகள் நிலைமையை அவள் தாயாருக்குத் தோழி சொல்லுகிருள். இதற்கு தாரணமாக இலக்ஷ்மணன் தன்மையைப் பரதனுக்கு குகப்பெருமான் சொன்னதை ஆசார்யர்கள் காட்டுவர்.

''அல்லையாண்ட மைந்தமேனி
யழகனும் அவளும்துஞ்ச
வில்லை யூன்றியகை யோடும்
வெய்துயிர்ப்போடும் வீரன்
கல்லையாண் டமைந்த தோளாய்
கண்கள்நீர் சொரியக்கங்குல்
எல்லைகாண்பளவும் நின்ருன்
இமைப்பிலன் நயனம்''

என்று இலக்ஷ்மணனோடு ஒன்ருய்ப் பிறந்து வளர்ந்த பரதனுக்கு இலக்ஷ்மணனை ஓரிரண்டு நாள்மட்டுமே அறிந்த குகன் கூறினனல்லவா ?

மானஸீகமாக அனுபவித்த கிருஷ்ணுனுபவம் முறுகி விளைத்த அவத்தையை ஆழ்வார் தோழிபேச்சாகக் கூறும் இப்பதிகத்தைப்பற்றி ''கிருஷ்ண குணுநுபவத்தைப் பண்ணுகிற்கச் செய்தே, குடிக்கிற தண்ணீர் விக்கி அதுதானே பாரவச்யத்தை விளைப்பிக்குமா போலே அவ்வநுபவந்தானே ரஸாந்தரத்தே முட்டத் தமக்குப்பிறந்த அவஸாத்தை அந்யாபதேசத்தாலே பேசுகிருர்'' என்று ஈடுவியாக்கியானம் கூறும்.

இனி பதிகத்தை நோக்குவோம்.

துவளில்மா மணிமாட மோங்கு தொலை
வில்லிமங்கலம் தொழும்
இவளை நீர்இனி அன்னைமீர்! உமக்கு
ஆசையில்லை விடுமினே
தவள ஒண் சங்கு சக்கரமென்னும்
தாமரைத் தடங்கண் என்றும்
குவளை ஒண்மலர்க் கண்கள் நீர்மல்க
நின்றுநின்று குமுறுமே.

குற்றமற்ற பெரிய மாணிக்கங்கள் கொண்டு நிருமிக்கப்பெற்ற மாடங்கள் உயர்ந்திருக்கிற தொலைவில்லிமங்கல க்ஷேத்திரத்தை வணங்கிநிற்கும் இந்த நாயகியை, ஓ! தாய்மார்களே இனி நீங்கள் விட்டு விடுங்கள். அவள்பக்கல் ஆசைவைக்கை இனி இல்லை. ஏனெனில் இவள் வெண்மையான சங்கு என்றும், சக்கரம் என்றும் தாமரைத்தடங்கண் என்றும் நீலோத்பலம் போன்ற தன் கண்களில் நீர்பெருகக்கூற வுன்னி வாயால் சொல்லமுயன்று முடியாமல் உள்ளேயே குமுறிக்கொண்டிருக்கிருள்.

துவளில் ......... தொலைவில்லிமங்கலம்

குற்றமற்ற மாணிக்கங்கள். மாணிக்கங்கள் மட்டுமேயோ ஊரடங்கலும் குற்றமற்ற பண்டங்களே. இறைவனைக் குற்றமணுகாது. அவ்வூரிலுள்ளாரிடம் தவறி ஏதேனும் குற்றமிருப்பினும் பெருமாளனுக்கிரகத்தாலே நீங்கும். எனவே உயிருள்ளதும் இல்லதும் அவ்வூரில் குற்றமற்றவைகளாயின.

ஓங்கு

மாடங்கள் உயர்ந்த, ''மாடங்களின் நிழலீடு திருநகரியளவும் வந்து காணுமிருப்பது'' என்பது ஈடு. நாயகன் நாயகியை மாளிகையின் அருகிலேயே பிரிந்துபோனுன். மாடத்தையும், மாணிக்கத்தையும் பார்த்து வைத்த கண் வாங்காதே யிருந்தாள் நாயகி.

தொழும்

அவ்வூரையே தொழும். தொழுகையே சுபாவமாக உடைய. ''துருப்புக் கூடாக அவ்வூரையன்றே இவள் உகந்தது'' அதாவது அவ்வூரில் தக்கது தகாதது என ஒன்றின்றி ஊரில் எல்லோரையும் தொழும்.

இவளை

தொழுதுகொண்டே யிருக்கும் இவளை. அதுவே தேகயாத்ரையாயிற்று இவளுக்கு.

நீர்

இவள் தன்மையறிந்தும் தொலைவில்லிமங்கலம் கொடுபோந்த நீர்.

அன்னைமீர்!

நல்ல தாய்மார் நீங்கள். அவள் உள்ள நெருப்பிலே நெய்வார்க்கும் தாய்மார்கள்.

இனி

இந்த தசையை அவள் அடைந்த பின்பு

ஆசை இல்லை விடுமின்

மீட்கலாம் என்ற ஆசை இனிக் கிடையாது. அந்த ஆசையைக் கட்டோடு விடுங்கள்.

அவள் காதல் முறுகுவதன் முன்னமாயினும் ஒருகால் மீட்டிருக்கலாம். இனி முடியாத காரியம். நீங்கள் செய்ய வுன்னும் செயலும் நேரிதன்று. நீங்கள் பெற்றவர்களேயானு லும் இவள் திறத்தே செய்யத்தகாதவற்றை செய்ய இழியலாமோ ?

உமக்காசையில்லை

இவள் பருவம் நிரம்பப்பெற்ருள். எனவே இவள் பக்கல் பெற்றவர்க்கு இனி என்ன உண்டு. அவள் புகுமிடத்தை நாடிக் கொண்டாள். அதுவும்தான் தகாதவிடமா? கிடைத்தற்கரிய இடமல்லவா தேடிக்கொண டாள். அவளைப் பெற்றமுறை கொண்டு மீட்கவா! முடியாது. கூடவும்கூடாது என் கிருள்.

உடன்போன தலைவியைப்பற்றி "என் மகள் ஒருத்தியும் பிறள்மகன் ஒருவனும் தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சியர் அன்னுர் இருவிரைக் காணிரோ பெரும" என்று எதிர்ப்பட்ட முக்கோல் பகவர் ஒரு வரைவினவ பகவர் சந்தனம், முத்து, யாழ் இவை பிறந்தவிடத்துக்கு இன்பம் பயவாது. உன் மகளும் அத்தன்மையளே. ஆகவே "இறந்த கற்பினுட்கு எவ்வம் படரன்மின் சிறந்தானை வழிபடீஇச் சென்றனள் அறந் தலைப்பிரியா ஆறும் மற்றதுவே" என்று வரும் கலித்தொகை அடிகள் இவ்வுண்மை யைத்தானே வற்புறுத்திற்று.

விடுமின்

உங்கள் ஆசையைவிட்டால் மட்டும் போதாது அவளையும் அவள் போக்கில் விடுங்கள். நீங்கள் வேறு ஒன்றும் செய்ய வேண்டா. "இவளுடைய அநுபவத்துக்குத் தண்ணீர்த் துரும்பாகாதே இத்தைக் கண்டு கொடுநிற்க அமையும்" என்பது ஈடு.

தவள ஒண்சங்கு

உலகளந்தான் வாயமுதம் உண்டே வளரும் ஸ்ரீபாஞ்ச ஜன்யம். தான் விரும்பும் பேற்றினை பெற்றசங்கு.

சக்கரம்

பத்தர் கண்களுக்கு அணியாயும் சத் ருக்கள் கண்களுக்குக் கூற்ருயும் தோற்றும் சக்கரம். விசேஷணம் தேட வேண்டாத அழகுடைய திருவாழி.

தாமரைத் தடங்கண்

அன்றலர்ந்த பங்கயம்போல அழகிதாய் விரிந்த கண்மலர். இந்த ஆயுதங்களையும் கண்களையும் காட்டியன்ருே இவளை அவன் அகப்படுத்தியது.

குவளை.........மல்க

கருநெய்தல் போன்ற இவள் கண்கள் நீர்பெருக. உண்மையில் இவள் கண்கண்டு அவன் தாமரைக் கண்கள் நீர்மல்கவேணும். ஆனுல் இவள் கண்கள் நீரைப்பெருக்குகின் றன. குவளைப்பூப் போன்றநிறம் மட்டுமல்ல அப்பூவின் தன்மையும் உடைய கண்கள். குவளைப்பூ மேகத்தைக் கண்டால் நீர்பெருக் குமாம். எனவே கணவன் நினைவில் கண்ணீர் பெருக்கும் காரிகையார் கண்களுக்கு குவளையை உவமைகாட்டல் கவிமரபு. "இவட்கே சுனை மாண்நீலம் கார் எதிர்பவை போல் இணைநோக்குண்கண் நீர்நில்லாவே" என்பது கலித்தொகை. இங்கு சங்கு, சக்க ரம் தாமரைக்கண் என வாய் வெருவவே அவன் கார்மேகத்திருமேனி அவள் மனத் திரையிலே நிழலாடுகிறது கார்கண்ட குவளை போல் அவள் கண்நீர் பெருக்குகிறது.

நின்று நின்று குமுறும்

முதலிலே, சங்கு சக்கரம் என்று வாய் வெருவ, பின்அது நின்று கண் நீர்சோர, பின் செயலற்று நெஞ்சு தடுமாறிக்குமுரு நின்ருள்.

இப்படி அவன் வசமேயாய் நிற்கிற இவளையா மீட்க நினைக்கிறீர்கள். அடாது விடுங்கோள் என்கிருள்.

இங்கே ஈட்டிலே ஒருநிகழ்ச்சி குறிக்கப் பெற்றிருக்கின்றது. "நின்று குமுறும்" என்பதைப் பின்பாடலில் 'குமிறும்' என வருவதை வைத்து 'நின்று குமிறும்' எனக் கொண்டு அதை நின்று உகும் இறும் என்று

---

சுருக்கமாய்ப் பேசுகிறவனுடைய வார்த்தைகளில் ஆழ்ந்த சிந்தனை தேங்கியிருக்கும். அவன் ஒவ்வொரு சொல்லையும் அளந்து பேசுவான். உண்மையைத் தேடிச் செல்லும் என்னைப் போன்றவர் களுக்கு மௌனம் மகத்தான உதவி செய்கிறது. —மகாத்மா காந்தி

மொழிப்பாகுபாடு பண்ணினும் ஒருவன் ராஜசபையிலே. அங்கிருந்த விக்ரமசிங்கன் என்பான் ஒருவன் 'கறவா மடநாகுதன் கன்றுள்ளினுப்போல்' என்ற பாடலை உளங்கொண்டு "அங்ஙனல்ல. கன்றைக் கடக்கக் கட்டிவைத்தால் முலைக்கண் கடுத்துப்பசு அலமந்துபடுமா போலே உள்ளோடுகிற கிலேசம் வாய்விடமாட்டாதே நோவுபடுகிற இவளுக்கு இது வார்த்தையே'' என்றும்.

இப்பாட்டு திரிகரணங்களாலும் அந்நாயகி தொலைவில்லிமங்கலத் திறைவனையே தொழுது, பேசி, நினைந்து வாடினள் என்பர். 'தொழும்' என்றதனால் காயத்தின் செயல் கூறிற்று. 'சங்குசக்கரமென்றும்' என்றதால் வாக்கின் செயல் கூறிற்று. 'குமுறும்' என்றதால் மனத்தின் செயல் கூறிற்று என்று காட்டப்படுகிறது.

குமிறுமோசை விழவொலித்
தொலைவில்லிமங்கலம் கொண்டுபுக்கு
அமுதமென் மொழியாளை
நீர்உமக்காசையின்றி அகற்றினீர்
திமிர்கொண்டா லொத்துநிற்கும்
மற்றிவள் தேவதேவபிரானென்றே
நிமியும் வாயொடு கண்கள் நீர்மல்க
நெக்கொசிந்து கரையுமே.

[முழங்குகின்ற பல்வகை ஒலிகள் நிரம்பிய திருவிழாச் சந்தடியுடைய தொலைவில்லிமங்கலத்திலே அமுதம்போன்ற சொற்களையுடைய இந்நாயகியைக் கொண்டுபோய் அதன்மூலம் அவளிடத்தில் உமக்கு ஆசையின்றி உறமற்றுப் போகும்படி செய்துவிட்டீர்கள். அவளோ செயலற்றவளாய் நிற்கிறாள் அன்றி தேவர்கள் நாதன் என்றுகூற வாயெடுத்து உதட்டை நெளித்து கண்கள் நீர்வர உடல்குலைந்து தளர்ந்து நீராய்க் கரையா நின்றாள்.]

குமிறும் ஓசை விழவொலித் தொலைவில்லிமங்கலம்

பல்வகையான கோஷங்கள் ஒலிக்கும் விழாவுடைய ஊர். ஒன்றையொன்று முந்தியொலிக்க ஒன்றையும் உருத்தெரிய முடியாதபடி கலந்த கோஷம்.

வங்கியம்பல தேன்விளம்பின்
வாணிமுந்தின பாணியின்
பங்கியம்பரமெங்கும் விம்மின
பம்பை பம்மின பல்பறை
பொங்கியம் பலவும்கறங்கின
நூபுரங்கள் புலம்பவெண்
சங்கியம்பின கொம்பலம்பின
சாமகீதம் நிரம்பவே.

என்று விழாவரு அயோத்தியைக் கம்பன் கூறினன். அதுபோன்று என்றும் விழாவொலி மாறாத தொலைவில்லிமங்கலம் "ஓத்துச் சொல்லுவார், ஸங்கீர்த்தனம் பண்ணுவார், பாடுவார், இயல் விண்ணப்பம் செய்வாராய் எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி விரவிக் கொண்டெழுகிற த்வனியையுடைய திருநாளில் ஆரவாரம்.

கொண்டு

இந்த விழாவொலி கேட்டவுடனேயே இவளை அங்கே கொடுபோகாமே இருந்திருக்க வேண்டாமோ. இவள் படிஅறிந்துவைத்தும் நீங்கள் இவளை அவ்வூர்க்குக் கொண்டு போனீர்கள்.

புக்கு

கொண்டுதான் போனீர்கள். அங்கே ஊர்க்குப் புறத்தே தங்கி எட்டநின்று விழாவைக் கண்டுவிட்டுத் திரும்பியிருக்கலாம். அப்படியும் செய்தீர்களில்லை. இவளை ஊர்க்குள்ளே கொண்டு புக்கீர்.

அவள் போகவேண்டுமென்று புறப்பட்டாளா? இல்லை. நீர்தாமே அவளைக் கொண்டுபோனீர்.

அமுதமென் மொழியாளை

அமுதினுமினிய சொல்லுடைய இவளை. ஒப்புக்கு அமுதத்தைச் சொல்லலாமேயன்றி இவள் மொழிக்கு அது உவமையன்று.

"குயிலும் கரும்பும் பெருந்தேனும் குழலும் யாழும் கொழும்பாகும்
அயிலும் அமுதும் சுவை தீர்த்தமொழி''

---

சோதனைக் காலங்களிலெல்லாம் கடவுள் என்னைக் காப்பாற்றியிருக்கிறார். "கடவுள் என்னைக் காப்பாற்றினார்'' என்ற வாக்கியம் என்னைப் பொறுத்தமட்டிலும் இன்று ஆழ்ந்த பொருள் கொண்டதாக இருக்கிறது. ஆனால் அந்த வாக்கியத்தின் முழுப் பொருளையும் நான் இன்னும் கண்டறியவில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது. பரிபூரணமாக அறிய இதைவிடப் பழுத்த அனுபவம் தேவை. —மகாத்மா காந்தி

# இரும்புதல் என்னும் வைப்புத்தலம்

[*வித்துவான். திரு.* **வை. சுந்தரேசவாண்டையார்,** *அண்ணுமலைப் பல்கலைக்கழகம்*]

—○✻○—

*சைவசமய குரவர்கள் நால்வராலும், அல்லது அவர்களுள் ஒவ்வொருவராலும் தனிப்பதிகம் பெற்றுள்ள சிவத்தலங்கள் பாடல்பெற்ற தலங்களென்றும், அவ்வாறு தனிப்பதிகமின்றிப் பொதுப் பதிகங்களிலேனும், வேருெரு தலப்பதிகங்களினிடையிலேனும் வைத்துக் கூறியிருப்பவை, வைப்புத் தலங்களென்றும் கூறப்படும்.*1*

*இத்தகைய வைப்புத் தலங்களில் இக் காலத்தில் பண்டைப் பெயர் சிதைந்தனவும், யாண்டுள என அறிதற்கும் இயலாதிருப்பனவும் பலவுள. அவற்றையறிந்துகொள்வதற்குக் கல்வெட்டுக்கள் உதவி செய்கின்றன. திருநாவுக்கரசரது திருவீழி மிழலைக்குரிய திருத்தாண்டகத்தால் இரும்புதல்*2 என்னும் வைப்புத்தலம் உளது என்று பெறப்படுகின்றது.*

*அது யாண்டையதென ஆராய்வுழி, தஞ்சாவூர் ஜில்லா பாபநாசம் தாலூகாவில்*

---

*1 வைணவர் தலங்களைத் திவ்ய தேசமென்றும், பாடல்பெற்றவை மங்களாசாசனம் பெற்றவையென்றும், வைப்புத்தலம் போன்றவற்றை (பாடல் பெருத சிறந்த தலங்களை) அபிமான க்ஷேத்திரம் என்றும் கூறுவர்

*2 பெரும்புலியூர் விரும்பினுர் பெரும்பா ழியார்
பெரும்பற்றப் புலியூர்மூ லட்டா னத்தார்
இரும்புதலார் இரும்பூளை யுள்ளார் ஏரார்
இன்னம்ப ரார்ஈங்கோய் மலையார் இன்சொல்
கரும்பனையாள் உமையோடுங் கருகா வூரார்
கருப்பறிய லூரார் கரவீ ரத்தார்
விரும்பமரர் இரவுபகல் பரவி யேத்த
வீழி மிழலையே மேவி னுரே.

(திருநாவுக்கரசர் தேவாரம் சைவசித்தாந்த சமாஜப் பதிப்பு. பக்கம் 412. செய்யுள் 6.)

இரும்புதலார்—இரும்புதல் என்ற ஊரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுர். இவ்வூரில் ஒரு பழைய சிவாலயம் இன்றும் நிலைபேறுடையதாய் இருக்கிறது.

---

*என்று பிராட்டியின் மொழியைக் கவி கூறினுன். இந் நாயகியும் அந் 'நாரீணும் உத்தமை'யின் சுபாவத்தைத்தானே உடையவள்!*

நீர் உமக்காசையின்றி யகற்றினீர்

*அப்படிப்பட்ட மென்மொழியாளை உங்கள் வார்த்தைக்கு மறுவார்த்தை கூருதவளை இப்போது உங்கள் வழிப்படாதபடி விலக்கிவிட்டீர்கள். பலன்.*

திமிர்கொண்டா லொத்துநிற்கும்

*ஒன்றும் பேசாமல் திமிர்வாதமுற்றவள் போல் செயலற்று நிற்கிருள்.*

மற்று

*அல்லது முன்நிலையை விட்டு சற்று மாறுதல் தெரிகிறதாயின்*

தேவதேவ பிரான் என்றே

*அயர் வறுமமர்கள் அதிபதி என்றுகூற வாயெடுத்தவள்*

நிமியும் வாயொடு

*அவ்வார்த்தையைக் கூறுமுன்பே அத்துணைப் பெரியவன். இப்படி எளியனுவதே என்று வியந்து அவ்வியப்பிலே பேசவந்தது சொல்லி தலைக்கட்டமாட்டாதே உதட்டை நெளித்து*

கண்கள் நீர்மல்க

*அவன் சீலத்தையுன்னி அம்மகிழ்விலே கண்கள் நீர்தேக்கிட*

நெக்கு

*உடல்குலைந்து, ஓசிந்து - தளர்ந்து, கரையும் - அக்கண்ணீரிலேயே தன்னைக் கரைத்துக்கொள்ளும்படியானுள். பெருவெள்ளத்திலே ஆற்றின்கரை பையப்பைய உடைந்து நீரிலே விழுந்துகரையுமா போல.*

*இப்படி இந்நிலைக்கு இவளை நீங்களே கொண்டுவந்துவிட்டு இப்போது இவளை இத்தசையிலிருந்து மீட்க முயல்கிறீர்களே. இயலுமா என்கிருள் தோழி.*

(தொடரும்)

பாபநாசத்திலிருந்து சாலியமங்கலத்திற்குப் போகும் பெருவழியில் உள்ள இரும்புதலை என்ற ஊரே அத்தலம் என்பதை ஒரு கல்வெட்டுப் புலப்படுத்துகின்றது. இரும்புதல் என்ற ஊரே இக்காலம் ஐகாரச்சாரியை பெற்று இரும்புதலை என்று வழங்குகின்றது. அக் கல்வெட்டைக் கீழே குறிப்பிடுகின்றேன்.

*சுவஸ்தி திருமன்னிவளர இருநில மடந்தையும் பொற் சயப்பாவையுஞ் சீர்த் தனிச் செல்வியுந் தன் பெருந்தேவியராகி யின்புற நெடுதியலூழியுள் இடைதுறை நாடுந் தொடர்வனவேலிப் படர்வன வாசியுஞ் சுள்ளிச் சூழ்மதிள் கொள்ளிப்பாக்கையும் நண்ணற் கருமுரண் மண்ணைக் கடக்கமும் பொருகடல் ஈழத்தரைசர்தமுடியும் ஆங்கவர் தேவியர் ஓங்கெழில் முடியும் முன்னவர்பக்கல் தென்னவர் வைத்த சுந்தரமுடியும் இந்திரனாரமுந் தெண்டிரை ஈழமண்டல முழுவதும் எறிபடைக் கேரளர் முறைமையிற் சூடுங் குலதனமாகிய பலர்புகழ்முடியுஞ் செங்கதிர் மாலையுஞ் சங்கதிர்வேலைத் தொல் பெருங்காவல் பல்பழந்தீவுஞ் செருவிற்சினவி யிருபத்தொரு காலரைசுகளை கட்ட பரசுராமன் மேவருஞ் சாந்திமத் தீவரண் கருதி யிருத்திய செம்பொற் றிருத்தகுமுடியும் பயங்கொடு பழிமிக முயங்கியில் முதுகிட்டொளித்த சயசிங்கன் அளப்பெரும் புகழொடு பீடியலிரட்டபாடி ஏழரைஇலக்கமும், நவநெதிக்குலப் பெருமலைகளும் மாப்பொரு தண்டாற்கொண்ட கோப்பரகேஸரி வர்மரான உடையார் ஸ்ரீராஜேந்திர தேவர்க்கு யாண்டு பத்தாவது :—

அதிகாரிகள் காஞ்சி வாயிலுடையார் உதையதிவாகரன் தில்லையாளியாரான ராஜராஜ மூவேந்தவேளார் எழுந்தருளுவித்த கிருதார்ஜுன தேவர்க்குத் திருவமுது உள்ளிட்டு வேண்டும்நிவந்தங்களுக்கும், சிறுதனத்துப் பணிமக்கள் உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் எழுந்தருளுவித்த மகாமேரு விடங்கர்க்கும் நம்பிராட்டியார்க்கும் திருவமுது உள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கும் உடையார் ஸ்ரீராஜேந்திரதேவர்க்கு யாண்டு பத்தாவதுவரை இவர்கள் வைத்த காசில் ஸ்ரீராஜராஜீஸ்வரத்தில் இனிது எழுந்தருளியிருந்த பரமசாமிக்கு மூலப்பிரத்யனாகிய (பழைய அடியாராகிய) சண்டேஸ்வர தேவர் பக்கல் பொலிசை ஊட்டுக்குக் கொண்ட ஊரும் கல்லில் வெட்டின:—நித்த விநோத வளநாட்டு ஆவூர்க்கூற்றத்து பிரமதேயம் இரும்புதலாகிய மனுகுல சூளாமணி சதுர்வேதிமங்கலத்துச் சபையார், அதிகாரிகள் காஞ்சிவாயிலுடையார் உதைய திவாகரன் தில்லையாளியாரான ராஜராஜ மூவேந்த வேளார் எழுந்தருளுவித்த கிருதார்ஜுன தேவர்க்குத் திருவமுது உள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கு வைய்த்தகாசில், கொண்ட காசும் தொண்ணூற்றுநாலும்; உடையார் ராஜராஜ தேவர் எழுந்தருளுவித்த மகாமேரு விடங்கர்க்கும் நம்பிராட்டியார்க்கும் திருவமுதுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்குச் சிறுதனத்துப் பணிமக்கள் வைய்த்த காசில் கொண்ட காசு ஐந்நூற்றுறும், ஆக யாண்டு பத்தாவது பசான்முதல், கொண்ட காசு அறுநூறினால், காசு ஒன்றுக்கு ஆட்டை வட்டன் பலிசை நெல்லு முக்குறுணியாக, சந்திராதித்தவல் ஆட்டாண்டுதோறும், ராஜகேஸரியோடொக்கும் ஆடவல்லானென்னும் மரக்காலால், தஞ்சாவூர் உடையார் பெரும் பண்டாரத்தேய், அளக்கக் கடவநெல்லு நூற்றைம்பதின்கலம்.

## சில குறிப்புக்கள்

இக்கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ள கோப்பரகேசரி பன்மரான இராசேந்திர தேவன் தஞ்சைப்பெரியகோயிலை எடுப்பித்த முதலாம் இராசராசசோழன் மகன் ஆவன். இவனைக் கங்கைகொண்ட சோழனென்றும் வழங்குவர். இவன் கி. பி. 1012 முதல் 1044 வரையில் சோழமண்டலத்தைச் சிறப்புடன் ஆண்டுள்ளான். இவ்வேந்தன் அரியணை ஏறிய பத்தாம் ஆண்டில் அதாவது கி. பி. 1022-ஆம் ஆண்டில் இக்கல்வெட்டுப் பொறிக்கப்பெற்றதாகும்.

இக்கல்வெட்டில் நித்தவிநோத வளநாட்டு, ஆவூர்க்கூற்றத்து, இரும்புதலாகிய மனுகுல சூளாமணி சதுர்ப்பேதி மங்கலத்துச் சபையார் இராசராசேச்சரத்து இனிது எழுந்தருளியிருந்த பரம சுவாமிக்கு மூலப்பிருத்தியனாகிய (பழைய அடியாராகிய) சண்டேசுவரர் பக்கல் அறுநூறு காசை வட்டிக்குக்

*Taken from the South Indian Inscriptions Vol. II Inscription No. 10 pages 93 & 94.

கொண்டுள்ள செய்தி குறிக்கப்பெற்றுள்ளது. இதனால் இரும்புதலுக்கு மனுகுல சூளாமணி சதுர்ப்பேதி மங்கலம் என்ற வேறுபெயர் உண்டென்றும் புலப்படுகிறது.

நித்தவிநோத வளநாடு என்பது தஞ்சை மாவட்டத்தில் அரிசிலாற்றின் தென்பகுதியும், மன்னார்குடி வட்டத்தில் (Taluk) வடக்குப் பகுதியும், கும்பகோணத்திலிருந்து நீடாமங்கலத்திற்குப் போகும் பெருவழியின் மேற்குப் பகுதியும், தஞ்சாவூர் வட்டத்தின் கிழக்குப் பகுதியும், அடங்கிய நிலப்பரப்பாகும். ஆவூர்க்கூற்றம், பாம்புணிக்கூற்றம் முதலியன இவ்வளநாட்டின் உட்பகுதிகளாகவுள்ள சில பகுதிகளாகும்.

ஆவூர்க்கூற்றம் என்பது தஞ்சை மாவட்டத்தில் (District) பாபநாசம் வட்டத்தில் தேவாரம்பெற்ற தலமாகிய ஆவூரைத் தலைநகராகக் கொண்டுள்ள ஒருசிறு நாடாகும். இரும்புதலை, அமுத்ரவல்லி, முன்னியூர், விளந்தூர், செம்மங்குடி, பட்டம் என்னும் ஊர்கள் இக்கூற்றத்தில் உள்ளனவென்று கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. ஈண்டுக் குறிக்கப்பெற்றுள்ள இவ்வூர்கள் ஆவூரைச் சார்ந்து இன்றும் நிலைபெற்று இருக்கின்றன.

இஃது இங்ஙனமாக, தஞ்சாவூர் மாவட்டம், மாயூரம் வட்டத்திலுள்ள இரும்புதலை என்ற ஊரே இந்த இரும்புதல் என்னும் வைப்புத் தலமென்று ஆராய்ச்சியாளர் ஒருவர் கலைமகள் என்னும் திங்கள் இதழில் (தொகுதி பதினொன்று; பகுதி 55இல் குறித்துள்ளார்.) மாயூரம் வட்டத்தில் இப்பெயர் கொண்ட ஊரே இல்லை. அதனால் அவர் கொண்ட கொள்கையும் வலியுடைத்தாயில்லை.

மேலும், மேல் யான் குறித்துள்ள இரும்புதலை என்ற ஊர்ச் சிவன்கோயிலில் உள்ள கல்வெட்டும் அவ்வூரில் இரும்புதல் என்றே குறிப்பிடுகின்றது. (Annual report on South Indian Epigraphy for the year 1910. Nos. 32—34).

---

எப்படியோ ஒரு வழியில் கடவுள் நமக்கு உதவி புரிய வருகிறார். நம்பிக்கையை இழந்துவிட வேண்டாமென்றும், நாம் அழைக்கும்போதெல்லாம் தாம் வரத் தயாராக யிருப்பதாகவும், ஆனால் நம் நிபந்தனைகளின்படியின்றி தம் நிபந்தனைகளின்படி வருவதாகவும் அவர் நமக்கு உணர்த்துகிறார். இது நான் கண்ட உண்மை. ஒரு முறை கூட, கடைசி நேரத்தில் அவர் என்னைக் கைவிட்டது கிடையாது.

—மகாத்மா காந்தி



திருவண்பரிசாரம் கோயில்—ஆகாயத்தோற்றம்

# திருவண்பரிசாரம்



திருவண்பரிசாரம் கோயில்—முன்தோற்றம்

வருவார் செல்வார் வண்பரிசாரத்திருந்த, என்
திருவாழ்மார்வற் கென்திறம் சொல்லார்
செய்வதென்,
உருவார் சக்கரம் சங்குசுமந் திங்கும்மோடு
ஒருபாடுழல்வா னோரடியானு முளனென்றே

—நம்மாழ்வார்

ஆழ்வார்களால் மங்களசாசனம் செய்யப்பெற்ற திவ்வியதேசங்கள் நூற்றெட்டுள் ஒன்று **திருவண்பரிசாரம்** என்பது. இதை இப்போது **திருப்பதிசாரம்** என்று வழங்குகின்றனர். இரண்டாம் திருப்பதியென்றும் கூறுவர். இப்பதி கன்னியாகுமரிமாவட்டத்திலுள்ள நாகர்கோயிலிலிருந்து சுமார் மூன்று கல் தொலைவிலிருக்கிறது. திருநெல்வேலி சந்திப்பிலிருந்து 45 கல்தூரம். இரண்டு சிற்றாறுகளுக்கு இடையே அழகிய இயற்கை வளமுள்ள இடத்தில் இப்பதியிருக்கிறது. சாரம் பொருந்திய ஊரானபடியால் திருவண்பரிசாரம் எனப் பெயர் வந்ததென்பர்,

எம்பெருமான் எழுந்தருளியுள்ளது அழகிய சிறுகோயில், கோபுரமில்லை. சந்நிதி கிழக்கு நோக்கியிருக்கின்றது. கிழக்கு வாயிலுக்கு எதிரில் திருக்குளம். இதற்கு **சோமலட்சுமிதீர்த்தம்** என்று பெயர். கோயிலுக்குள் நுழைந்ததும் இடதுகைப்பக்கம் கருடாழ்வாரும், வலப்புறம் நம்மாழ்வார் சந்நிதியும் இருக்கின்றன. ஸ்ரீகோயிலில் மூலவர் வீற்றிருந்த திருக்கோலத்தில் கிழக்குத் திருமுக மண்டலத்தோடு சேவை சாதிக்கிறார். எம்பெருமான் திருநாமங்கள் **திருவாழ்மார்பன்**, **திருக்குறளப்பன்** என்பன. நம்மாழ்வார் திருப்பாசுரத்தில் "என் திருவாழ்மார்வன்" என்று மிக்க ஆராமையுடன் குறிப்பிட்டருளுகிறார். இறைவன் எழுந்தருளியுள்ளது **இந்திரகலியாண** விமானம். பெருமாள் சந்நிதிக்கு வெளியே வலப்பக்கத்தில் இராமர், இலக்குவர், சீதை இவர்களின் உருவச் சிலைகளும், விபீஷணர், அனுமார், குலசேகரர், அகஸ்தியர் இவர்களின் சுதையுருவங்களும் வெகு அழகாகத் திகழ்கின்றன. நம்மாழ்வார் சந்நிதிக்கு மேற்கே, நடராஜர், சிவகாமி, உமாமகேசுவரர், அம்பிகை. சாஸ்தா இவர்களின் உற்வசமூர்த்திகள் இருக்கின்றன, கர்ப்பக்கிர



திருவண்பரிசாரம்—இராமர், சீதை, இலட்சுமணன்

கத்திற்குத் தெற்கே விநாயகர் சந்நிதியும் இருக்கிறது.

இந்த திவ்விய தேசத்தில் விந்தை, காரி, உடையநங்கை இவர்களுக்குப் பிரத்தியட்சம். நம்மாழ்வாருடைய தாயார் பிறந்த புனிதமான இடம் இவ்வூர் என்பர். திருவாழ் மார்பன் (சீனிவாசன்) திருவுருவம் கடுசர்க்கரையால் ஆக்கப்பட்டது. புனுகு சாத்தப் படுகிறது. கடுசர்க்கரை யென்பது பலவித மருந்துகள் சேர்த்துச் செய்யப்பட்டது.

கோயிலில் ஐந்து கால பூசை நடைபெறுகிறது. சித்திரை மாதம் மிருகசீரிஷத்தில் கொடியேறி சித்திரை நட்சத்திரம் முடிய பத்து நாட்கள் உற்சவம் நடைபெறுகிறது. 10ஆம் நாள் தீர்த்தம் (ஆராட்டு). பெருமாள் எழுந்தருளும் போதெல்லாம் இக்கோயிலிலுள்ள உமாமகேசுவரரும் எழுந்தருளுவார்.

மலைநாட்டுத் திருப்பதிகளில் ஒன்றான இத்திருப்பதிசாரத்தை நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்திருக்கிறார். வடமொழியிலுள்ள தலபுராணத்தை வெங்கடசுப்பிரமணிய சர்மா என்பவர் தமிழுடன் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறார்.

இக்கோயிலில் சில தமிழ்க் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவ்வூருக்கு சற்று மேற்கே ஜடாயுபுரம் என்னும் இடத்தில் சிவன்கோயில் ஒன்றிருக்கிறது.

அடியும் குளிர்ந்தாள், அறிவும் குலைந்தாள்
முடிகின்றாள்; மூச்சு அடங்குமுன்னே, கடிதுஓடி,
பெண்பரிசு, ஆர், அங்குப் பிறப்பித்து மீளுவார்
மண்பரிசாரம் சிறந்த மாற்கு ?

—பிள்ளைப்பெருமாளையங்கார்.

---

மதுரை : இராமேசுவரம் தேவஸ்தானம் பாடசாலையின் 45-வது ஆண்டு விழாவும் புதிய கட்டிடத்திறப்பு விழாவும் சென்னை அறநிலைய ஆட்சித்துறை அமைச்சர் கனம் திரு. எம். பக்தவத்சலம் அவர்களால் திறந்துவைக்கப்பெற்று பரிசும் வழங்கப்பெற்றது. தேவஸ்தான தர்மகர்த்தாக்குழுவினர் திரு. ஆர். சண்முகராஜேஸ்வரசேதுபதி, எம்.எல்.ஏ., திரு, ஏ. எஸ். சுப்பராஜ், எம்.எல்.ஏ., திருமதி ஜோதி வெங்கடாசலம், எம்.எல்.சி., மற்றும் கல்லூரி ஆலோசனைக்குழுவினர் திரு. என். ஆர். சுப்பிரமணிய அய்யர், திரு. பி. வாஞ்சிநாதன், திரு. அவ்வை எஸ். துரைசாமி பிள்ளை, கல்லூரி முதல்வர் திரு. டி. வி. ஸ்ரீ. சாஸ்திரி, ஷெ தேவஸ்தான நிர்வாக அதிகாரி வி. சுந்தரராஜன் முதலியோர் இவ்விழாவில் பங்கு எடுத்துக்கொண்டார்கள்.

◆ ◆ ◆ ◆

இராஜமன்னார்குடி : இராஜகோபாலசுவாமி கோயிலில் திருவத்யயனோத்சவம் 17—12—60 முதல் 7—1—61 முடிய நடைபெறும்.

# திருக்கடவூர்

எரிதரு வார்சடை யானும்வெள் ளையெரு தேறியும்
புரிதரு மாமலர்க் கொன்றைமா லைபுனைந்
தேத்தவே
கரிதரு காலனைச் சாடினு னுங்கட வூர்தனுள்
விரிதரு தொல்புகழ் வீரட்டா னத்தரன் அல்லனே

—திருஞானசம்பந்தர்.

சேலின்நே ரனைய கண்ணார்
திறம்விட்டுச் சிவனுக் கன்பாய்
பாலுநற் றயிர்நெய் யோடு
பலபல ஆட்டி யென்றும்
மாலினைத் தவிர நின்ற
மார்க்கண்டற் காக அன்று
காலனை யுதைப்பர் போலுங்
கடவூர்வீ ரட்டனாரே

—திருநாவுக்கரசர்.


திருக்கடவூர் குங்கிலியக்கலயநாயனர்

அன்று லின்னிழற்கீழ் அறநால்வர்க் கருள்புரிந்
கொன்றாய் காலனுயிர் கொடுத்தாய்மறை
யோனுக்குமான்
கன்றா ருங்கரவா கடவூர்திரு வீரட்டத்துள்
என்றா தைபெருமா னெனக்கார்துணை நீயலதே

—சுந்தரர்.

சோழநாட்டில் பாடல்பெற்ற சிவத் தலங்களில் ஒன்று திருக்கடவூர் என்பது திருக்கடையூர் என்று மக்கள் இதைத்திரித்து வழங்குகின்றனர். இப்பதி தஞ்சை மாவட்டத்தில் மாயூரத்திற்குச் சிறிது தென்கிழக்கே 13 மூன்றுகல் தொலைவிலிருக்கிறது. மாயூரம்—தரங்கம்பாடி இருப்புப் பாதையில் திருக்கடையூர் என்ற நிலையத்தின் அண்மையிலுள்ளது. இத்தலத்திற்கு வில்வவனம், பிஞ்சில (சாதிமல்லிகை) வனம் என்ற பெயர்களும் உண்டு. பாற்கடலில் கடைந்தெடுக்கப்பட்ட அமுதம் ஒரு கடத்தில் வைக்கப்பட அது சிவலிங்க வடிவமாயினமையின் மூர்த்திக்கு அமுதலிங்கம், அமிர்தகடேசுவரர் என்றும், ஊருக்குக் கடவூர் என்றும் பெயர்கள் ஏற்படலாயிற்று.

கோயில் கிழக்கு நோக்கியுள்ளது. கிழக்கு வாயிலை எழுநிலைக் கோபுரம் அழகு செய்கிறது. தேர்த்திருவீதி யுள்பட ஐந்து பிரகாரங்கள் உள்ளன. கீழ்க்கோபுரத்தை முனீசுவரர் கோபுரம் என்பர். அதனருகே திருக்குளமும் இருக்கிறது. முதற் பிரகாரத்தில் இடதுபுறம் நூற்றுக்கால் மண்டபமும், தென் மேற்கு மூலையில் கிழக்குநோக்கிய அம்பிகைக் கோயிலும் அமைந்துள்ளன

இங்குள்ள விநாயகரின்பெயர் கள்ள வாரணப்பிள்ளையார் என்பது. இறைவனின் திருநாமங்கள் அமிர்தகடேசுவரர், அமுதகடோற்பவர், காலசங்காரர், கடவூர் வீரட்டேசுவரர் முதலியன. தேவியின் திருப்பெயர் அபிராமியம்மை என்பது. இன்னும் இக்கோயிலில் புண்ணியவர்த்தனர், பாப விமோசனர், வில்வவனேசுவரர், பரிவார தேவதைகள், நாயன்மார்கள் முதலிய பல மூர்த்தங்களும் இருக்கின்றன. சிறப்பாக நாம் பார்க்கவேண்டியது காலசங்காரக்கடவுள். மகாமண்டபத்தில் தெற்கு முகமாக எழுந்தருளியுள்ளார். இடது பக்கத்தில் வாலாம்பிகை இருக்கின்றனர். எமன் கீழே கிடக்கின்றான். அருகில் மார்க்கண்டேயர் இருக்கின்றார். மார்க்

கண்டனுக்காக, பெருமான் சிவலிங்கத்திலிருந்து எழுந்து எமனைக் காலால் உதைத்து வதைத்த வரலாறு நாடறிந்தது. அட்ட வீரட்டத் தலங்களுள் இது ஒன்று.

இத்தலத்தின் தீர்த்தங்கள் அமிர்த புட்கரிணி, காலதீர்த்தம் (ஆனைக்குளம்), மார்க்கண்டேய தீர்த்தம் என்பன. தல விருட்சம் வில்வம். மார்க்கண்டேயர் அருச்சிக்க மலர் கொடுத்தது சாதிமல்லிகைக்கொடி.

கோயிலில் நாள்தோறும் ஆறுகால பூசை நடக்கின்றது. சித்திரையில் பிரமோற்சவம். ஆறும் திருநாளன்று காலசம்மாரக் காட்சி நடைபெறும். திரளான மக்கள் கண்டு வழிபடுவர். கார்த்திகைமாதத் திங்கட்கிழமைகளில் 1008 சங்காபிஷேகம் மிகவும் சிறப்பாக நிகழ்கிறது.

இத்தலத்து இறைவனைத் திருஞான சம்பந்தர் ஒரு பதிகத்தால் பாடியருளியுள்ளார். அப்பர் மூன்று பதிகங்களும், சுந்தரர் ஒரு பதிகமும் ஓதியுள்ளனர். திருவிளையாடற்புராணத்தில்,

கறுவிவீழ் காலன் மார்பிற்
சேவடிக் கமலஞ் சாத்திச்
சிறுவனுக் காயுளீந்த சேவகப்
பெருமான் மேய
அறைபுனற் பழன மூதூர்

என்று இத்தலத்தைப்பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. பெரியபுராணம், "எறி நீர்க் கங்கை தோய்ந்த நீள்சடை யார்பண்டு தொண்டர்மேல் வந்த கூற்றைக் காய்ந்த சேவடியார் நீடி இருப்பது கடவூராகும்" என்று கூறுகிறது. அருணகிரிநாதர் ஒரு திருப்புகழில் "கூற்றுமரித்திட வேயுதை பார்வதியார்க்குமினித்த பெணுகிய மான் மகள் கோட்டுமுலைக்கதி பாகடவூருறை பெருமானே" என்று கூறியிருக்கிறார். இவ்வூரில் இருந்த பட்டர் ஒருவர் அபிராமியம்மையிடம் நீங்காத பேரன்பு கொண்டவர். ஆதலின் அபிராமிபட்டர் என அழைக்கப்பெற்றனர். தஞ்சையையாண்ட சரபோசி மன்னன் தை அமாவாசையில் காவிரிப்பூம்பட்டினத்தில் கடலாடிவிட்டு கடவூர் வீரட்டத்திற்கு வந்தான். அபிராமிபட்டர் அன்று சுத்தபூர்ணிமை திதி என்று சொல்ல, மன்னன் அமாவாசை நள்ளிருள் எப்படிப் பௌர்ணமியாக முடியும் என்று கேட்டான். தேவியை நினைந்துருகிப் பாடத் தொடங்கினார் பட்டர். அம்பிகையும் கருணைபூத்து தன் திருச்செவியிலுள்ள தோட்டை எடுத்து வானவெளியில் வீச நிலஒளி தோன்றியது. அரசன் மகிழ்ந்து பட்டரைப் பணிந்து, அவருக்கு மானியமும் கொடுத்தான். பட்டர் பாடிய நூல் அபிராமி அந்தாதி என்ற பெயருடன் விளங்குகிறது. அதில் ஒருபாடல்,

தனந்தருங் கல்வி தருமொரு
நாளுந் தளர்வறியா
மனந்தருந் தெய்வ வடிவுந்
தருநெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரு நல்லன வெல்லாந்
தருமன்ப ரென்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாளபி
ராமி கடைக்கண்களே.

மேலும் இத்தலத்தில் குங்கிலியக்கலயனார், காரிநாயனார் இவர்கள் அவதரித்து இறைவனை வழிபட்டு முத்திப்பேறெய்தினர். சைவசித்தாந்தத்தலைமணி நூலான சிவஞான போதத்திற்குக் காலத்தாற் முற்பட்டதுமான திருக்களிற்றுப்படியார் என்னும் நூலை அருளிய உய்யவந்த தேவநாயனார் அவதரித்ததும் திருக்கடவூரிலேதான்.

இக்கோயில் மதிற்சுவர்கள், கர்ப்பக்கிரகச் சுவர்கள் முதலியவற்றில் பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. ஒன்பது சோழ மன்னர்கள், சுந்தரபாண்டியன், வீரபாண்டியன், குலசேகரபாண்டியன் இம்மூவர்கள், கிருஷ்ணதேவராயர், விருப்பண்ண உடையார் ஆகிய விஜயநகர வேந்தர்கள் முதலியவர்கள் காலத்தவை அக்கல்லெழுத்துக்கள். செயங்கொண்ட சோழவளநாட்டு ஆக்கூர்நாட்டுக் கடவூர், இராசநாரண வளநாட்டு அம்பர் நாட்டுத் திருக்கடவூர், உய்யக்கொண்டான் வளநாட்டு அம்பர் நாட்டுக்கடவூர், செயங்கொண்ட வளநாட்டு ஆக்கூர் நாட்டுப் பிரி

---

இந்தப் பரந்த உலகத்தில் யாதொரு உதவியும் ஆதரவும் இல்லாமல் திக்கு திசை தெரியாது தவிக்கும் இருள் சூழ்ந்த நேரத்திலும் அவருடைய திருநாமத்தின் சக்தி நமக்குத்தெம்பு கொடுக்கிறது. நம் சந்தேகங்களையும் நிர்க்கதியான நிலையையும் தூரத்துரத்தி விடுகிறது. —மகாத்மா காந்தி

# சிவஞான போதம்

திரு. K. வச்சிரவேல் முதலியார் B.A., L.T.

(முன் இதழ்த் தொடர்ச்சி)

(இ) இப்பாட்டு மும்மூன்று சொற்க ளால் ஒவ்வோர் அடி இயற்றப் பெற்று நான்கு அடிகளை உடையது. இதனால் இந் நூல் மும்மூன்று சூத்திரம் ஒவ்வோர் இய லாக நான்கு இயல்களை உடையது என்பது விளங்கும். மேலும் முதல் அடி இடம் கூறு கின்றது. அதனால் முதல் இயல்ஓர் இடத்தில் நிறுத்திப் பொருளின் இருப்பைத் துணிவதா கிய பிரமாணம் உணர்த்துவது என்பது விளங்கும். இரண்டாம் அடிதொழிலைக் குறிக்கின்றது; அதனால் இரண்டாம் இயல் இலக்கணம் உணர்த்துவதென்பது பெறப் படும். மூன்றும் அடி திருவடியைச் சுட்டு கின்றது. அதனால் மூன்றும் இயல்சாதனம் உணர்த்துவது என்பது தோன்றும். திருவடி ஞானம் எனப்படும் சிவஞானமே சாதனம் எனப்படும். நான்காம் அடி திருவடியைப் புனைதல் கூறுகின்றது. அதனால் நான்காம் இயல் திருவடிப்பேருகிய பயன் உணர்த்துவ தென்பது தெரியும்.

(ஈ) இன்னும், மலைவு என்னும் நான் காம் சொல் முதல் அடியிலும் இரண்டாம் அடியிலும் சாரும்படி வைக்கப்பட்டுள்ளது. அது நான்காம் சூத்திரம் மூன்றும் சூத்திரத் தோடு ஒப்ப ஒரு பொருள் மேல் வருவதைக் குறிக்கும்.

(4) முதல்வனுடைய முற்றுணர்வாகிய ஞானசத்தியே வலத் திருவடி. எல்லாம்வல்ல பேராற்றலாகிய கிருபாசத்தியே இடத்திரு. வடி. உயிர்கள் சிற்றறிவும் சிறுதொழிலும் உடையவை. ஆகலின், பெருமக்கள் தமது அறிவும் தமது செயலும் முதல்வனுடைய பேருணர்வையும் பேராற்றலையும் சார்ந்து அவற்றால் செலுத்தப்படும் வகையில் யான் எனது என்னும் செருக்கின்றி அடங்கி இருப்பர். இவ்வாறு ஞாயிற்றின் ஒளியில் கண்ணொளி அடங்கி வேறு காணப்படாமை போலவும், எழுதும்போது, கையின் இயக் கத்தில் பேனுவின் இயக்கம் அடங்கி வேறு செயலின்றி நடைபெறுதல் போலவும், ஒருவர் தமது அறிவும் செயலும் முதல்வ னுடைய அறிவு செயல்களில் அடங்கி நிற்ப, முதல்வனோடு ஒன்றிநிற்றலை முதல்வன் அடிகளை முடிகளில் சூடுதல் எனப்படும். முதல்வன் திருவடி அவன்றன் இயற்கை முற்றுணர்வும் பேராற்றலுமாகிய திருவரு ளைக் குறிப்பதுபோல, நம்மனோர் தலை நமது சிற்றறிவையும் சிறு தொழிலையும் குறிக்கும். இதனைத் திருமந்திரம்

காலுந்தலையும் அறியார் கலதிகள்
கால் அந்தச் சத்தி அருள்என்ப காரணம்
பால் ஒன்று ஞானமே; பண்பார்தலை உயிர்
கால் அந்தஞானத்தைக் காட்டவீ டாமே.

என்னும் பாட்டால் விளக்குகின்றது.

---

வான அம்பர் நாட்டுத்திருக்கடவூர் என்று அவைகளில் காணப்படுகின்றன. இறைவ னின் திருப்பெயர்கள் திருவீரட்டமுடைய பரமசுவாமி, காலகாலதேவர், திருக்கடவூர் நாயகர் என்றும் கூறப்பட்டிருக்கின்றன. உட்படை யேவிய திருக்கடவூர், உட்பாத மேவிய திருக்கடவூர் என்றும் ஊரின்பெயர் குறிக்கப்படுகிறது. இந்தக் கோயிலுள் குலோத்துங்க சோளீச்சரமுடையார், விக்கி ரமசோளீச்சரமுடையார், கூத்தாடுதேவர், இராசராச ஈசுவரர். காலகாலதேவர், திருமால் கோயில்கள் இருந்தனவாக அவைகள் அறிவிக்கின்றன. ஒரு கல்வெட் டில் காடவர்கோன் என்ற குறிப்பு வரு கிறது. மற்றொன்றில் புலியூர்க்கோட்டத் துக் குன்றத்தூர் நாட்டுக்குன்றத்தூர் சேக் கிழான் பராந்தகதேவன் என்று சொல்லப்படு கிறது. குங்கிலியக்கலயனுயனரின் பெயரும் இன்னுமொரு கல்வெட்டில் கூறப்பட்டிருக் கிறது. கல்வெட்டுக்கள் கோயில் பூசை, விழா, விளக்கு முதலியவற்றிற்கு நிலதானம் செய்தது முதலியவற்றைக் கூறுகின்றன.

மலைக்கொ ளானை மயக்கிய வல்வினை
நிலைக்கொ ளானை நினைப்புறு நெஞ்சமே
கொலைக்கை யானையுங் கொன்றிடு மாதலால்
கலைக்கை யானைகண் டீர்கட வூரரே

—திருநாவுக்கரசர்

(5) மலையை வில்லாகக்கொண்டு மும்மல காரியமாகிய திரிபுரங்களை எரித்தவன் என உரைத்தலும் பொருந்துவதே.

(6) இறைவன் அருளுதற்குப் பொல்லார் இணைமலரைப் புனைவர் என்றதனுல், பொல்லாப்பிள்ளையார் சிவபிரானின் வேறல்லர் என்பது விளங்கும்.

(7) பொல்லார் என்பது பொள்ளார் என்பதன் மரூஉவாய், போழ்ந்து செய்யப் படாத சுயம்புமூர்த்தி என்பதைக் குறிக்கின்றது.

(8) அருளிய என்னும் சொல்லை அருளுதற்கு எனப்பொருள் கொள்ளாது பெற்ற (கொடுத்த) எனப் பொருள் கொள்ளுதலும் சாலும்; தனையனுக்குச் செய்யும் வழிபாட்டால் தந்தை கழிபேருவகை எய்துவன் என்பது உலக வழக்கு ஆதலின்.

சிவபிரான் இயற்கை முற்றுணர்வுடையனுய் உயிர்களுக்கு உண்ணின்று உணர்த்துபவன் ஆதலால், அவன் அருளைப்பெற்றுரே மெய்யுணர்வு எய்துபவர். மூத்தபிள்ளையாரை அவன் வடிவ அம்சங்களுள் ஒன்ருகக் கொண்டு இடையூற்றின் நீக்க கருதி வழிபட்டுவருதல் சான்ருேர் மரபு என்பது இப்பாட்டின் திரண்ட கருத்து.

சிவஞான போதத்தின் **கல்லால் நிழல்** எனத்தொடங்கும் மங்கல வாழ்த்துச் செய்யுள் தன் அமைப்பால் நூல் நுதல் பொருளையும் அதன் அமைப்பையும் குறிப்பால் உணர்த்துகிறது என்பது காட்ட முன் தொடக்கம் செய்யப்பட்டது; அது தொடர்ந்து காட்டப்படுகின்றது :—

(9) மங்கல வாழ்த்துச் செய்யுளில் உள்ள பன்னிரண்டு சொற்களுள் மும்மூன்று சொற்கள் ஒவ்வோர் அடியாக அமைந்துள்ளன. இது நூலுள் மும்மூன்று சூத்திரம் ஒவ்வோரியலாக அமைய, அஃது அங்ஙனம் நான்கு இயல்களை உடையதாதலைக் குறிக்கும்.

மேலும், முதலடி **கல்லால் நிழல்** என இடத்தையும், இரண்டாம் அடி, அருளிய எனச் செயலையும், மூன்ரும் அடி இணைமலர் எனத் திருவடியையும், நான்காம் அடி புனைவரே எனப் பேற்றையும் குறித்தலின், நூலின் இயல்கள் முறையே பிரமாணம், இலக்கணம், சாதனம், பயன் என்பவற்றை உணர்த்துவன என்பது உணரப்படும். இன்னும், மலைவு என்னும் நான்காம்சொல் முதலடியையும் இரண்டாம் அடியையும் சார்ந்துள்ளது; இதனுல், நூலுள் நான்காஞ் சூத்திரக் கருத்துரை, 'இதுவும் அது' என மூன்ருஞ் சூத்திரக் கருத்தோடு மாட்டெறியப்படும் என்பது குறிக்கப்பட்டது. இங்ஙனம் மங்கல வாழ்த்துப் பாடலில் தோன்றும் நயம்பல.

(10) பொல்லார் என்னும் சொல் பொள்ளார் என்பதன் மரூஉ ஆகும். பொள்ளுதல் —போழ்தல், செதுக்குதல். இங்குக் குறிக்கப்பட்ட பிள்ளையார் திருவெண்ணெய்நல்லூரில் திருஅருட்டுறை என்னும் திருக்கோயிலில் உள்ள வலம்புரி விநாயகர் ஆவர்; அம்மூர்த்தி சுயம்புமூர்த்தி, அதாவது, மக்களால் போழ்ந்து செய்யப்படாமல் தானே தோன்றிய திருவுரு. இக்காரணம்பற்றியே பிள்ளையார் பொல்லார் (பொள்ளப்படாதவர்) எனப்பட்டார். பொல்லார், சுயம்பு, தான்ருேன்றி என்பவை ஒரு பொருளன.

திருமுறைகளை வகுத்தருளிய **நம்பியாண்டார் நம்பிக்கு** அருள்புரிந்தவர் திருநாரையூர் திருக்கோயிலில் உள்ள பொல்லாப் பிள்ளையார் என்பது இங்கு அறியத்தக்கது.

சிவஞானபோத நூலை அருளிச் செய்த மெய்கண்டதேவர் திருக்கயிலாய பரம்பரை அகச்சந்தான நான்காம் குரவராகிய **பரஞ்சோதி** முனிகள்பால் உறுதிப் பொருள் கேட்டுணர்ந்தார் எனவும், அக் கேட்டபொருளைத் திருவருட்டுறையில் பொல்லாப்பிள்ளையார் திருமுன்பு இருந்து, சிந்தித்துத்தெளிந்து, பின் நூல் இயற்றினர் எனவும் கூறுவது மரபு. ஆயினும், மெய்கண்டதேவர் தம் ஆசிரியர் திருப்பெயரை யாண்டும் கூருமையாலும், வேறு குருவணக்கம் செய்யாமையாலும், நம்பியாண்டார் நம்பிகளுக்குத் திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையாரே அருளாசாணுக முன்னின்று ஆட்கொண்டமை போல, மெய்கண்ட முதல்வருக்கு ஒண்குரவனுய் முன்னின்று கலைஞானமும் பரஞானமும் ஒருங்கே உணர்வித்த மூர்த்தி திருவெண்ணெய் நல்லூர்ப்பொல்லாப் பிள்ளையாரே எனவும், இங்கு ஆராயப்படும் **மங்கல வாழ்த்தே** , குருவணக்கமும் ஆம் எனவும்

ஆய்ந்து துணியும் அறிஞர்களும் உளர் என்பது இங்குக் குறிக்கத்தக்கது.

(11) இறைவன் முற்றுணர்வும் பேராற்றலும் உடையவன்; அம்முற்றுணர்வும் முற்றுத்தொழிலும் (ஞானக்கிரியா சத்திகள்) அவன்றன் வலத்திருவடி எனவும் இடத்திருவடி எனவும் உருவகிக்கப்பட்டு மெய்ந்நூல்களுள் குறிக்கப்படுகின்றன. உயிர்கள் சிற்றறிவும் சிறுதொழிலும் உடையவை. இச்சிற்றறிவையும் சிறுதொழிலையும் பயக்கும் மையங்கள் (Sensory and motor centres) உயிர்களின் தலையில் உள்ளன என்பது தெளிவு. ஆகலின், உயிர்களின் சிற்றறிவு சிறுதொழில்களைத் தலை என உருவகித்தலும் ஞான நூல்களின் வழக்காம்:—இதனை,

'காலும் தலையும் அறியார் கலதிகள்;
கால் அந்தச் சத்தி, அருளென்ப காரணம்;
பாலொன்று ஞானமே; பண்பார் தலைஉயிர்;
கால் அந்த ஞானத்தைக் காட்டவீ டாகுமே'

என்னும் திருமந்திரத்தால் உணரலாம். மிருகேந்திர விருத்தியில் வரும் 'சரணப்ஜ யுகம் பிரணம்ய' என்னும் சுலோக உரையில் அகோர சிவாசாரியர் சரணம் என்னும் சொல் முதல்வன்றன் ஞானக்கிரியா சத்தியின் இணைப்பை உணர்த்தும் எனச் சொற்பொருட் காரணம் (வியுற்பத்தி) காட்டி விளக்குகின்றார்.

முதல்வனுடைய வலத்திருவடி எனப்படும் முற்றறிவை இன்றி நாம் ஒன்றையும் அறியஇயலேம்; அவன்றன் இடத்திருவடி எனப்படும் பேராற்றலையின்றி நாம் ஒன்றைச் செய்யவும் இயலேம்—என உள்ளவாறு உணர்ந்து, யான் எனது என்னும் செருக்குச் சிறிதும் இன்றாகும்படி முதல்வனது பேரருள் நிறைவில் அடங்கி நிற்றலையே மங்கலவாழ்த்துத் திருவடியை முடியிற் சூடிக்கொள்ளுதல் எனக் குறிக்கின்றது.

இச்செயலையே திருவள்ளுவரும் "கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான் தாளை வணங்காத் தலை" எனக் கடவுள் வாழ்த்துள்ளும், 'சார்புணர்ந்து சார்புகெடவொழுகின் மற்றழித்துச்—சார் தரா சார்தரு நோய்' என மெய்யுணர்தற்கண்ணும் குறிப்பித்துள்ளார் என உணர்தல் வேண்டும்.

(12) தாள், தலை என்பவை இருவேறு சொற்கள்; ஆயினும், முன்னிற்கும் தாள், என்னும் சொல்லுடன் பின்வரும் தலை என்னும் சொல் புணர்ந்துநிற்கும்போது, அவை தாடலை என ஒரு சொற்றன்மைப்பட்டு ஒன்றாய் நிற்கும். இதுபோல, சீவான்மாவும் பரமான்மாவும் இருவேறு பொருள்களே யாயினும் சீவான்மா பரமான்மாவுடன் புணர்ந்து நிற்கும் புணர்நிலையாகிய முத்தி நிலைக்கண், அவை பிரிந்து காணப்படுதல் இன்றி ஒன்றாய் நிற்கும். இவ்வாறு நிற்கும் நிலையையே அத்துவிதநிலை, முதல்வன் அடிக்கண் உறைதல், புக்கு ஒன்றி உடனுதல் எனப் பல வாய்பாடுகளால் நூல்கள் குறிப்பிடும்.

இந் நிலையினையே தமிழ்மக்கள் தம் வாழ்க்கையின் முடிநிலைக் குறிக்கோளாக (Ultimate end and aim)க் கொண்டுள்ளனர் என்பதைக் "கற்றுணர்ந் தடங்கல்" என வழங்கும் தொடர் இனிது விளக்கும். அடங்கல்—திருவருளில் தாடலைபோல் அடங்கி நிற்றல்.

(13) இனி, 'சிவபிரான் அருள்புரிதற் பொருட்டுப் பொல்லார் தாளைப் புனைவர்' என மங்கலவாழ்த்துக் கூறிற்று. கூறவே, சிவபிரான் வேறு, பிள்ளையார் வேறு என்பது இன்று; இருவரும் ஒருவரே என்பது பெறப்படும். அங்ஙனமாயின், வேறு வேறு வைத்து வழங்குதற்குக் கருத்து யாதெனின், காண்போம் :

கடவுட்டன்மையின் நிறைநிலையை (பரிபூரண நிலையை) முழுமுதல், ஒருவன், பிறவா யாக்கைப் பெரியோன் என்று எல்லாம் கூறப்படும் சிவபிரான்மேல் வைத்து வழங்குவது ஈசம், கேனம் முதலிய முக்கிய உபநிடதங்களுக்கும், சுவேதாசுவதரம், கைவல்லியம் முதலிய சைவ உபநிடதங்களுக்கும், நாயன்மார்களுக்கும் ஒத்த கருத்தாதலின், அக்கருத்து உணர்த்துதற்கும், ஏனை மூத்த பிள்ளையார், முருகவேள் முதலாகக்கொள்ளப் படும் தெய்வ வடிவங்களெல்லாம் அம் முழுமுதற்கடவுளின் ஏகதேசத் திருவருள் விளக்கங்களாய், அறிவிற்கொண்டு உணர்வோர்க்கு நாள் அடைவில் பரந்த வியாபக வுணர்வைத் தோற்றுவிக்கும் குருமூர்த்தங்களாம் என்பது உணர்த்துதற்கும் வேறுபட வைத்து ஒற்றுமை செய்தார் எனக் கொள்க,

(*14*) மலேவு இல்லார் எனப்பிரிக்காமல் மலே வில்லார் எனக்கொண்டு மாமேருவை வில்லாகக்கொண்டு முப்புரம் எரித்தவர் எனினும் பொருந்தும். முப்புரம் எரித்த போது சிவபிரான் ஏறிய தேர் வைதிகத்தேர் எனப்படும். வேதத்துட் கூறப்படும் தேவர் அனைவரும் இறைவனுக்குப் பாகனுகவும், அம்பாகவும், அம்பின் முனையாகவும், அலகாக வும்—இப்படிக் கருவிகளாகத் தான் ஒரு வனே கருத்தாவாக நின்று, பின்செயல் செய் யும்போது, அவர்தம் உதவியைச் சிறிதும் வேண்டாது புன்னகையால் எரித்தமையின், இறைவன் ஆவான் சருவகர்த்தா என்பதும் அவன் நம்போன்று கருவிகரணங்களைக் கொண்டு செயற்படுதலின்றித் தன் சத்தி சங்கற்ப மாத்திரையால் எல்லாம் இயற்ற வல்லவன் என்பதும் விளங்கும். ஏனைய அறிவுடைப் பொருள்களும் அறிவில்பொருள் களும் அவன் உடைமையாய் அவன் குறிப் பின்வழி நிற்கத்தான் உடையான் ஆக உளன் என்பதும் பெறப்படும்.

கல்லால் நிழல் என்னும் குறிப்பு முதல் வன் தூய உணர்வினன் என்பதும், அஃது அவனுக்கு இயற்கையாக உள்ளது என்ப தும், உயிர்கள் அவன் உணர்த்தின் அன்றி உணரா என்பதும் காட்டி நின்றது.

(*15*) சிவஞான போதத்தின் வழிநூல் சிவஞானசித்தியார். அஃது இங்குள்ள மங்கலவாழ்த்துச் செய்யுளின் பிற்பகுதியின் தாற்பரியத்தைக் காப்புச் செய்யுளாலும். முற்பகுதியின் கருத்தை அறுவகைச் சமயத் தோர்க்கும் என்னும் மங்கலவாழ்த்துச் செய்யு ளாலும் விரித்துரைக்கின்றது காப்புச் செய்யுள்,

ஒருகோட்டன் இருசெவியன் மும்மதத்தன்
நால்வாய் ஐங் கரத்தன் ஆறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ் சடையான்
தருமொருவா ரணத்தின் தாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி ஓவாதே
இரவுபகல் உணர்வோர் சிந்தைத்
திருகோட்டும் அயன்திருமால் செல்வமும்ஒன்
ருேஎன்னச் செய்யுந் தேவே

என்பது.

இது சிவஞான போதத்தில் உள்ள "பொல்லார் இணை மலர்—நல்லார் புணைவரே" என்னும் பகுதியின் தாற்பரியத்தை விளக்கு தல் காண்க. சிவபிரான் பெற்ற, ஒற்றைக் கொம்பு முதலியவற்றையுடைய யானைமுகக் கடவுளின் திருவடிகளை இடையருது சிந்திப் போர்க்கு மனக்கோட்டம் தீரும்; அவர் வானோர்க்கு உயர்ந்த உலகம் எனப்படும் இன் புறு நிலே எய்திச் சிவமாந்தன்மைப் பெரு வாழ்வு பெறுவர் என்பது இப்பாட்டின் பொருள்.

இனி, "கல்லால் நிழல்மலே—வில்லார் அருளிய என்னும் முற்பகுதியின் தாற்பரி யத்தை உணர்த்தும் சிவஞான சித்தித் திருவிருத்தம்,

அறுவகைச் சமயத் தோர்க்கும்
அவ்வவர் பொருளாய், வேறும்
குறியது உடைத்தாய், வேதா
கமங்கங்களின் குறியி றந்தங்(கு)
அறிவினில் அருளால் மன்னி
அம்மையோ டப்பன் ஆகிச்
செறிவொழி யாது நின்ற
சிவனடி சென்னி வைப்பாம்'

எனவரும்.

உலக முதல்வன் ஒருவனே. அவன் அருளாட்சியின் அடங்கியதே இவ்வுலகு; ஆகலின், உயிர்களின் அறிவுவளர் நிலேக்கு ஏற்றபடி முதல்வன் அவற்றின் அறிவு செயல்களின் முடிநிலேக் குறிக்கோளாக நின்று, அவற்றைத் தன்னைநோக்கி அணுகி வரும்படி உலகில் பல சமயநெறிகளைத் தோற்றுவித்து நடாத்தி வருகின்ருன்.

இச் சமயநெறிகள் பற்பலவாக இருத் தலின், அவற்றின் நோக்கையும் போக்கை யும் பகுத்துணர்ந்து தரம் தெரிந்துகொள்ளு தற்பொருட்டு அவற்றைப் புறச்சமயம் அகச் சமயம் என வகைப்படுத்தி வைத்தனர் முன் னேர். வேதசிவாகமம் என்னும் முதனூல்கள் இரண்டனையும் அல்லது அவற்றுள் ஒன்றை அல்லது அதன் ஒருபகுதியைப் பிரமாணம் எனக் கொள்ளாத சமயம் எல்லாம் அறச் சமயம் எனப்பட்டன. இரண்டனையும் பிர மாணம் எனக்கொண்டு பொருட்பெற்றி கூறும் சமயம் எல்லாம் அகச்சமயம் எனப் படும். புறச்சமயங்களும் புறப்புறம், புறம், அகப்புறம் என மூன்று வகைப்படும். வேதத்தை உடன்படாத உலகாயதம், புத்தம். சமணம் என்பவை புறப்புறச் சமயம் எனப் படும். வேத்த்தின் ஒவ்வொரு பகுதியை உடன்

பட்டுப் பிறபகுதிகளையும் சிவாகமங்களை யும் பொருட்படுத்தாத தருக்கம், மீமாம்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்ச ராத்திரம் என்பவை புறச்சமயம் எனப்படும். சிவாகம முடிபுகளைப் பின்பற்றாது அவை திகம் எனப்படும் ஆகமங்களைப் பின்பற்றும் பாசுபதம், மாவிரதம், கபாலம், வாமம், வைர வம், ஐக்கியவாதம் என்பவை அகப்புறச் சமயம் எனப்படும். இனிச் சிவாகமப் பொரு ணிச்சயம் செய்யும்போது பொதுவியல்பு சிறப்பியல்புகளை மயங்கக் கொண்டோர் அனைவரும் அகச்சமயத்தார் எனப்படுவர். பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சிவசங்கிராந்தவாதம், ஈசுவர அவிகாரவாதம், சிவாத்துவிதம் என்பவை அவர்தம் சம யங்கள்.

சித்தாந்தசைவம் என்பது இச்சமயங்கள் அனைத்தினும் வேறாய் இவற்றில் உள்ள நன்மைகள் அனைத்தையும் கொண்டு திரு ஞானசம்பந்தர் முதலிய நால்வர் நெறிபற்றி நிற்பது. மேலே ஒவ்வொரு வகையிலும் ஆறு ஆறு சமயம் அடக்கப்பட்டமையைக் காணலாம். இதற்குப் பொருந்தும் வகையில் புத்தமதம் மாத்தியமாகம், யோகாசாரம், சௌத்திராந்திகம், வைபாடிகம் என நால் வகைப்பட வைத்து எண்ணப்படும். இவற் றின் இயல்புகளைத் திராவிட மாபாடியமும், சிவஞானசித்தி பரபக்கமும், சங்கற்ப நிராக ரணமும் விரித்துரைக்கின்றன.

இனி, அறுவகைச் சமயத் தோர்க்கும் என்னும் சித்தியின் பொருணிலையைக் காண் போம்:—

ஆறு ஆறு ஆக வைக்கப்பட்டுப் புறப் புறம், புறம், அகப்புறம் என மூவகைப் பட்ட சமயத்தில் நின்று ஆராய்வார் அனை வர்க்கும் அவரவர்கொண்ட முக்கியப்பொரு ளாய் இருப்பது முதல்வன் திருவடியே ஆம்; அவர்க்கு வேறாகிய அகச்சமயத்தார் வேதாக மங்களில் பூசை தியானம் முதலியவற்றின் பொருட்டுக் கூறப்பட்டுள்ள தடத்தக் குறி களாகிய திருவுருவம், மந்திரம், நாதவிந்து என்பவற்றை முக்கியப் பொருளாகக் கொண்டு உபாசனை செய்வர்; அவர்க்கு அவ் வப்பொருளாய் நின்று அருள்வதும் முதல் வன் திருவடியே ஆகும். சித்தாந்த சைவர்க்கு அவ்வளவின் வரையறைப்படுதலின்றிக் கடந்து உயிர்க்குயிராய் உள்ளதும், உயிர்க் கெல்லாம் அறிவை விளக்கி வளர்க்கும் அம்மையப்பன் எனச் சத்தி சிவமாய் நிற்ப தும், எங்கும் என்றும் செறிந்து வியாபக மாய் உள்ளதும் முதல்வன் அடி எனப்படும் சிவசைதன்னியமே ஆம். இத்தகைய சிவன் அடியைச் சிரமேற்கொள்வாம்—என்பது பாட்டின் பொருள்.

இதுகாறும் சிவஞானபோதத்தின் பாயிர இயலில் மங்கல வாழ்த்துச் செய்யுளின் பொருணிலை ஆராயப்பட்டது. இனி அவ் வியலின் அவையடக்கம் ஆராயப்படும்.





திருச்சிராப்பள்ளி பாறையடி காமாட்சியம்மன் கோயில் கும்பாபிஷேமம்

வைணவம்

# திருமால் வழிபாடு

## சிலப்பதிகாரத்திற்கு முன்னும் பின்னும்

[பி. ஸ்ரீ]

நாலு மறைகளிலும் கூறப்படும் வேத காலக் கடவுளாகிய திருமாலின் வழிபாடு கண்ணன் வழிபாடாகவே நாடெங்கும் பரவி வைணவமாக வளர்ந்தோங்கிய போதிலும் அதற்கும் - முன்பே—அந்த வேத காலத்திலேயே, திருமால் என்ற மஹாவிஷ்ணு சூரியனாகவும் வழிபடப் பெற்றதாகத் தெரிய வருகிறது. சூரியனைச் சூரியநாராயணன் என்று குறிப்பிடுவதும் திருமால் வழிபாட்டுக்கும் சூரிய வழிபாட்டுக்கும் உள்ள தொடர்பைச் சுட்டிக் காட்டுகிறது. "விஷ்ணுவடிவில் சூரியன் உலகனைத்தும் தாங்குகின்றான். மூவுலகினையும் மூன்றடியில் அளந்தவன், மண்விண் முதலிய பலவுலகங்களிலும் பரவி நிற்கின்றான். ஆதிமறையாகிய ரிக்வேதமும் விஷ்ணுவைப் பேருருவம் (விசுவரூபம்) உடையவனாக வருணித்திருக்கிறது என்றும், அன்பர்களின் விருப்பத்திற்கிணங்க அவ்வப்பொழுது அவதரிப்பவனாகவும் அதே மறை கூறியிருக்கிறது என்றும், ஆகவே வைணவ சமயத்துக்குரிய அடிப்படையை அந்த ஆதிமறையிலேயே காணலாம் என்றும் டாக்டர் இராதாகிருஷ்ணன் கூறியுள்ளார்.

### வைணவமும் வேதமும் தமிழும்

ரிக்வேத காலத்திலேயே இந்திரனுக்கு கண்ணன் (கிருஷ்ணன்) ஒரு பெரிய எதிரியாக இருந்தான் என்ற கொள்கை நிலவியது என்பதையும், இந்திரனுக்கும் கண்ணனுக்குமுள்ள பகைமை குறித்தும் கண்ணனுடைய வெற்றி குறித்தும் பாகவதம் முதலான புராணங்கள் பேசுகின்றன என்பதையும் டாக்டர் இராதாகிருஷ்ணன் குறிப்பிட்டு, இந்தக் கண்ணனே பாகவதர்களால் வாசுதேவன் என்றும் விஷ்ணு என்றும் கொண்டாடப் பெற்றதாகவும் தெரிவிக்கிறார். இந்தக் கண்ணனையே திருமாலாகக்கொண்டு முல்லைநில மக்கள் தமிழ்நாட்டிலும் பண்டைக் காலத்திலேயே வழிபட்டு வந்தனர் என்று தெரிவிக்கிறது தொல்காப்பியம்.

வேதத்தின் பகுதியான சதபத பிராமணத்தில் ஆமையாகவும் பன்றியாகவும் திருமால் உருவெடுத்தான் என்று சொல்லப்படுகிறது. 'எங்கின்ற யோனியுமாய்ப் பிறந்தாய், இமையோர், தலைவ!' என்ற நம்மாழ்வார் வாக்கின் வித்து வேத காலத்திலேயே காணப்படுகிறது எனலாம். தீயோரை அழித்து நல்லோரைக் காப்பாற்ற நான் யுகம்தோறும் அவதரிக்கிறேன் என்ற பகவத்கீதைக் கொள்கையின் வித்தும் வேதகாலத்தில் காணப்பட்டதென்றும், இக்கொள்கையின் விளைவுகள் இதிகாச புராணங்களிலும் பரிபாடல் முதலிய சங்க நூல்களிலும் இடம் பெற்றன என்றும் கூறலாம்.

பாகவத மதம் என்ற வைணவம் புத்தர் காலத்திற்கு முன்பே நிலவியது என்பதற்குச் சான்றுகள் உண்டு. இம்மதத்தில் உயிர்நிலைக் கொள்கை வாசுதேவனையே முழுமுதற் கடவுளாகக்கொண்டு பக்தி செய்தால் முக்தி பெறலாம் என்பதாகும். வாசுதேவனாகிய கண்ணன் சமணசமயம் தொடங்கிய காலத்திலேயே பலர் போற்றும் தெய்வமாகத் திகழ்ந்தான் என்பதற்கும் சான்றுகள் உண்டு. வாசுதேவ வழிபாடு பாணினி காலத்திலேயே பிரசித்தமாக இருந்தது என்பதற்கு பாணினி வியாகரணமே சான்று தருகிறது. கண்ணன் முழுமுதற்கடவுளாக வழிபடப் பெற்றதற்குப் பாணினி ஸூத்ரபாஷ்யம் செய்த பதஞ்சலி சான்று தருகின்றார். கிருஸ்து பிறப்பதற்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்பே வாசுதேவனுக்கு வட இந்தியாவில் கோயில்கள் இருந்தன என்பதற்குக் கல்வெட்டுச் சான்று உண்டு. அக்காலத்திலே கிரேக்கயவனர்களும் பாகவத

ராயினர் என்பதற்கும் சான்று உண்டு. வாசு தேவ வழிபாடு கி.மு. நான்காம் நூற்றாண்டு (சந்திரகுப்தன் காலத்தில்) வழங்கி வந்ததாக கிரேக்கதூதன் மெகஸ்தனீஸ் குறித்துள்ளான். இத்தகைய வழிபாடு சங்ககாலத்திலேயே தமிழகத்திலும் பரவியிருந்தது.

சாந்தோக்கிய உபநிடதம் 'வேதசிரம்' என்னும் 'வேதசிகரம்' என்றும் சொல்லப்படும் பழமையான உபநிடதங்களில் ஒன்றாகும். இந்த உபநிடதத்தில் கண்ணன் தேவகி புதல்வனாகச் சொல்லப்படுகிறான். இக் கதைகள் நாளடைவில் வளர்ந்து இமயம் முதல் குமரி வரையில் பரவியிருக்க வேண்டும். 'அகத்தியனார், தென்றிசைக்கண் போதுகின்றவர், துவராபதிப் போந்து நிலங்கடந்த நெடுமுடி அண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும், பதினெண்குடி வேளிர் உள்ளிட்டாரையும், அருவாளரையும் கொடு போந்து காடுகெடுத்து நாடாக்கிப் பொதியின்கண் இருந்து...' என்று தொல்காப்பியம் எழுத்ததிகாரம் பாயிரத்தில் உரையாசிரியர் நச்சினார்க்கினியர் எழுதியிருப்பதிலிருந்து, கண்ணனின் தொடர்பு தமிழகத்திற்கு மிகவும் பழைய காலத்திலேயே ஏற்பட்டுவிட்டதாகத் தமிழர்கள் நம்பியிருந்தனர் என்று ஊகிப்பது தவறாகாது. நிலம்கடந்த நெடுமுடி அண்ணல் என்று கண்ணன் குறிக்கப்படுவதால் கண்ணனே உலகளந்த விஷ்ணுமூர்த்தி என்ற நம்பிக்கையும் பண்டைத் தமிழர்களுக்கு உண்டு என்று ஊகிக்கலாம்.

'அந்த பக்தர்கள் (நாராயண பக்தர்கள்) பெரும்பாலும் தெற்கில் தாமிரபருணி, காவேரி, முதலிய நதிக்கரையில் காணப்படுவர்' என்று பாகவதம் கூறுவதிலிருந்து, தமிழகத்தில் வைணவம் சிறப்பாகப் பரவியிருந்தது என்று கருதுவதும் மிகையாகாது. எப்படியும் ஆழ்வார்கள் தோற்றுவித்துப் பரப்பிய ஸ்ரீவைஷ்ணவம் தமிழ் நாட்டின் சிறப்பான உடைமைதானே. சங்ககாலத்துக் காதல் பக்திக் காதலாகி ஆழ்வார்களின் பாசுரங்களில் இடம் பெற்றிருக்கிறதல்லவா?— இதற்குரிய வித்தும் தொல்காப்பியத்தில் காணப்படுகிறது. எனவே பக்திக் காதல் நெறியை ஒழுங்குபடுத்தி இந்தியாவெங்கும் பரப்பிய சிறப்பும் தமிழகத்திற்கு உரியது என்லாம்.

## பதினெண் கீழ்க்கணக்கில் வைணவம்

சங்க இலக்கியங்களில் வைணவத்தைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுவதுபோல் திருக்குறளை உள்ள பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலும் காணப்படுகின்றன. அடி மிகுதியில்லாத வெண்பாக்களினால் அறம் பொருள் இன்பம்பற்றி ஐம்பதுமுதல் ஐந்நூறு ஈறாகப் பாடப்பெறுவன கீழ்க்கணக்கு எனப் பேர் பெறும். பதினெட்டு நூல்கள் பதினெண் கீழ்க்கணக்கில் அடங்கியுள்ளன. திருக்குறளை இவற்றின் சிகரஜோதி என்று சொல்ல வேண்டும். இது சாதி சமய வேறுபாடின்றிப் போற்றப்படுவது. இந்தக் கீழ்க்கணக்குக் காலத்திலும் வைணவ சமயம் தமிழரிடையே பரவியிருந்தது.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் திரிகடுகம் என்பதும் ஒன்று. இதில்,

> கண்ணகல் ஞாலம் அளந்ததூஉம், காமருசீர்த்
> தண்ணறும் பூங்குருந்தம் சாய்த்ததூஉம்—[நண்ணிய
> மாயச் சகடம் உதைத்ததூஉம், இம்மூன்றும்
> பூவைப் பூவண்ணன் அடி

என்ற கடவுள் வாழ்த்துச் செய்யுளைக் காண்கிறோம். இந்நூலை இயற்றியவர் நல்லாதனார். இவர் வைணவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதைப் புலப்படுத்துகிறது இந்நூல் முகப்பில் திகழும் கடவுள் வாழ்த்துச் செய்யுள்.

பூங்குருந்தம் சாய்த்ததும் மாயச்சகடம் உதைத்ததும் கண்ணபிரானின் இரண்டு பிரசித்தமான திருவிளையாடல்கள். ஞாலம் அளந்தது திருமால் உலகத்தை அளந்த பிரசித்தமான கதை. எனவே கண்ணனே திருமால் என்ற கொள்கை இந்த வாக்கிலும் உறுதிப்படுகிறது. நாலடியார் என்ற நூலில் சமண சமயிகளின் அருகக் கடவுளின் வாழ்த்தே கடவுள் வாழ்த்தாக அமைந்திருக்கிறது. இந்த வாழ்த்துப் பாட்டில் 'கால்நிலம் தோயாக் கடவுள்' என்று அருகக் கடவுள் வாழ்த்துப் பெறுகின்றார். திரிகடுக ஆசிரியரின் கடவுளோ 'கால் நிலம் தோய நின்ற கடவுள்'.

கம்பன், வாலிகூற்றாக இராமவதாரம் குறித்துப் பிரஸ்தாபிக்கும்போது 'மேலொரு பொருளும் இல்லா மெய்ப்பொருள்......கால் தரை தோயநின்று' என்று வருணிப்பதைக்

காண்கிறோம். கால்நிலம் தோயாத அந்தத் தூய்மையைக் காட்டிலும், கால்நிலம் தோய நின்று பொன்னுடை (பீதாம்பரம்) புழுதி படிய இம்மண்ணகத்தில் மக்களுடன் கலந்து நின்று குலாவும் அருளைப் போற்றுகின்றது வைணவ சமயம். கால்நிலம் தோயும் கடவுளை 'யாம் நிலம் சென்னியுற வணங்கிச் சேர்'வதே வைணவர்களின் சரணாகதி நெறி.

நான்மணிக்கடிகை என்ற கீழ்க்கணக்கு நூலை இயற்றிய விளம்பி நாகனார் என்பவரும் வைணவ சமயத்தினரே. இந்த நூலில் இரண்டு கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள் காணப்படு கின்றன. இந்த இரண்டும் மாயவன் என்ற கண்ணனைப் பற்றியவை. முதலாவது கடவுள் வாழ்த்துச் செய்யுளை முதலில் நோக்குவோம்:

மதிமன்னும் மாயவன் வாள்முகம் ஒக்கும்;
கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கரம் ஒக்கும்;
முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்
எதிர்மலர் மற்றுஅவன் கண்ஒக்கும்; பூவைப்
புதுமலர் ஒக்கும் நிறம்.

இந்தப் பாட்டிலே திருமாலின் திருமேனி நிறம், முகம், கண், சக்கரம் ஆகியவை வரு ணிக்கப் பெறுகின்றன. மாயவனின் ஒளி முகம் சந்திர பிம்பம்போல் இருக்கிறது என் பதை இப்புலவர் பெருமான் சந்திரன் மாயவ னின் ஒளிமுகத்தை ஒக்கும் என்று மாற்றிக் கூறுகிறார். அப்படியே சூரியன் மாயவனின் சக்கரத்தை ஒக்கும் என்றும், தாமரை மலர் கண்ஒக்கும் என்றும், பூவைப் புதுமலர் திரு மாலின் நிறம் ஒக்கும் என்று சொல்லி உப மானம் உபமேயத்தைக் காட்டிலும் மேலா னது என்ற உண்மையைப் பயன்படுத்திக் கொள்கிறார். இந்தப் பாட்டில் 'மாயவன்' கண்ணனையும் திருமாலையும் ஒருங்கே குறிப்ப தாகும்.

இரண்டாவது கடவுள் வாழ்த்துச் செய் யுளிலும் கண்ணனே திருமால் என்ற கருத்து நன்கு புலனாகின்றது.

படியை மடியகத்து இட்டான்; அடியினால்
முக்கால் கடந்தான் முழுநிலம்; அக்காலத்து
ஆன்நிரை தாங்கிய, குன்று எடுத்தான்;
அருமை அழித்த மகன். [சோவின்

'இன்னா நாற்பது' என்ற நூலின் ஆசிரி யர் சிவபெருமானையும், பலராமனையும், திரு மாலையும், முருகனையும் தம் கடவுள் வாழ்த் தில் குறித்துள்ளார், இன்னாநாற்பதில்,

சக்கரத்தானை மறப்பு இன்னா,

என்று கூறியதைப்போல், இனியவை நாற் பதில், ஆசிரியர் பூதஞ்சேந்தனார்,

தொல்மாண் துழாய் மாலையானைத்
தொழல் இனிதே,

எனக் கூறியுள்ளார். திணைமாலை நூற்றைம் பது என்ற நூலில் கடலுக்கு மாயவனையும் வெண்மணலுக்குப் பலராமனையும் உவமை கூறுகிறார் ஆசிரியர். இக்கருத்தை ஒத்த வருணனைகள் வேறு நூல்களிலும் காணப்படு கின்றன. வேறொரு இடத்தில் இருளுக்கு மாய வனையும், நிலவுக்குப் பலராமனையும் இதே ஆசிரியர் உவமை காட்டுகிறார். கார்நாற்பதில் ஆசிரியர் மதுரைக்கண்ணங்கூத்தனார் முல்லை நிலத் தெய்வமாகிய மாயோனை முதற் செய்யு ளில் குறித்துள்ளார்; பலராமனைப்பற்றியும், தம் நூலகத்தே கூறியுள்ளார். 'இவர் வைணவ சமயத்தர் ஆதல் கூடும்' என்பது ஆராய்ச்சி அறிஞர்களின் கருத்து.

## திருக்குறளில் வைணவம்

திருக்குறளிலும் திருமாலைக் குறித்த பிரஸ்தாபம் வருகிறது. திருவள்ளுவரை ஒவ் வொரு மதத்தினரும் எமது மதத்தைச் சார்ந் தவர் என்று கூறுவதுபோல் வைணவரில் சிலரும் தம்மதத்தைச் சார்ந்தவர் வள்ளுவ னார் என்று பேசுவதுண்டு. நூல்களில் சிறந் தது திருக்குறள் என்ற கருத்தை அமைந்த ஒரு செய்யுள் திருவள்ளுவமாலையில் காணப் படுகிறது. இச்செய்யுளின் பிற்பகுதி பின்வரு மாறு அமைந்திருக்கிறது.

தேவில் திருமால் எனச் சிறந்ததென்பவே
பாவிற்கு வள்ளுவர் வெண்பா.

திருவள்ளுவமாலையில் வேறொரு செய் யுளில், 'கண்ணபிரானை வடமதுரைக்கு ஆதா ரம் என்று சொல்லுவர்; இப்பக்கத்தைக் குறித்து, குற்றமற்ற புலமையாகிய தேனைச் சொரிகின்றசெவ்விய நாவாகிய மலரை உடைய திருவள்ளுவரைத் தென்மதுரைக்கு ஆதாரம் என்று சொல்லவேண்டும்' என்ற பொருளைக் காண்கிறோம். கண்ணன் அருளிய பகவத் கீதையை ஒத்த சிறப்பை உடையது திருக் குறள் என்பது குறிப்பு.

வேறொரு செய்யுளில் பரணர் என்ற புலவர் 'திருமால் குறளாக அவதரித்து

வளர்ந்து உலகு அனைத்தையும் அளந்தான். திருவள்ளுவர் தம்முடைய குறள்வெண்பாக்களின் இரண்டு சிறிய அடிகளால் உலகத்தோரால் நினைக்கப்பட்டவற்றை எல்லாம் ஆராய்ந்து அளந்தார்' என்ற கருத்தை வெளியிடுகிறார். திருவள்ளுவமாலையில் இன்னும் ஒரு செய்யுள் திருக்குறளுக்கு, மாபாரதம், இராமாயணம், மனுதரும சாத்திரம், பண்டைமறை ஆகிய இவையே ஒப்பாவன என்று கூறுகிறது.

மடியில்லாத (சோம்பலில்லாத) அரசன் உலகங்களை ஒருங்கே எய்துவான் என்ற கருத்தை வெளியிடும்போது திருக்குறளின் ஆசிரியர் திருமாலைக் குறித்துப் பிரஸ்தாபிக்கிறார்:

மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு

இக்குறளால் உயிர்களுக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு, இறைமைத் தன்மை, எளிமை, முதலியன குறிக்கப் பெறுகின்றன என்ற வைணவர் சிலர் கூறுவதுண்டு. வாமனனாகி வளர்ந்த அவதாரத்தை இங்கே குறிப்பிடுகிறார் குறளாசிரியர். 'இப்பெரியாருக்கு இவ்அவதாரத்திலுள்ள ஈடுபாட்டினாலேயே... திருக்குறள் என்ற பெயரைத் தம் நூலுக்கும் வைத்தனர் போலும்' என்று வைணவர் ஒருவர் 'திருவள்ளுவரும் வைணவமும்' என்ற ஒரு கட்டுரையில் கூறியுள்ளார். வாமனமூர்த்தியைத் 'திருக்குறள் அப்பன்' என்று வைணவப்பெரியோர் கூறுவதுண்டு. இப்படி வேறு ஆதாரங்களையும் காட்டித் திருவள்ளுவருக்கும் வைணவருக்கும் உள்ள தொடர்பைப் புலப்படுத்துவோரும் உண்டு. இவர்கள் கொள்கை எப்படி இருந்த போதிலும் திருவள்ளுவர் திருமாலைக்குறிப்பிடுகிறார் என்பது நிச்சயம்; கௌரவமாகவும் மரியாதையாகவும் குறிப்பிடுகிறார் என்பதில் ஐயமில்லை. 'தாமரைக்கண்ணான் உலகு' என்று பரமபதத்தையும் குறிப்பிட்டு அந்தப் பேரின்ப நிலையையும் குறிப்பாக உணர்த்துகிறார்.

ஆழ்வார்கள் தோன்றுவதற்கு முன்பே சிலப்பதிகாரத்திற்கு முன்னும் பின்னும் உள்ள காலப்பகுதிகளில் வைணவ சமயம் நன்கு வளர்ந்திருப்பதைக் காண்கிறோம். சங்க காலத்திற்கு முன்பே வைணவத்தின் வித்து தமிழ் நிலத்தில் விழுந்து முளைத்தெழத் தொடங்கிவிட்டது. சங்க காலத்திலே இது ஒரு கற்பக விருட்சமாக வளரத் தொடங்கிவிட்டது. பிறகு இத்தருவில் மலர்களையும் காண்கிறோம். இக்கற்பகத்தின் கனிதான் ஆழ்வார்களின் வைணவம்.

---

அவிநாசி ; அவிநாசிலிங்கேசுவரர் ஆலயத்தில் நடைபெற்றுவந்த பெரியபுராணச் சொற்பொழிவின் இரண்டாவது ஆண்டு நிறைவு விழா 2—12—60ல் நடைபெற்றது. தலைமை வகித்தோர் திரு. அ. கந்தசாமிபிள்ளை அவர்கள். சொற்பொழிவாளர் திரு. நா. சரவணமாணிக்கவாசக சுவாமிகள் 'திருக்குறிப்பு தொண்டநாயனார்' என்பது பற்றி உரையாற்றினர்.

திருவொற்றியூர் : படம்பக்கநாதருக்கு புனுகு மெய்ப்பூச்சும் ஆராதனையும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீகாசிவாசி அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகள் அவர்கள் நிறுவிய பேரறக்கட்டளை நிதியிலிருந்து 2—12—60ல் நடத்தப்பெற்றது.

பெண்ணாகடம் : பிரளயகாலேசுவரர் ஆலயத்தில் 28—11—60 மாலை 6 மணிக்கு கடலூர் இந்துமத அறநிலைய ஆட்சித்துறை உதவி ஆணையர் திரு. ஆர். ஏ. வரதராஜன், பி.ஏ., அவர்களால் மின்னொளி விளக்குத் திறப்பு விழா நடத்தி வைக்கப்பட்டது. இவ்விழா செவ்வனே நடைபெற எல்லா ஆலயஅலுவலர்களும் நல்லமுறையில் பங்கெடுத்துக் கொண்டார்கள்.

திருவாஞ்சியம் : வாஞ்சிநாதசுவாமி கோயிலில் முருகப்பெருமானுக்கு கார்த்திகை ஞாயிறு பெருவிழா 1—12—60 முதல் 11—12—60 வரை சிறப்பாக நடைபெற்றது. விழாவின்போது சமயச்சொற்பொழிவுகளும், இன்னிசையரங்குகளும் நடைபெற்றன.

# தவநெறி

தவத்திரு. மாணிக்கவாசகத்தம்பிரான் சுவாமிகள்,
மேலையூர்

## தவம் அவசியம்

ஆன்ம வாழ்வினை இம்மை மறுமை வீடு என மூன்றாகப் பகுத்துள்ளனர் சமய நூலோர். இம்மை என்பது நாம் வாழும் இவ்வுலக வாழ்வு. மறுமை என்பது தேவருலக வாழ்வு. வீடு என்பது இவ்விரண்டினுள் சிறந்ததான பேரின்ப வாழ்வு. இப்பேரின்ப வாழ்வினைப் பெறுவதற்குச் செய்யும் முயற்சியே தவம் எனப்படுவது. ஆன்ம வாழ்வு இவ்வுலகத்தோடு முடிந்துவிடுவதில்லை. இவ்வுலகில் தானெடுத்த உடம்பினை விட்டுப்பிரிந்த ஆன்மா வேறு உடம்பிலோ, வேறு உலகத்திலோ தோன்றியே தீரவேண்டும். இதனை நாத்திகர் தவிர மற்ற சமயவாதிகள் அனைவரும் ஒத்துக்கொள்கின்றனர். எனவே, இவ்வுலக வாழ்வினுக்காகப் பாடுபடுதல் எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் மேலுலக வாழ்வினுக்காகப் பாடுபடுதலும் எனச் சமயநூல்கள் கூறுகின்றன. பொது நெறியில் நின்று உலக அறங்கள் அனைத்தையும் தொகுத்துக் கூறியவர் திருவள்ளுவர் என்பதை நாமறிவோம்.

"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று"

என வேத வேள்வியைக் கண்டிக்கிற திருவள்ளுவருங் கூடத்

"தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றெல்லாம்
அவஞ் செய்வார் ஆசையுட் பட்டு"

எனத் தவஞ்செய்தலின் அவசியத்தை எடுத்துக் காட்டுகிறார். பழந்தமிழர் வாழ்க்கையமைப்பினை நன்கு எடுத்துக் கூறுவது தொல்காப்பியப் பொருளதிகாரம். மனையறங்காத்த நல்லோரெல்லாம் நாளடைவில் உலக இன்பத்தில் ஆசைதீர்ந்து சுற்றமும் மக்களும் சூழ இருந்தே தவம் பயிலுதல் வேண்டும் என அந்நூலும் விதிக்கின்றது.

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"

என்பது தொல்காப்பியச் சூத்திரம். இங்கே 'சிறந்தது' என்பதற்கு "அறம்பொருளின்பங்களிற் சிறந்ததான வீட்டின்பம்" என நச்சினார்க்கினியர் உரை கண்டுள்ளார்.

இனி வேந்தர்களாக வீற்றிருந்து நாடாள்வோரும் வீரவுணர்ச்சி குன்றி சாந்தவுணர்ச்சிமேலிடும் பருவத்தில் தங்கள் மைந்தர்களுக்கு மணிமுடிசூட்டித் தாங்களெல்லாம் தவமே பயிலவேண்டும் என அறநூல்கள் விதிக்கின்றன. அந் நெறியினைப் பின்பற்றியே தசரதன் இராமனுக்கு முடிசூட்டுவதுபற்றி மந்திராலோசனை செய்யும் போது,

"கச்சையங் கடகரிக் கழுத்தின் கண்ணுறப்
பிச்சமுங் கவிகையும் பெய்யு மின்னிழல்
நிச்சய மன்றெனி னெடிதுநா ளுண்ட
எச்சிலை நுகருவ தின்ப மாகுமோ" எனவும்,

"ஆதலா லிராமனுக் கரசை நல்கிப்
பேதமைத் தாய்வரும் பிறப்பை நீக்குவான்
மாதவந் தொடங்கிய வனத்தை நண்ணு வேற(று)
யாதுநுங் கருத்து"

எனவும் கூறுகின்றான். மனையறத்தில் நின்றோரும் மன்னர் மன்னர்களுங்கூடத் தவம் செய்தல் வேண்டும் என்றால் துறவறத்தில் நிற்போரைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ? தவநெறியை வேண்டாதார் துறவறத்தினை மேற்கொள்வது எதற்காக? திருவள்ளுவர் துறவற இயலில் தவம் என்ற அதிகாரத்தை அமைத்திருப்பதே இதனை வலியுறுத்தும். உலகம் நடைபெறுவதற்காக யார் என்ன துறையில் நின்றாலும் எல்லோரும் முடிவில் தவஞ்செய்தலையே குறிக்கோளாகக் கொள்ள வேண்டும் என்பதை இதுவரை ஒருவாறு சிந்தித்தோம்.

## தவத்தின் பெருமை

இனி தவத்தின் பெருமைதான் என்ன என்று பார்ப்போம். விசுவாமித்திரர் முனி

வராதற்கு முன்னர் மன்னவராக இருந்தவர். ஒருசமயம் வசிட்டமுனிவ்ரோடு மாறுபட்டுப் போரிட்டுத் தோல்வியுற்ருர். தனது பேராண்மையும் படை வல்லமையும் அனைத்தும் இம் முனிவர் தவ வல்லமையின் முன் சிதறிப் போயினவே என்ற தனது கூர்த்தமதியால் சிந்தித்துப் பார்த்த அவர் அப்போதே அரச பாரத்தை உதறித் தள்ளித் தவநெறியை மேற்கொண்டார் என அறிகின்ருேம். இலங்கை மாநகரத்தைச் சுற்றிப்பார்த்த அனுமான் அந்நகரத்தின் பெருமை எல்லாம் இராவணன் இயற்றிய தவத்தின் பெருமையல்லவா என வியந்து சிந்திக்கின்ருன். அச் சிந்தனையைக் கவிஞர் வேந்தனுகிய கம்பன்,

"ஈட்டுவார் தவமலால்மற்
றீட்டிஞ லியைவதின்மை
காட்டிஞர் விதியாரஃது
காண்கிற்பார்க் காண்மினம்மா!
பூட்டுவார் முலைபொருது
பொய்யிடை நையப்பூநீர்
ஆட்டுவார் அமரர்மாத ராடுவா
ரரக்கர் மாதர் எனவும்,

"மரம டங்கலும் கற்பக மனையெலாங் கனகம்
அரம டைந்தயர் சிலதிய ரரக்கியர்க் கமரர்
உரம டங்கிவந் துழையவ யுழல்பவ ரொருவர்
தரம டங்குவ தன்றிது தவம்செய்த தவமால்"

எனவும் அழகுபடக் கூறுகின்ருன்.

"ஆழியான் வேதன் அமரர்க்கிறை முதலோர் வாழியாய் என்று வழுத்தியிட வைகும்" பேராற்றலைக் கடுந்தவத்தாற் பெற்றிருந்தான் சூரபத்மன் எனக் கந்தபுராணம் கூறுகின்றது. எனினும், புராணங்களுட் கூறப்படும் இவையெல்லாம் தவத்தின் பெருமையை ஒருவாறு உணர்த்திஞலும் இவை தவத்தின் மெய்ப்பயனுகா. மூர்க்கத்தனமாகக் கடுந்தவஞ் செய்த அசுரர்களும், மென்மையாக வேள்விகளைச் செய்த அமரர்களும் இருசாராரும் பதவிவேட்டைக்காரர்களே. கடவுளைக் காணும் பேறுபெற்றும் அவர்களெல்லாம் ஞானமோக்ஷத்தை விரும்பாமல் பதவி போகங்களையே விரும்பிப் பெற்ருர்கள். உயர்ந்த பதவியும் பெருவல்லமையும் சேர்ந்தால் அவை அவர்களைச் சும்மா இருக்கவிடுமா? முடிவில் தேவர்களும் அசுரர்களும் அடுத்தடுத்துப் போரிட்டுக்கொண்டு அவதியுற்ருர்கள் என்பதைப் புராணங்கள் சித்திரிக்கின்றன. பதவிநிலை எதுவாயினும் அவையெல்லாம் அழிந்துபடும் என்பதும் பதவி உயர உயரத் துன்பமும் அவதியுமே அதிகரிக்கும் என்பதும் புராணங்களால் நாம் அறிந்துகொள்ள வேண்டிய உண்மைகளாகும். சூரபத்மனல் சிறையிலடைக்கப்பட்ட இந்திர குமாரன்,

"வென்றி யரக்கரால் மேதகைய தானவரால்
அன்றி யவுணரா லண்டரா லேனையரால்
ஒன்று செயலொன்று யுறுதுயரத் தாழ்ந்ததன்றி
என்று மகிழ்வா யிடரற் றிருந்தனமே"

என்று புலம்புவதே இதற்குச் சான்ருகும். எனவே பேரின்பத்தையும் அமைதியையும் தருவதே தவத்தின் பெருமையென நாம் உணரவேண்டும்.

## தவம் என்பது எது?

எது தவம் என்று வரையறை செய்து கூறுவது எளிதான காரியமல்ல. பல்வேறு சமய நெறியினர் தங்கள் தங்கள் அனுபவத்திற்கேற்பத் தவநெறிகளையும் பல்வேறு வகையாகக் கூறியுள்ளார்கள். தெய்வக் கொள்கை யில்லாத ஜைன பௌத்தர்களுங் கூட தவம் சீலம் இவற்றை வற்புறுத்துகின்றனர். பௌத்தர்கள் அகிம்சையே தவம் என்கின்றனர். ஜைனர்கள் தலைமயிர் பறித்தல், சுடுபாறையிற் கிடத்தல், ஐம்பொறி யடக்கல் இவற்றைத் தவம் என்கின்றனர். உலக மக்கள் துன்பத்தினைத் துடைக்கும் வழியினைக் கண்டறிவதற்காகக் கௌதம புத்தர் அரசபாரத்தையும் உதறித்தள்ளிப் போதிமரத்தின் நீழலில் ஐந்தாண்டுகள் ஊன் உறக்கமின்றித் தவம் இருந்தார் என அவர் வரலாறு கூறுகின்றது. ஏசுநாதர் வரலாற்றிலுங்கூடப் பன்னிரண்டாண்டுகள் வரை அவர் எங்கிருந்தார் என்ன செய்தார், என்பதை இதுவரை யாருமறிந்திலர். அக் காலத்தில் அவர் மன்பதைக்கு நல்வழி காட்டும் தகுதியினைப்பெற முயன்றிருக்கலாம் என்று எண்ணுவது பொருத்தமல்லவா? எப்படிப் பார்த்தாலும் சமயநெறியை அறிவுறுத்திய பெரியோரெல்லாம் உலக ஆரவாரத்தைவிட்டுத் தனியிடத்தே யிருந்துதான் பல பேருண்மைகளைக் கண்டறிந்தார்கள் என்பது யாரும் மறுக்கமுடியாத தொன்று. ஏன்? விஞ்ஞானிகளுங்கூட உலக நினைவையே மறந்து ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கித் தான் பல புதுமைகளைக் கண்டுபிடிக்கிருர்கள். பழைய விஞ்ஞானியான 'சர். ஐசக்

நியூட்டன்' வரலாறே இதற்குச் சான்று. ஆகவே, வெளியுலகில் தாவி யலையும் மனக் குரங்கை அகமுகமாகத் திருப்பி ஓரிடத்தில் நிறுத்தி ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிப் பசி, களைப்பு, உறக்கம் முதலிய உணர்வின்றி யிருப்பதே தவமெனப் பொதுவகையில் உணரலாம்.

திருவள்ளுவர் கருத்துப்படி தவம் எது என்பதைச் சிந்திப்பது இங்கே பொருத்த மாகும். தெய்வம் ஒன்று உண்டு என்பதோடு தெய்வ வழிபாடும் இன்றியமையாதது என் பதைக் கடவுள் வாழ்த்தில் ஆணியறைந்தது போல வற்புறுத்துகின்றார் திருவள்ளுவர்.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்பது திருக்குறள். இறைவனைப் பற்றுக என்று ஆணைதந்த திருவள்ளுவர் அதனோடு நில்லாமல் உலகப்பற்று அறுவதற்காக இறை வனைப் பற்றுக என அதன் நோக்கத்தையும் தெளிவுபடுத்துகிறார். எனவே, உலகப்பற்று அறுதலும், தெய்வத்தை அடைதலுமே ஆன்ம லக்ஷியம் என்பது திருவள்ளுவர் கருத் தாதல் தெளியப்படும். தெளியவே, தவஞ் செய்தலின் நோக்கமும் இதுவேயென நாம் உணரலாம்.

"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண்
செய்யாமை
அற்றே தவத்திற் குரு"

என்ற திருக்குறள் தவஞ்செய்வார் பின்பற்ற வேண்டிய நெறியினைக் குறிப்பதாகும். அதாவது தவநெறியில் நிற்பார் தமக்கு வருந் துன்பத்தை பொறுத்துக் கொள்வதோடு பிற உயிர்க்கு தீங்கு செய்யாமையும் வேண்டும் என்பதாம். இவை தவத்தின் வடிவம் எனவே தவத்தின் நோக்கமோ தவத்தின் பயனோ வேறு என்பது சொல்லாமலே விளங் கும். தெய்வத்தை அடைவதுதான் தவத்தின் நோக்கம் என்பதை மேலே சொல்லி யுள்ளோம். பகைவரை அழித்தலும், நண் பரை ஆக்கலும், கூற்றம் குதித்தலும், வேண் டியவற்றை யெல்லாம் அடைதலும் தவத் தினால் கைகூடும் என்கின்றார் திருவள்ளுவர். இவை யெல்லாம் தெய்வத்திருவருளின்றி நிறைவேறுமா? சிந்தித்துப் பாருங்கள். அன் பர்களே. ஆகவே திருவள்ளுவர் கருத்துப் படி தவம் என்பது கடவுளை அடைவதற் காகச் செய்யும் முயற்சியே என்பது புலனா கின்றது. சிவபெருமான் தடுத்தாட்கொண்ட பின்னர் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத் துறையூர்ப் பெருமானை வணங்கித் "தலைவா! நின்னை வேண்டிக்கொள்வேன் தவநெறியே" என அவ்வூர்ப் பதிகத்துப் பத்துப் பாடலி லும் வேண்டுகின்றார். யோகநெறியில் நின்று இறைவனை வழிபட்டவர் சுந்தரர் என்பது சைவசமயச் சான்றோர்கள் கருத்து. எனவே அவர் வேண்டிக்கொண்ட தவநெறி யோக நெறிதான் என்பது புலனாகும். பொதுவாகச் சொல்லுமிடத்துத் தவம் என்பதும் யோகம் என்பதும் ஒன்றே எனக்கருத இடமுண்டு. ஆதலால் இங்கே யோக நெறியைப்பற்றிச் சிறிது விரிவாகச் சிந்திப்பது பொருத்தமா கும். 'யோகம்' என்றால் 'ஒன்றுதல்' என் பது பொருள். ஆன்ம அறிவு தெய்வப் பேரறிவோடு ஒன்றுதலே யோகம் எனச் சமயநூல்கள் கூறுகின்றன. அஃது எவ்வா றென்று பார்ப்போம். உடம்பினுள் கட் டுண்டு உலவும் ஆன்மாவினுக்கு சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என ஐந்து வகையான நிலைவேறுபாடுகள் உண்டு. இவற்றுள் சாக்கிரம், சொப்பனம் சுழுத்தி மூன்றையும் நாம் அனைவரும் அனு பவித்து வருகிறோம். மற்ற துரியம், துரியா தீதம் இரண்டும் யோகநெறி கைவந்த ஞானிகள்தான் அனுபவித்துக் காணமுடியும். துரிய நிலையில் இருக்கும்போது ஆன்மாவும் பிராணனும் இருக்கும், துரியாதீத நிலையிலோ ஆன்மாவும் திருவருளுமே இருக்கும். இந்த அதீத நிலையில்தான் ஆன்ம அறிவு தெய்வப் பேரறிவோடு ஒன்றுபட்டு மெய்ப்பொருள் காட்சியினைப் பெறுகின்றது.

இதனையே இன்னும் சிறிது விளங்கக் காணுதல் நல்லது. உலக அமைப்பில் உள்ள அடிப்படைக் கூறுகள் அனைத்தும் ஒவ்வொரு மனித உடம்பிலும் அமைந்துள்ளன. ஆத லால் நமது நாட்டுப் பண்டைய ஞானச் செல் வர்கட்கு அவர்கள் உடம்பே ஆராய்ச்சிக் கூடமாக இருந்தது. திருவருளே வழிகாட்டி. மனமே கருவி. இவ்வாறு உண்மை ஞானத் தைப் பெற்று நமது முன்னோர்கள் உலக முழுவதையும் அளந்து அறிந்தனர். அது மட்டுமா? விஞ்ஞானிகள்கூட இன்னும் இன்னதெனச் சிந்தித்தறியாத உயிரையும் இறைவனையுங்கூடத் தங்கள் அனுபவத்தில்

கண்டனர் என்றால் அந்த யோகத்தின் வல்லமையைத்தான் என்னென்பது! தங்களுக்கு அந்நியமான புற உலகைக் குடைந்து குடைந்து பல புதுமைகளைக் கண்டுபிடிக்கிறார்கள் விஞ்ஞானிகள். என்ன கண்டுபிடித்தும் என்ன பயன்? அணுகுண்டைக் கண்டுபிடித்த மகாமேதையான விஞ்ஞானியுங்கூட மற்ற சாமானியர்களைப்போலவே பசி, களைப்பு, உறக்கம், நரை, திரை, மூப்பு இவற்றிற்காளாகி தான்யார் என்றும், இந்த உடம்புக்குள் ஏன் புகுந்தோம் என்றும் அறியாதவராகி எங்கே போகின்றோம் என்றும் தெரியாமல் எங்கோ போய்விட்டார். அவரால் கண்டுபிடிக்கப்பட்ட அணுகுண்டுங் கூட குரங்கின்கைக் கொள்ளிபோல உலகப் பொதுமக்களை அச்சுறுத்துகின்றது. சுருங்கச் சொல்லுமிடத்து, விஞ்ஞானக்கடலில் மூழ்கி மூழ்கி மூச்சுத்திணறும் நிலையிலுள்ளது இன்றைய மனிதவர்க்கம். இதற்கெல்லாம் காரணம் என்ன? ஆத்மீக வுணர்வும் புலனடக்கமும் இல்லாமல் உண்மை ஞானம் என்பதும் அடியோடு வற்றிப்போனதே என்று சொல்லவும் வேண்டுமா! தவநெறியில் நின்று, புலனடக்கமும் ஆத்மீகவுணர்வும் பெறுமல் விஞ்ஞானத்தை மட்டும் நம்புவதால் மனிதவர்க்கம் நசிக்குமே ஒழிய செழுமையுறாது. ஆதலால், மெய்ஞ்ஞானமும் வேண்டுமென்பதை விஞ்ஞானிகளும் உணரும் நன்னாளை நாமெல்லாம் எதிர்பார்ப்போமாக. தவநெறி, யோகநெறி என்பன ஒன்றே என்பதையும், யோகநெறி என்பது ஏது என்பதையும் இதுவரை ஒருவாறு சிந்தித்தோம்.

## சிவஞானபோதமும் தவமும்

சைவசித்தாந்த முதல் நூலாகிய சிவஞானபோதம் எட்டாவது சூத்திரத்தில், முன் செய்த தவப்பயனாக இறைவனே ஆன்மாக்களுக்குக் குருவாக வந்து உண்மை ஞானத்தைக் கொடுப்பான் என்று கூறுகின்றது. அங்கே, சரியை, கிரியை, யோகங்களே தவம் என்வும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. சிவாலயத்திற்கும் சிவனடியார்கட்கும் தொண்டுசெய்து வழிபடுதலே சரியையெனப் பொதுவகையாற் கூறலாம்.

"சங்கரன்றன் கோயில் தலம் அலகிட்டு திருமெழுக்கும் சாத்தி-போதுகளும் கொய்து பூந்தார் மாலைகண்ணி புனிதற்குப் பல சமைத்து—தீதில் திருவிளக்கிட்டு—திருநந்தவனமும் செய்து—திருவேடம் கண்டால் அடியேன் செய்வது யாது பணியீரென்று பணிந்து—அவர்தம் பணியும் இயற்றுவது" என இச் சரியைநெறி சிவஞான சித்தியாரில் விளக்கமாகக் கூறப்பெற்றுள்ளது. இவ்வாறு தொண்டு செய்தால் மனமாசு அகன்று தூய வாழ்வு மலரும். அவ்வாறு மனமாசு அகன்றவர்கள் ஏதாவதொரு திருவுருவத்தின்மூலம் இறைவனைத் தாங்களே பூசித்தல் கிரியைத் தவமாகும். அபிடேகம் ஆராதனை அர்ச்சனை நைவேத்தியம் முதலிய பல அங்கங்களோடு புறத்தே வழிபாடுசெய்து அகத்தேயும் நெஞ்சத்தாமரையில் அப்பெருமானைப் பாவித்து நிறுத்தி முறையாகப் பூசித்தலே சிவபூசை எனப் பெறுவது. மாயையின் வசப்பட்டு கருவி கரணங்களிற் றோய்ந்து மயங்கும் ஆன்மா இறைவன் திருவருள்வெளியை எட்டிப் பார்ப்பதற்கு இவ்வாறு பூசிப்பதே சிறந்த சாதனமாகும். யோக நெறியைப் பற்றி மேலே கூறப்பெற்றுள்ளது. ஆசனம், பிராணுயாமம், தியானம் என்ற மூன்று அங்கங்களாலாகியது யோகநெறி. வெறும் ஆசனப்பயிற்சி மட்டும் செய்வது யோகமாகாது. அவ்வாறு ஆசனமட்டும் பயில்வது வித்திடாமல் செய்யும் உழவுத்தொழிலைப் போன்றது. தியானத்தில் நிலைத்திருந்து சமாதி கூடுவதற்கு மனஉரமும் உடலுறுதியும் வேண்டும். ஆசனமும் பிராணுயாமமும் முறையே உடலுறுதியையும் மன உரனையும் தரும். பின்னர் தியானம் சமாதியைக் கூட்டும். இவை மூன்றும் சேர்த்ததே யோகம் எனப்பெறும். இங்கே சொல்லிய சரியை, கிரியை, யோகம் என்ற மூன்றும் ஞானத்தை விளைவிக்கும் சாதனங்கள் என்றும் இவையின்றி ஒருவர்க்கும் கற்பனையினுல் ஞானம் விளையாதென்றும் சித்தாந்த நூல்கள் கூறுகின்றன.

## அறமும் தவமும்

மனையறத்தையே மனைத்தவமாக எளிதில் மாற்றிக் காட்டுகிறார் ஆசிரியர் சேக்கிழார்பெருமான். ஞானசம்பந்தரைப் பெற்றெடுத்த தாய் தந்தையர் ஏழாவது நூற்றாண்டின் முற்பகுதியில் சீகாழிப்பதியில் வாழ்ந்தவர்கள். அக்காலத்தில் ஜைன

பௌத்த மதங்களின் செல்வாக்கு இந்தியா முழுவதும் பரவி யிருந்தது. சைவ சமயநெறி குன்றி மறைந்துவிடும்போலிருந்தது. அந் நிலையைக் கண்டு மனம் வருந்திய அப்பெரி யோர்கள் சீகாழிப் பெருமானுகிய தோணி யப்பரிடம் நாள்தோறும் முறையிட்டார்கள். மற்ற சமயங்களை யெல்லாம் வென்று சிவ சமயத் திருவெண்ணீற் றொளியை எங்கும் பரவச் செய்யவல்ல ஓர் அருட்குமரன் தங்கள் குடும்பத்தில் தோன்ற வேண்டுமென் பதே அவர்கள் பிரார்த்தனை. அதனைச் சேக் கிழார் பெருமான்,

"மனையறத்தி லின்பமுறு
மகப்பெறுவான் விரும்புவார்
அனையநிலை தலைநின்றே
ஆடியசே வடிக்கமலம்
நினைவுறமுன் பரசமயம்
நிராகரித்து நீருக்கும்
புனைமணிப்பூண் காதலனைப்
பெறப்போற்றுந் தவம்புரிந்தார்"

என அருளிச் செய்துள்ளார். உலக நன்மைக் காக ஒரு புத்திரன் தோன்ற வேண்டுமென் பதே அவர்கள் குறிக்கோளாக இருந்ததால் அந்தமனை வாழ்வு தவ வாழ்வாயிற்று.

இனி, திலகவதியாரும் தமது தம்பி யாரை வாழ்விக்க வேண்டுமென்ற தயை காரணமாக உயிர் வாழ்ந்தமையால் அதுவும் தவவாழ்வே என அருளிச் செய்துள்ளார் சேக் கிழார் பெருமான். "இம்பர் மனைத்தவம் புரிந்து திலகவதியார் இருந்தார்" என்ற பாடலை நோக்குக. தனக்காக முயல்வது அறம் என்றும் உலக நன்மைக்காக முயல் வது தவம் என்பதும் இதனுல் விளங்கு கின்றது.

**பாவமாகிய தவம்**

இதுவரை மெய்த்தவத்தின் பல்வேறு நெறிகளைப் பார்த்தோம். பாவமாகிய தவம் ஒன்றைச் 'செடித்தவம்' எனச் சுந்தரமூர்த்தி, சுவாமிகள் குறிப்பிடுகின்றுர். பொன் வேண்டுமென்று மனம் புழுங்கி இறைவ னிடம் மன்றுடும் (திருப்பாச்சிலாச்சிரமம்) பதிகத்தில் இதனைக் காணலாம். முதலை வாயிலிருந்து பிள்ளையை மீட்ட அவர் செம் பைப் பொன்னுக்குவது முடியாத காரியமா? அப்படிப்பட்ட வல்லமை இருந்தும் இரச வாதம் முதலியன செய்யாமல் இறைவ னுடனே சண்டையிடுவதுபோல முறையிடு கின்றுர். ஏனெனில், இரசவாதம், காயகல்பம் முதலியன செய்வது உண்மை ஞானநெறிக்கு விரோதமானது. இறைவனுக்குச் சம்மத மில்லாத ஒன்றை நாம் கள்ளத்தனமாகப் பெற முயற்சிப்பதே அத்தகைய செயலாகும். அவ்வாறு முயன்றுல் முடிவில் தீவினையாகித் துன்பத்தையே தரும் என்பதைச் "செடித் தவம் செய்வார் சென்றுழிச் செல்லேன் தீவினை செற்றிடும் என்று" எனச் சுந்தர மூர்த்திசுவாமிகள் அருளியுள்ளார். செடி என்பது பாவம். செடித்தவம் என்பது பாவ மாகிய தவம்—பில்லி, சூனியம், மாரணம், வசியம் இவையெல்லாங்கூட பாவமாகிய தவமே. மந்திரங்களையும் தேவதைகளையும் துணையாகக்கொண்டு செய்வதால் தவம் போலக் காணப்பட்டு முடிவில் தீவினையாகி விடுகிறது. ஆகவே அவையெல்லாம் செடித் தவம் என நாம் ஒதுக்கி விடுவோமாக. உலக நன்மைக்காகவும் உண்மை ஞானத்திற்காக வும் முயலும் முயற்சிகளெல்லாம் மெய்த் தவம் ஆகும் என அறிவோமாக.

[வானெலிப் பேச்சு—வானெலி நிலைய இசைவுபெற்று வெளியிடப்பட்டது.]

---

பூவாளூர் :—திருமூலநாதசுவாமி கோயிலில் 4-12-60-ல் வாரவழிபாடு இரண்டாவது ஆண்டு நிறைவு விழாவும்...பன்னிருதிருமுறை வீதி உலாவும் நடைபெற்றன. திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் வாரவழிபாட்டின் அவசியம் பற்றியும் 'சந்திரகாசா' சரித் திரம் பற்றியும் சொற்பொழிவாற்றினுர்கள். அத்துடன் தேவஸ்தானத்தில் ஓர் நூல்நிலைய மும் திறந்து வைக்கப்பட்டது.

சுசீந்திரம் :—தாணுமாலையசுவாமி கோயிலில் நடைபெறும் மார்கழித்திங்கள் திருவாதிரைத் திருவிழாவில் 30-12-60 முதல் 1-1-61 இம்மூன்று நாட்களிலும் கன்னியா குமரி ஆச்சிராமம் திருப்பனந்தாள் திருமுறை அன்னம்பாலிப்பு வகையரு நிதியிலிருந்து தேவார இன்னிசையரங்கு நடத்தப்பெற்றது.

# உருத்திர பசுபதி நாயனர்

[வித்துவான் திரு சி. அருணைவடிவேலு முதலியார், காஞ்சிபுரம்]

முன்னுரை

## திருவருட் செயல்

உலகம் உய்யச் செய்தலையே தொழிலாகக்கொண்டுள்ள பெருங்கருணைத் தடங்கடலாகிய இறைவன், அவ்வாற்ருல், திருக்கைலையில் தன்னை என்றும் அகலாது அணுக்கத்தொண்டு புரிந்திருந்த ஆலாலசுந்தரரை இந்நிலவுலகில் வருவித்து, ஓர் அரும்பெருஞ் செயலைச் செய்வித்தான். அஃது யாது எனின், வரலாற்று வகையால் உலகம் அறிந்த திருத்தொண்டர்களாகிய உண்மை நாயன்மார்களது வரலாறுகளை எடுத்தோதித் தொகுத்து, அவ்வரலாறுகள் இந்நிலவுலகில் என்றும் மறையாது நின்று நிலவச் செய்த தாம். அதனுலேயே, இன்று நாம் அந்நாயன்மார்களது பெருமையை ஒருவாறு உணரப் பெறுகின்ருேம்.

## திருத்தொண்டத் தொகையின் பெருமை

"மாத வஞ்செய்த தென்றிசை வாழ்ந்திடத்
தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப்
போது வார்அவர் மேல்மனம் போக்கிட"

என்பதனுல் "ஆலாலசுந்தரரது வருகையின் பயன் திருத்தொண்டத்தொகை அருளிச் செய்தலே" எனச் சேக்கிழார் அருளுகின்ருர். அவர் அவ்வாறு அருளிச் செய்யினும், ஆளுடைய நம்பிகளாய் விளங்கிய அவரது அருட்செயல்களில், முதலையுண்ட மகனை அழைத்தது முதலியனபோல, திருத்தொண்டத் தொகையை அருளிச்செய்த செயல் ஓர் அருஞ்செயலாகவும், அவற்றுள்ளும் முதன்மைவாய்ந்த செயலாகவும் நம்மனேர்க்குத் தோன்ருது. ஏனெனில், திருத்தொண்டத் தொகையின் பெருமையைச் சேக்கிழார் உணர்ந்ததுபோல உணரும் ஆற்றல் நம்மனேர்க்குப் பெரும்பாலும் கூடுவதில்லை.

இதனுல், 'ஏனைய வரலாறுகள்போல, உலகம் அறிந்த திருத்தொண்டர் வரலாறுகளை நம்மனேருள் ஒருவர் தொகுத்தல் இயலாதோ! இதற்குத் திருக்கைலையில் இறைவனையே நிகர்த்த ஒருவர் வருதல்வேண்டுமோ" என்று எண்ணத் தோன்றும். அவ்வெண்ணம், 'திருத்தொண்டராவார் எத்தகையோர்?' என்பதை நன்கு உணராமையால் உண்டாவதேயாம்.

'திருத்தொண்டர் இவர்' என்பது அவர்பால் புறத்து நிகழும் செயல்களைக்கொண்டு உணரப்படுவது அன்று; அகத்து நிகழும் அன்பு நிலைபற்றியே உணரப்படுவதாகும். ஆதலின், நம்மனேர்க்குத் திருத்தொண்டர் திருத்தொண்டராய்த் தோன்ருர்; திருத்தொண்டர் அல்லாதார் திருத்தொண்டராய்த் தோன்றுவர். ஒரோவிடத்துத் திருத்தொண்டரையே அறிந்து கூறினும், அவரது பெருமையைத் தக்க வகையாற் கூற வாராது, ஏனையோர் செயல்களைக் கூறுவதுபோலவே கூறவரும். அன்றியும், நாம் வேண்டுதல் வேண்டாமை யுடையோம் ஆகலின், நம் முனைப்பினுல் அவை பற்றிச் சிலவற்றைத் திரிய உணர்தலும், செவ்வையாக உணர்ந்தவற்றையும் திரித்து உணர்த்துதலும் நிகழும். திருத்தொண்டரது வரலாறுகள் நம்மனேரால் இவ்வாறு தொகுக்கப்படுமாயின் உலகிற்கு உய்யும் நெறிகாட்டும் ஒரு பெருஞ் செயலாகிய அது அப்பயனைத் தாராது ஒழியும்; ஆகவே, இச்செயல் நம்மனேரால் இயலக்கூடிய ஒன்றன்ரும்.

இன்னும், ஏனைய வரலாறுகள்போல நாயன்மாரது வரலாறுகளும் நம்முள் ஒருவரால் கூறப்படின், அவற்றை உலக மக்களும், ஏனைய வரலாறுகளுள் ஒன்ருக வைத்து உணர்வார்களேயன்றி, உயிர்க்கு உறுதி பயக்கும் வரலாறுகளாக உணர்ந்து மேற்கொள்ளமாட்டார்கள். நாயன்மார்களது வரலாறு போல்வனவாக வேறு சிலர்க்கு நம்மனேருட் சிலர் வரைந்துவைத்த வரலாறுகள் மேற்சொல்லிய குறைபாடுகள் பலவும் உடையனவாகி, நின்று நிலவாமையே இதற்குப் போதிய சான்ருகும். ஆகவே, சேக்கிழார் அருளியவாறு திருத்தொண்டத்தொகை அருளிச்செய்தல் எத்துணை அரும்பெருஞ் செயலாகும் என்பது விளங்கும்.

## பெரியபுராணச் சிறப்பு

இங்ஙனமாகவே, நாயன்மாரது வரலாறுகளே கடவுள் நெறிக்குக் கதிரவன் போன்றனவாகும் என்பது வெளிப்படை. இதனைச் சேக்கிழாரே பெரிய புராணப் பாயிரத்துட் குறித்தருளினர். நாயன்மாரது வரலாறுகள் திருத்தொண்டத் தொகையாகிய வித்துள் அடங்கி, திருத்தொண்டர் திருவந்தாதியென்னும் முளையாகத்தோன்றி, திருத்தொண்டர் புராணம் என்னும் மரமாகத் தழைத்துக் காலந்தோறும் பூத்துக் காய்த்துக் கனிந்து பயன் தந்துகொண்டிருக்கின்றன. ஆகவே, திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணமே கடவுள் நெறியின் கருவூலமாகும். அதனல் பல்வேறு வகைப்பட ஆய்ந்துணரும் அறிவின் பயன்கள் யாவும் திருத்தொண்டர் புராணத்தை யுணர்தலாகவே முடியும். அம்முடிவு முன்னைத் தவத்தினுலே உண்டாகற்பாலது. முன்னைத் தவம் இல்லாதார்க்குத் திருத்தொண்டர் புராணத்தில் பற்று நிகழாவிடினும், அப்புராணத்தின்கண் அன்பு நிகழப்பெற்ற முன்னைத் தவம் உடையார், அதன் பெருமையைப் பலவிடத்தும் பல்லாற்ருனும் விளங்க உரைத்து வருதல்வேண்டும். அதுவே அவர்கட்கு இறைபணியாய் அமையும். பயன் விளைதல் விளையாமைகளை அவர்கள் நோக்க வேண்டுவதில்லை; அஃது ஆண்டவன் பொறுப்பு. அவ்வாற்ருல் உரைக்கப்பட்டு வருகின்ற நாயன்மாரது வரலாற்றுத் தொடர்ச்சியில், இதன்கண் உருத்திர பசுபதி நாயனர் வரலாறு எடுத்துக்கொள்ளப்படுகின்றது.

## திருத்தொண்டத் தொகைப் பகுதி

இந்நாயனர் திருத்தொண்டத் தொகையுள் தனியடியார்கள் வரிசையில் பதினெரும் எண்ணு முறைமைக்கண் நிற்பவர். அவ்வாறு ஆளுடைய நம்பிகள் அத்திருப்பதிகத்துள் இவருக்கு வணக்கங் கூறிய தொடர்,

"முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்" என்பது.நாயன்மார் பலரையும் எடுத்தோதித் தனித்தனியே அவர்கட்கு, 'அடியேன்' எனக் கூறி வணங்கினராதலின், செய்யுள் பற்றிச் சிறுபான்மை இருவரை ஒருங்கு கூட்டி, 'அடியேன்' என்று அருளிச்செய்த இடங்களிலும் அவ்வாறு 'அடியேன்' என்பதைத் தனித்தனி கூட்டி உரைத்தலே ஆசிரியரது திருவுள்ளக் குறிப்பாகும். அதனல் "முருகனுக்கும் அடியேன், உருத்திர பசுபதிக்கும் அடியேன்" என்பதே இத்தொடரின் பொருளாகும்.

## "அடியேன்" என்று அருளிச் செய்த முறை

திருத்தொண்டர்களது வரலாற்றினைத் தொகுத்து ஓதுவான் வந்தருளிய நம்பியாரூரர்,இவ்வாறு அவர்கட்கு "அடியேன்; அடியேன்;" எனக் கூறவேண்டுவது என்னையெனின், திருத்தொண்டத் தொகையினை ஆளுடைய நம்பிகளைக்கொண்டு அருளுவித்தலே இறைவனது திருவுளக்குறிப்பாயினும், அஃது அவர் வாயிலாகத் தோன்றும் பொழுது, 'வரலாற்றினைத் தொகுத்தளித்தல்வேண்டும்' என்னும் உணர்ச்சியிலிருந்து தோன்றவில்லை; 'யான் இவர்க்கு அடியேனுகும் நாள் எந்நாள்' என்னும் உணர்ச்சியிலிருந்தே தோன்றியது; ஆதலின், வாளா வரலாற்றினைக் குறித்துப் போகாது, ஒவ்வொருவர்க்கும் "அடியேன்; அடியேன்" எனச் சொல்லி வணங்கித் தம் கருத்து நிரம்பப் பெற்ருர் ஆளுடைய நம்பிகள்.

## அடியவர்க்கு ஆளாதலின் சிறப்பு

'ஆளுடைய நம்பிகள் முதற்கண்ணே இறைவன் ஓலை காட்டி ஆட்கொள்ள அவனுக்கு, 'இனி, அல்லேன்' என்னுதவகையில் ஆளாயினரன்ருே? அவர், மீட்டும் அடியார்க்கு ஆளாக வேண்டுவது எற்றுக்கு?' என்னும் ஐயம் நிகழலாம். இறைவனுல் ஆட்கொள்ளப் பெற்று, அவன் தாளை மறவாது

நல்லலர்களும், பரிசுத்தமானவர்களும் அடங்கிய கூட்டத்தையே நீங்கள் நாடவேண்டும்.

கடவுள் நம் பூத உடலைவிட்டு வெளியே இல்லை. ஆகவே, கடவுள் இருக்கிருர் என்பதற்குப் பிண்ட ரூபத்தில் ஒரு அத்தாட்சி இருந்தபோதிலும் அதனுல் அவ்வளவு பிரயோஜனமில்லை. நம் இந்திரியங்கள் மூலமாக அவரை ஒருபோதும் காணமுடியாது. ஏனென்ருல் அவர் அவற்றிற்கு அப்பால்பட்டவர் இந்திரியங்கள் விஷய உணர்ச்சிகளில் ஈடுபடுவதை நாம் நிறுத்தினல் அவரை உணர்ந்துகொள்ள முடியும்.

—*மகாத்மா காந்தி*

உணரும் அருள்நிலையைப் பெற்ற பின்பும், அதனை மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும் உலகவரது சேர்க்கையால், புண்ணிய பாவங்களால் வரும் உலக இன்பத் துன்பங்களையும், அவற்றிற்குப் பற்றுக்கோடாய் உள்ள நிலமுதல் மோகினி ஈறாகிய மாயைகளையும் சுட்டி யுணர்ந்து, முன் போலவே வேண்டுதல் வேண்டாமைகள் கொண்டு இடும்பையுட்படும் மருள்நிலை உண்டாகாதவாறு, மறதியை நீக்கி, மன்னிய சீர்ச் சங்கரன் தாளை மறவாத அருள் நிலையில் சலியாது நிற்கச் செய்வார் அடியவர் ஆகலின், அவருக்கு ஆளாய வழியே இறைவனுக்கு ஆளாயது முற்றுப் பெறுவதாம். ஆனதுபற்றியே ஆரூரர் ஆண்டவனுக்கு ஆளாய பின்னரும் அடியவர்க்கு ஆளாக விரைந்தார். அதனையும் அருள்பவன் இறைவனேயன்றிப் பிறரல்லர் ஆகலின், ஆரூரர் திருவாரூரில் இருந்த அடியவர் திருக்கூட்டத்தைக் கண்டு, "இவர்க்கியான் அடியேனுகப்-பண்ணும் நாள் எந்நாள்" என்று தியாகேசனை நினைந்து உருகினர். அவனும் அவர் அவ்வாறு நினைந்த அப்பொழுது அப்பேற்றினை அவருக்கு அருளினன் என்க.

## திருத்தொண்டர்களது பெருமை அளவுபடாமை

திருத்தொண்டத் தொகையினை அருளுவிக்கத் திருவுளம்பற்றிய இறைவன் அதனை அவ்வாறே அருளும் உணர்ச்சியிலிருந்து தோன்றச் செய்தது என்னை யெனின், திருத்தொண்டர்களது வரலாற்றினை வேறு வகையாற் கூறுதல் இயலாமை பற்றியேயாம். வேறு வகையில் இயலாதென்றல் ஏனெனின், திருத்தொண்டர்களாகிய நாயன்மார்கள் இறைவனைத் தலைப்பட்டு இறைவனே ஆயினர் ஆகலின் அவரது பெருமையும் இறைவன் பெருமைபோல அளவிட்டுக் கூற ஒண்ணுததாம்.

'இறைவன் பெருமை அவனை யடைந்து அவனது பேரின்பத்தில் திளைப்போராலும் அளவிட்டறிய ஒண்ணுது' என்பது திருக்களிற்றுப்படியாருட் கூறப்பட்டது. "நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்—நின்னடியுள்ளி வந்தனென்" என்னும் திருமுருகாற்றுப்படை அடிகளில், "உயிர்களால் இறைவனை நினைத்தலும், வாழ்த்தலும், வணங்கலும் செய்ய இயலுமேயன்றி, அவனது பேரியல்பினை அளவிட்டறிதல் இயலாது" என்பது குறிக்கப்பட்டது. அடியவர் பெருமையும் அத்தகையதேயாகலின், அவரை வணங்கும் வணக்க முறையால் அவரது பெருமையை ஒருவாறுணர்த்துதல் கூடுமேயன்றி, அதனைப் பிற பொருள்களைக், 'குன்றக் கூறல்' முதலிய குற்றங்களின்றிக் கூறுதல் போலக் கூறுதல் இயலாது. அதுபற்றியே முதலாவதாகிய திருத்தொண்டத் தொகையை இறைவன் வணக்க முறையிலே தோன்றுமாறு செய்தான். அதனை அவ்வாறே தங்கள் உணர்வில் இனிதுணர்ந்து வகையும் விரியும் செய்த ஆசிரியர்களும் அவற்றை வணக்க முறையிலேயே அருளிச் செய்தார்கள். இறைவனே வலிய வந்து வல்வழக்கிட்டு ஆட்கொள்ளப் பெற்ற ஆளுடைய நம்பிகளாலும், பொல்லாப் பிள்ளையார் நேர்நின்று அருள்செய்யும் பேறுபெற்ற நம்பியாண்டார் நம்பிகளாலும், தாம் வேண்டியவாறே இறைவன் வானிழலாக, "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுக்கப் பெற்ற சேக்கிழார் நாயனாராலும் அசைவிட்டுக் கூறப்படாது, வணக்கத்தாற் கூறியருளப்பட்ட திருத்தொண்டரது பெருமையை நாமா அளவிட்டு அறிய வல்லோம்!

## ஆளுடைய நம்பிகளது அடிமைத்திறம்

அடியவர்க்கு ஆளாகிய பின்னரே இறைவனுக்கு ஆளாகியது நிரம்புதல் பற்றியே ஆளுடைய நம்பிகள், திருத்தொண்டத் தொகையுள் அடியவர் ஒவ்வொருவர்க்கும் 'அடியேன்' எனக் கூறி, பின்பு, 'யான் அங்ஙனம் அவர்கட்கு ஆளாகியதால், இறைவனுக்கு ஆளாயது நிரம்பப் பெற்றேன்' என, "ஆரூரன் ஆரூரில் அம்மானுக்காளே" என்று அருளிச் செய்தார். 'ஆரூரன்' என்பது தாப்பிசையாய் முன்னும் பின்னும் சென்று இயையும். 'ஆரூரன்' என்பது 'ஆரூரனுகிய யான்' எனப் பொருள் தரும்.

---

பிரார்த்தனை என்றுல் என்ன? கடவுள் என்பவர் யார்? என்றெல்லாம் என்னைக் கேட்கவேண்டாம். பிரார்த்தனையும் தெய்வ நம்பிக்கையும் உறுதியையே பிரதான அடிப்படையாகக்கொண்ட காரியங்களாகும்.
—மகாத்மா காந்தி

ஏகாரம் தேற்றம். இன்னும் இதுபற்றியே இத்திருப்பதிகத்திற்குப் பயன் அருளும் இடத்தும் ஆரூரில் அம்மானுக்கு ஆளா தலையே பயனுக அருளிச் செய்தார், ஆரூரர் என்க.

இறைவனுக்கு ஆளாதல் நிரம்புதற் பொருட்டு அடியவர்க்கு ஆளாதல் வேண்டின், அதற்கு அவர்களது அருள் உணர்வில் ஒரு சிறிதாயினும் விளங்கப் பெறல் வேண்டும். "நாணொடு நல்லாண்மை பண்டுடையேன்; இன்றுடையேன்—காமுற்றுர் ஏறும் மடல்" (குறள்) என்னுமாறு, நன்மக்களையும் நாண் முதலியவற்றின் நீக்கி இழிநிலையிற் செலுத்தவல்ல காமத்தினையும் அழிக்கும் இறையுணர்வைத் திருநீலகண்ட நாயனுரிடம் காண்கின்றோம். யாதும் ஒன்றும் தம் பக்கல் உண்டாயின் அன்னது தம்பிரான் அடியவர் உடைமை என்னும் உணர்வு, மனைவி என்னும் பொருளிலும் பிறழாது நிற்றலை இயற்பகை நாயனுரிடம் காண்கின்றோம். செல்வம் மேவிய நாளில் அன்றி, அல்லல் நல்குரவு ஆனபோதிலும், நீரின் மல்கிய வேணியார் அடியார் திறத்து நிறைந்ததோர் சீரின் மல்கிய அன்பின் மேன்மைதிருந்த மன்னிய சிந்தையை இளையான்குடிமாற நாயனுர்பால் காண்கின்றோம். இவ்வாறே ஏனைய நாயன்மாரிடத்தும் நினைத்தற்கும் எட்டாத பல பெருநிலைகளைக் காண்கின்றோம். இவர்கட்கு ஆளாதல் வேண்டும் எனின், அஃது எளிதில் இயல்வதொன்றோ! இறைவனிடம் வன்மை பேசி, அவனுர்க்கு வன்றொண்டரான வல்லாளராகிய நம்பியாரூரர் ஒருவர்க்கே, அவர்களுள் ஒருவர்க்கன்று, பலருக்கும் ஆளாதல் இயலும். நம்மனோர்க்காயின், அம்மம்ம! ஒருவர்க்கு ஆளாதல் என்பதும் அரிதினும் அரிதே!

நாயன்மாரிடத்து, அவரையும் அவரை அடைந்தாரையும் உய்விக்கவல்ல பல்வகையான அரிய அருள் உணர்வுகளுள், உருத்திர பசுபதி நாயனுரிடத்துக் காணப்பட்ட அருளுணர்வினை நாம் அறிந்த அளவில் சிறிது உணர முயல்வோம், இவரது வரலாறு நிகழ்ச்சி வகையால் சிறிதேயாம். நாயன்மாரது வரலாறுகள் நிகழ்ச்சி வகையால் சிறிதாயினும், பெரிதாயினும், அவர்கள் உள்ளத் துணர்வுகள் ஒருபடியவாக மிகப் பெரியனவேயாம். அப் பெரிய உணர்வுகளை உணர்த்துவதனுலேயே திருத்தொண்டர் புராணம் பெரிய புராணமாயிற்று.

## நாயனுர் தோற்றமும் தொண்டும்

உருத்திர பசுபதி நாயனுர், சோழநாட்டில் மாயூரத்தினின்றும் சுமார் 10 மைல் தொலைவில் உள்ள திருத்தலையூரில் வேதியர் குலத்தில் தோன்றியருளினுர். வேதியர் குலத்தில் தோன்றினமையால் வேதத்தை ஓதுதலே இவரது தொழிலாயிற்று. முன்னைத் தவ முதிர்ச்சியால் இவருக்குச் சிவபெருமானுக்குத் தொண்டு செய்யும் விருப்பம் உளதாயிற்று. இதனை "துங்கவேதியர் குலத்தினில் தோன்றிய தூயோர் செங்கண்மால் விடை யார்செழும் பொன்மலை வல்லி—பங்கனுர்அடிமைத்திறம் புரிபசு பதியார்" எனக் குறித்தருளினுர் சேக்கிழார் நாயனுர். தமது விருப்பத்தின்படி சிவபிரானுக்குத் தொண்டு பூண்டொழுகுதலைத் தமது தொழிலுக்கேற்ற வகையிலேயே இவர் மேற்கொண்டார்.

## வாழ்க்கைக்கேற்பத் தொண்டுபுரிதல்

நாயன்மார்கள் இறைவன் திருத்தொண்டினைத் தங்கள் தொழில் வகையோடு ஒன்றுபடவே செய்து வந்தார்கள்: திருநீலகண்டர், அடியவர்களுக்குத் திருவோடு கொடுத்து வந்தார்; இளையான்குடி மாறர், அடியார்களுக்குத் திருவமுது படைத்து வந்தார்; திருநாளைப் போவார், திருக்கோயில்களுக்குப் பேரிகை முதலிய வாத்தியங்களுக்குத் தோலும் வாரும் வீணைக்கும் யாழுக்கும் நரம்பும், பூசைக்குக் கோரோசனையும் கொடுத்து வந்தார்; அதிபத்தர் மீன் ஒன்றைச் சிவபெருமானுக்கென விட்டு வந்தார்; இவ்வாறே பிறரும் தங்கள் தங்கள் தொழி

---

கோழைத்தனத்தைக் கொள்ளுவதா, இம்சையைக் கொள்ளுவதா, இரண்டில் ஒன்றைக் கொள்ளுவது இன்றியமையாத காரியம் என்ற சந்தர்ப்பம் ஏற்படும்போது, இம்சையை கைக்கொள்ளும் படியாகத்தான் நான் உபதேசிப்பேன். இந்தியாவுக்கு அகௌரவத்தைக் கோழைத்தனத்துடன் பார்த்துக்கொண்டிருப்பதை விட, ஆயுதம் தாங்கிப் போரிடுவதையே நான் ஆதரிக்கிறேன். ஆனுல் இம்சையைவிட அஹிம்சை எவ்வளவோ உயர்ந்ததென்று நான் நம்புகிறேன். —மகாத்மா காந்தி

னுக்கு இயைபத் திருத்தொண்டு புரிந்து வந்தனர். அவ்வாறே உருத்திர பசுபதிநாய ஞர் வேதத்தின் சிவபிரானை வழுத்தும் 'சீருத்திரம்' என்னும் பகுதியை நியமமாக ஓதுதலை மேற்கொண்டார்.

## சீருத்திரத்தின் சிறப்பு

சிருத்திரம், 'திருவுத்திரம்' எனவும் வழங் கப்படும். வேதத்துள் மிகச் சிறந்த பகுதி இதுவே. இப்பகுதியானது, "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப் பொருள் காண்ப தறிவு" (குறள்) என்ற வாறு சிவபிரான் எல்லாப் பொருள்களிலும் நிறைந்து அவையேயாய் நிற்கும் நிலையை விளக்குதலைப் பெரும்பான்மையாகக் கொண்டு, உயர்ந்த பொருள் தாழ்ந்தபொருள் என்னும் பகுப்பின்றி அவை எல்லாவற்றை யும் தனித்தனி எடுத்தோதி அவற்றெடு படுத்துச் சிவபெருமானுக்கு வணக்கங் கூறு கின்றது, இன்னும் அப்பெருமான் உயிர் களுக்குப் போக மோட்சங்களைக் கொடுத் தருளுதற் பொருட்டுக் கொண்டருளும் போக வடிவம் யோக வடிவங்களுடன், வினைகளைப் போக்கியருளும் வேக வடிவத்தினை இனிது விளக்கி வணக்கங் கூறுகின்றது. மற்றும் சிவபிரானது முதன்மையைப் பலபடியாக விரித்துரைக்கின்றது. சிவநெறியின் மூலமந் திரமாகிய திருவைந்தெழுத்தும் இதனுள்ளே தான் அமைந்துள்ளது. இன்ன காரணங் களால் இது வேதத்தில் மிக உயர்ந்த பகுதி யாகும். இதுபற்றி, 'வேத புருடனுக்குச் சிருத்திரம் கண்; திருவைந்தெழுத்து அக் கண்ணினுள் மணி' எனக் கூறுவர். இதனால், சிவாலயங்களில் இது நித்திய நைமித்திக காலங்களில் மிகுதியாக ஓதப்படும். இப்பகுதி யைக்கொண்டு சிவபிரானை வணங்க உடன் படாத வடமொழிவாணர் சிலர், "தனக்கு உதவாத பாலை ஊற்றிக் கவிழ்ப்பது" என் னும் முறைப்படி, "ஸ்ரீருத்ரம் அக்னிபரம்" எனக்கூற முற்படுவராயினும், அது சிவபரம் என்பது உலகமறிந்தது. ஆதலின், வேதியர் குலத்தில் தோன்றிய திருத்தொண்டராகிய உருத்திர பசுபதி நாயனருக்கு அதன்கண் ஈடுபாடு உண்டாகியது இயல்பே.

## நாயனர் திருவுருத்திரத்தினைச் சிறப்பாக ஓதல்

இதனால் இவர் திருவுருத்திரத்தினை நாள்தோறும் நியமமாகப் பேரன்போடு ஓதி யும், ஏனைய வேதப் பகுதிகளைப் பொதுவாக முறைப்படி சிறிது சிறிதாக ஓதியும்வந்தார். இதனைச் சேக்கிழார், "ஆய அந்தணர் அரு மறை உருத்திரங்கொண்டு—மாய னுர்அறி யாமலர்ச் சேவடி வழுத்தும்—தூய அன் பொடு தொடர்பினில் இடையருச் சுருதி— நேய நெஞ்சின ராகியத் தொழில்தலை நின் ருர்" என்று அருளுகின்ருர். இதனுள். 'தொடர்பு' என்றது பிறப்புரிமையினை. உருத்திரங்கொண்டு வழுத்தியதைத் "தூய அன்பு" என்றும், சுருதி நேயத்தைத் "தொடர்பு" என்றும் சேக்கிழார் அருளிய நயம் மிக்வும் ஓர்ந்துணரற்பாலது.

## நாயனரது அருந்தவம்

மந்திரங்களை ஓதுதற்குப் பல நிலைகள் சொல்லப்படும். அவற்றுள் நீரில் நின்று ஓதுதல் ஒருசிறந்த நிலை. அந்நிலையினை, தாம் பெரிதும் விரும்பிப் பயிலும் திருவுருத் திரத்தினை ஓதுதற்கு இந்நாயனுர் கைக் கொள்ள நினைத்தார். அதனால், இவர் தம் ஊரில் உள்ள ஒருபெரிய தாமரைக் குளத் திற்குச்சென்று கழுத்தளவான நீரில் இறங்கி, இருகைகளையும் தலைமேற் குவித்துக்கொண்டு சிவபிரானை ஒருமைப்பட்ட மனத்தால் நினைந்து நின்று, அதனை மெய்யன்போடு ஓதி னுர். மெய்யன்பாவது, அவ்வுருத்திரத்தினை ஓதுதலால் பலவகையான பயன்களையும் பெறலாமாயினும், வேறு பொருள்களைப் பயனுக விரும்பாது, சிவபிரானது திருவடி சேர்தலையே பயனுகக் கொள்வது. இதனைத், "தள்ளு வெண்டிரைக் கங்கைநீர் ததும்பிய சடையார்—கொள்ளும் அன்பு" எனக்குறித் தருளினுர் சேக்கிழார் நாயனுர். "கொள்ளும் அன்பினில் உருத்திரங் குறிப்பொடு பயின்

---

உலகத்தில் நான் யாருக்கும் பயப்படமாட்டேன். கடவுளுக்குத்தான் பயப்படுவேன். யார் மீதும் நான் கெட்ட எண்ணம் கொள்ளமாட்டேன். யாருடைய அநீதிக்கும் நான் பணியமாட்டேன். நான் உண்மையினுல் பொய்யை வெல்லுவேன். பொய்யை எதிர்த்து போராடுவதில் நான் சகல துன்பங் களையும் எதிர்த்துப் போராடுவதில் நான் சகல துன்பங்களையும் எதிர்த்து போராடுவேன். தினந்தோறும் காலையில் முதல் காரியமாக மேற்கண்ட தீர்மானத்தைச் செய்துகொள்ளுவோமாக. —மகாத்மா காந்தி

ரூர்'' என்பதில் 'குறிப்பு' என்றது மறவாது நினைத்தலாகிய தியானத்தை. நாயனூர் நின்ற தடாகத்தில் செந்தாமரை மலர்கள் நிரம்பப் பூத்திருந்தமையால் அவர் நெருப்பிடை நின்று தவம் செய்பவர்போலக் காணப்பட்டார் என் கின்ருர் சேக்கிழார்.

இவ்வாறு நாயனூர் ஓதியது, ஒருநாளில் சிறிது நேரமாகப் பலநாட்கள் நிகழ்ந்ததாகச் சொல்லப்படவில்லை. அவர் உருத்திரத்தினை ஓதிவந்தது பல நாட்களாய் இருக்கலாம். ஆயினும், கழுத்தளவினதாகிய நீரில் நின்று ஓதியது ஒருமுறையே தொடர்ச்சியாகச் சில நாட்களில் நிகழ்ந்து முற்றுப்பெற்றது எனக்கொள்ள வேண்டியிருக்கின்றது. அது, "அருமறைப்பய ஞகிய வுருத்திர மதனை— வருமு றைப்பெரும் பகலும்எல் வியும்வழு வாமே...... சிலநாள்—ஒருமை உய்த்திட'' என்னும் சேக்கிழார் திருமொழியில், "பகலும் எல்லியும் (இரவும்) வழுவாமே'' எனவும், "சில நாள்'' எனவும் போந்த குறிப்புக்களால் விளங்கும். இதனுல், நாயனூர் திருவுருத் திரத்தை நீரில் நின்று ஓதவிரும்பி அதனைத் தொடங்கிய அன்றே தம்மை மறந்து அம் மந்திர உணர்வில் ஒன்றுபட்டுவிட்டார் என் பது புலனுகும். "பகலும் எல்லியும் வழு வாமே'' என்றது, 'பகலும் இரவும் இடை யருது ஒருநிலையிலே நின்ருர்' என்றவாரும். இந்நிலையில் சில நாட்களே உடல் நிற்குமாத லால், "சிலநாள்'' என்று அருளிச் செய்தார். ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்களும் தமது பெரியபுராண உரைநடையுள், "அகோராத் திரம் கழுத்தளவினதாகிய தண்ணீரிலே நின்றுகொண்டு...... ஸ்ரீருத்திரத்தினை ஓதி, சிலநாட் சென்றபின் சிவபதத்தை அடைந் தார்'' என்று எழுதியுள்ளார்கள். "அங்க மல வாவியிடை அல்லும் எல்லும் அகலாதே ஆகளமாய் அமர்ந்து நின்று'' என்றது திருத் தொண்டர் புராண சாரம். "ஆகளமாய்'' என்பதற்குக் 'கழுத்தளவாக' என்பது பொருள். எனவே, திருத்தொண்டர் திரு வந்தாதியுள், "உந்தாத அன்பொ டுருத்திரஞ் சொல்லி'' என்பதில், 'உந்தாத' என்பதற்கு, 'மனத்தை உடற்மேற் செலுத்தி, அதனுல் உடலைக் கரைக்கண் செலுத்துவியாத' என் பதே பொருள் என்பது பெறப்படும். 'இறங்கு துறையில் நீத்தாயிற்று' என்னும் முறை மைத்தாய், தொடங்கிய அப்பொழுதே தம்மை மறக்கும் நிலையில் அளவிறந்து பெரு கிய நாயனூர் அன்புணர்வுதான் என்னே! இத்தகைய உணர்வைத்தான் நாம் நாயன் மார்களிடம் காண்கின்ருேம்.

## நாயனூர் சிவபுரி சேர்தல்

கழுத்தளவான நீரில் நின்று திருவுருத் திரத்தை ஓதத் தொடங்கிய நாயனூர் அவ் வுணர்விலேயே ஒன்றிவிட்டார். காலக் கழிவையும், இரவு பகல்களின் மாற்றத்தை யும், நாட் கணக்கையும் அவர் அறிந்திலர். இவ்வாறே நாட்கள் சில செல்லவும் இவரது ஒருமைப்பாடு வேறுபடாதது கண்டு, சிவ பிரான் திருவுளம் மகிழ்ந்து அருள்புரிய, இவர் சிவபிரானது திருவருள் உலகை அடைந்தார். இதனை,

> "காதல் அன்பர்தம் அருந்தவப் பெருமையும் கலந்த
> வேத மந்திர நியதியின் மிகுதியும் விரும்பி
> ஆதி நாயகர் அமர்ந்தருள் செய்யமற் றவர்தாம்
> தீதி லாநிலைச் சிவபுரி எல்லையிற் சென்ருர்.''

என்று சேக்கிழார் நாயனூர் அருளிச்செய் தார்.

## சில நாட்களிலே முத்திபெற்ற சிறப்பு

கண்ணப்பர் ஆறு நாட்களிலே முத்தி பெற்ருர் என்று அறிகின்ருேம். அதுபோல இந்நாயனுருக்கு நாட்கணக்கு அறியப்பட வில்லையாயினும், 'சில நாட்களிலே முத்தி பெற்ருர்' என்பது இனிது பெறப்படுகின்றது. இவர் உருத்திரம் பயின்றது பலநாட்களா யினும், நீரில் நின்று ஓதும் நியமத்தை மேற் கொண்டது சில நாட்களேயாம். பன்னெடுங் காலம் தவம் கிடந்தும் அடைதற்கரிய முத் திப் பேற்றினைச் சிலநாட்களிலே இவர் பெற்றது, இவரது ஒருமையுணர்வின் மிகுதி யாலேயாம்.

## நாயனுரது ஒருமையுணர்வின் சிறப்பு

நம்மைப்போல இவருக்கும் மனைவி மக்கள் முதலிய சுற்றத்தினர் இருந்திருப்

---

தர்க்கத்தின் மூலம் மட்டும் உலகம் ஆளப்படுவதில்லை. வாழ்க்கையே ஒரு மாதிரியான இம்சைக்கு இடம் தரத்தான் செய்கிறது. அதனுல், குறைந்த இம்சையுள்ள வழியை மட்டுமே நாம் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். —மகாத்மா காந்தி

பார்கள் அன்றோ! அவரைக் காத்தல்வேண்டும் என்னும் எண்ணமாவது, தம்மைக் காத்தல் வேண்டும் என்னும் எண்ணமாவது இவரது ஒருமை உணர்வைச் சிதைத்தனவா? அல்லது நீர்நிலையில் நின்றபொழுது, குளிராயினும் நீர்வாழ் உயிர்களின் இடையூறாயினும் இவரைத் தாக்கினவா? இல்லை. இத்தகைய ஒருமை உணர்வு ஒருவர்க்கு வாய்த்தல் என்பது எளிதானதோ? இவர், 'நாயனார்' ஆனது இவ்வொருமை யுணர்வினாலே யன்றி, இவரது குலப்பெருமை முதலியவற்றால் அன்று என்பது வெளிப்படை. உலகத்தார் கொண்டாடும் குலம், செல்வம், அதிகாரம் முதலிய பலவகைப் பெருமைகளை உடையவர்கள் அவற்றாலேயே நாயன்மார்கள் ஆகிவிடுதலும் இல்லை; அவை இல்லாதோர் அதுபற்றியே நாயன்மார் ஆகாதொழிதலும் இல்லை. இறைவனிடத்து ஒன்றிய ஒருமை உணர்வு ஒன்றினாலேயே பெருமக்கள் நாயன்மாராவர். 'நாயனார்' என்பதற்கு 'நடாத்துநர்' என்பது பொருள். இறைவனிடத்து வைத்த ஒருமை யுணர்வினால் உலகத்தாரை மெய்ந்நெறிக்கண் நடாத்தும் தலைவர் நாயனாராவர். இவர்களது ஒருமை யுணர்வின் பெருமையை, "ஒருமையால் உலகைவெல்வார்" எனத் திருவாரூர்ப் பெருமான் ஆளுடைய நம்பிகளுக்கு விளக்கியருளினான். அவ்வாறே இந்நாயனார் தமது ஒருமை உணர்வால் உலகை வென்றார்.

திருவுருத்திரத்தை நீருள் நின்று ஓதுங்கால், "மக்களே மணந்த தாரம் அவ்வயிற்றவரை யோம்பும் சிக்குளே" (குறைந்த திருநேரிசை) அழுந்துதல் தவிர்ந்தார்; அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் என்னும் ஐவகைக் கோசங்களாகக் கூறப்படும் தூலம், சூக்குமம், பரம் என்னும் மூவகைச் சரீரத்துட் கட்டுற்று நில்லாது நீங்கினார். அங்ஙனம் நீங்கவே திருவுருத்திரத்தை அதிட்டித்து நிற்கும் சிவசத்தியாகிய திருவருளே தாரகமாய் நிற்கப் பெற்றாராதலின், தீதிலாநிலைச் சிவபுரி எல்லையில் எளிதிற் சென்றார். "தீதிலாநிலை" என்பதில், 'தீது' என்றது பிறப்பினை. எனவே, மாணிக்கவாசகர், இறைவனை, "மீண்டு வாரா நெறியருள் புரிபவன்" என்று அருளிச் செய்தவாறு, "ஆதி நாயகர் அமர்ந்தருள் செய்ய" என இங்குச் சேக்கிழார் அருளியது, இறைவன் இவருக்கு மீட்சியில்லா நெறியை அளித்ததையே குறித்ததாயிற்று. இங்ஙனம் சின்னாட்களிலே, இறைவன், மீட்சிகூடாத ஓர் உயர்நிலையை அளிக்கப்பெற்ற இந்நாயனாரது அன்பின் பெருமையை நாம் எவ்வளவினது என்று கூற இயலும்! இவருக்கு ஆட்படின், அவ்வாறு ஆட்படுவோர்க்கும் இந்நிலை கைகூடுமன்றோ!

## முடிவுரை

பசுபதியார் என்பதே இவரது இயற்பெயர். உருத்திரத்தினை ஓதி இறைவன் திருவடி நிழலை அடையப் பெற்றமையால், 'உருத்திர பசுபதியார்' எனப் பெயர்பெற்றார். இவரது மனத்திற்கு உகந்த தோத்திரமாயும் மந்திரமாயும் உள்ள சீருத்திரத்தினை ஓதுமாற்றால் இறைவனை உணரும் ஒருமை யுணர்வே இந்நாயனார்பால் காணப்பட்டமையின், இந்நாயனாரை நாம் அறிந்த அளவில் வாழ்த்தி வணங்கி, அவருக்கு ஆட்பட்டு அத்தகையதோர் அருளுணர்வைப் பெறுவோமாக.

"முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்"

---

நஞ்சாவூர் :—பிரகதீசுவரர் கோயிலில் திருப்பாவை—திருவெம்பாவை மாநாடு 16-12-60, 17-12-60-ல் நடைபெற்றது. முதல்நாள் சென்னை அறநிலைய ஆட்சித்துறை அமைச்சர் கனம் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் மாநாட்டுக்குத் தலைமை வகித்தார்கள். இருநாட்களிலும் சமயப்பெரியோர்களின் சொற்பொழிவுகளும் நடைபெற்றன.

கோட்டூர் :—கொழுந்தீசுவரசுவாமி கோயிலில் திருப்பாவை—திருவெம்பாவை மாநாடு 18—12—60-ல் திரு. வி. சீனிவாச அய்யர், பி. எஸ்ஸி., பி. டி., அவர்கள் தலைமையில் நடைபெற்றது. 'திருப்பாவை', 'திருவெம்பாவை', 'அடியாரும் ஆழ்வாரும்' என்னும் பொருள்கள் பற்றியும் சொற்பொழிவுகளும் நடைபெற்றன,

# வேளிமலைக்குமார கோயில்

கன்னியாகுமரி மாவட்டத்தில் கல்குளம் பகுதியிலுள்ளது சிறந்த முருகனது திருப்பதியான வேளிமலைக் குமாரகோயில். இத்தலம் நாகர்கோயிலுக்கு வடக்கே சுமார் 10 கல்தொலைவிலிருக்கிறது. நாகர்கோயிலிலிருந்து திருவனந்தபுரம் செல்லும் நெடுஞ்சாலையில் 8 கல்போய், தென்கரை என்ற ஊரிலிருந் நுகிளைச்சாலைவழியே இரண்டு கல்போனுல் இப்பதியை அடையலாம். தென்கரைக்கு அருகிலுள்ள தக்கலை என்ற ஊரிலிருந்து வாடகை மோட்டார் (Taxi) வண்டியிலும் செல்லலாம்.



வேளிமலைக் குமாரகோயில் முன்தோற்றம்

நாஞ்சில் வளநாட்டில் குறிஞ்சி நிலப்பகுதியில் இத்திருத்தலம் இருக்கிறது. பெருமலைப்பகுதியின் சரிவில் ஒரு சிறுமலை மேல் முருகன் திருக்கோயில் அமைந்திருக்கிறது. கோயிலுக்கு வடக்கே மலைப்பகுதி. மற்ற மூன்று பக்கங்களிலும் மலையடிவாரத்தில் தெருக்கள். அந்தத் தெருக்களையொட்டிப் பின்புறம் மூன்று பக்கங்களிலும் ஏரி நீர் பரப்பு மலைமேல் நின்று பார்த்தால் இயற்கையன்னையின் எழில் நலம் இன்பம் பயக்கின்றது. இந்த மலையை வேளிமலை என்பர். மலையாள மொழியில் வேளி என்ருல் திருமணம் என்று பொருள். முருகப்பெருமான் வள்ளியம்மையை இங்கு திருமணம் செய்துகொண்டதால் இப்பெயர் வந்ததென்பர். ஆனுல் இப்பகுதியிலுள்ள மக்கள் குமாரகோயில் என்றே வழங்குகின்றனர்.

மலையடிவாரத்தில் கிழக்கே குலசேகர விநாயகர் கோயில் கொண்டிருக்கிருர், மலைமேல் உள்ள திருக்கோயில் கிழக்கு நோக்கியிருக்கிறது. மேலே செல்ல மேற்குப் பக்கத்திலும், கிழக்குப்புறத்திலும் படிகள் இருக்கின்றன. தெற்குத் தெருபக்கமிருந்து ஒரு படிக்கட்டு மேற்குப்புறப் படிகளுடன் சேர்கிறது. கிழக்கு வாயிலில் சிறுகோபுரம் இருக்கிறது. கோயிலில் இரண்டு பிரகாரங்கள் உள்ளன. வெளிப்பிரகாரத்தின் தென்மேற்கு மூலையில் சாஸ்தா சந்நிதியுள்ளது. மேற்புறப்படிக் கட்டுகளின் நடுவில் மாடன் தம்பிரான் சந்நிதியிருக்கிறது.

கோயில் வெளிப் பிரகாரத்திலிருந்து உள்ளே செல்ல இரண்டு வாயில்கள் இருக்கின்றன. ஒன்று முருகன் சந்நிதிக்கு நேரில்

மற்றொன்று சிவபெருமான் சந்நிதிக்கு எதிரிலும் இருக்கின்றன. முருகன் சந்நிதியின் திருவாயில் இருமருங்கும் வீரகந்தர்வர், வீரபாகு இவர்கள் கம்பீரமாகக் காட்சியளிக்கின்றனர். அவர்களின் பெரிய திருவுருவச் சிலைகள் மிகவும் அழகமைந்தவை. வாயிலின் தென்புறம் கணபதி எழுந்தருளியிருக்கிறார். மேற்கு உட்பிரகாரத்தில் இளையநயினர் (உற்சவர்), காசிலிங்கம், காசிவிசுவநாதர், மணவிட குமாரர் (உற்சவர்) இவர்களுடைய சந்நிதிகள் இருக்கின்றன. வடமேற்குப்புறத்தில் சண்டேசுவரர் சந்நிதி. முருகன் சந்நிதிக்கு வடக்கே மகாதேவர், சிவகாமியம்மை, ஆறுமுக நயினர் சந்நிதிகள் உள்ளன.

முருகனுக்கு வேளிமலைக்குமாரர் என்று பெயர் வழங்கி வருவதோடு வேலாயுதப் பெருமான் என்ற திருநாமமும் உண்டு. குமாரர் வள்ளியம்மையோடு எழுந்தருளியுள்ளார். முருகன் 8 அடி உயரம். இடது புறமுள்ள வள்ளியம்மை 6½ அடி உயரம். உயர்ந்த அழகிய அந்த இரண்டு திருவுருவங்களுக்கு அபிஷேகம் நடப்பது கண்கொள்ளாத காட்சியாக இருக்கும். வெள்ளிக்கவசம் அணிந்து அலங்கரிக்கப் பார்க்கக் கண்பெற்ற பயனைப் பெறலாம்.

உட்பிராகாரத்தில் ஆறுமுக நயினருக்கண்மையில் வெட்டப்பெற்ற அடிப்பாக மாத்திரமுள்ள பழைய வேங்கை மரம் இருக்கின்றது. அதன்மேல் ஒரு தண்டு சாத்தப்பெற்றது. இது முருகன் கிழக்கோலத்தில் வந்தபோது பயன்படுத்திய ஊன்றுகோல் என்று கூறப்படுகிறது.

இக்கோயிலில் நாள்தோறும் மூன்றுகால பூசை நடைபெறுகிறது. காலையில் 5 மணிக்கும், பகல் 11 மணிக்கும் இரண்டு அபிஷேகங்கள்தான். மாதக் கார்த்திகை, சஷ்டி, வெள்ளி, செவ்வாய்க்கிழமைகளிலும், விசாகத்திலும் இங்கு சிறப்பு பூசை நடைபெறுகிறது. காவடியெடுப்போர் நெய், பால், தயிர், தேன், இளநீர் இவைகளை அபிஷேகத்திற்காக மக்கள் கொண்டுவந்து கொடுக்கின்றனர். மலைவகுப்பினர் (காணிக்காரர்) தேன் கொண்டு வருகின்றனர். பைத்தியம், நோய் முதலியவைகளுக்குப் பிரார்த்தனை செய்து கொண்டு, இங்கு வந்து அவை நீங்கப் பெறுகின்றனர். உப்பு முதலியவைகளைக் கொண்டு வந்தும் பிரார்த்தனை செலுத்துகின்றனர். காவடிகள் வரும்போது பண்டாரங்கள் பாட, மேளதாளங்கள் கொட்ட, சூழ்ந்திருப்போர், 'வேல், வேல்' என்று முழக்கம் செய்யர்



வேளிமலைக் குமாரகோயில்

கர்வடிபெடுப்போர் ஆடிக்கொண்டு சென்று வெகு பக்திசிரத்தையுடன் வழிபடுகின்றனர்.

நவராத்திரி விழாவின்போது சுசீந்திரத்திலிருந்து பத்திரகாளி (முன்னுதித்த நங்கை) யும், பத்மநாபபுரத்திலிருந்து சரசுவதிதேவி யும் திருவனந்தரத்துக்கு எழுந்தருளுவர். அப்போது அவர்களுக்குத் துணையாக வேளிமலையிலிருந்து மணவிடகுமாரரும் எழுந்தருளிப் போவார். நவராத்திரி ஆரம்பிப்பதற்கு மூன்று நாட்கள் முன்னதாகவே புறப்பட்டு, குழித்துறையில் ஒருநாள், நெய்யாற்றங்கரையில் ஒருநாள் தங்கி, மூன்றும்நாள் திருவனந்தபுரம் கொட்டாரத்தை யடைவர். வழி முழுவதும் சிறந்த வரவேற்பு நடைபெறும், நவராத்திரி முடிந்த பத்தாம் நாள் பரிவேட்டையன்று, அர்ச்சகர் அம்புசாத்திய பின்னர் திருவாங்கூர் மன்னர் மணவிடகுமாரரிடம் வில், அம்பு பெற்று வேட்டையை ஆரம்பிப்பார். இதை அம்புசாத்து என்று கூறுவர்.

மார்கழி மாதத்தில் மணவிடகுமாரர் சுசீந்திரத்திற்கு மூன்றும் நாள் உற்சவத்திற்கு எழுந்தருளுவர். மருங்கூர் சுப்பிரமணியர், கோட்டாறு வலம்புரி விநாயகர் இவர்கள் எல்லாரும் சந்திப்பார்கள். ஒன்பதாம் திருநாள் வரையில் சுசீந்திரத்தில் தங்கியிருந்து, நாள்தோறும் வீதிவலம் வந்து, பின்னர் மணவிடகுமாரர் வேளிமலைக்குத் திரும்புவர். பிரியாவிடை பெற்றுத் திரும்புகையில் அவருக்குத் தாணுமாலய சுவாமி பணமுடிப்பும் கொடுத்தனுப்புவர்.

பங்குனி மாதத்தில் அனுஷ நட்சத்திரத்தில் பக்கத்து மலைமேல் ஒருகல் தொலைவிலுள்ள மண்டபத்திலிருந்து வள்ளியம்மையை எழுந்தருளுவித்து கோயிலில் திருக்கல்யாணம் நடைபெறும். வள்ளியம்மையை முன்னுலேயே மலைமேல் கொண்டுபோய் விடுவர். முருகன் அங்கு எழுந்தருளி அழைத்து வருவர். அப்போது குறவர் சாதியினர் தடுப்பது போன்றும், கோயிலுக்கருகில் வந்ததும் அவர்கள் கீழே விழுந்துவிடவும், அர்ச்சகர் அவர்கள்மேல் தீர்த்தம் தெளிக்க எழுந்திருப்பார்கள். இதைக் குறவர் படுகளம் என்பர். திருக்கல்யாணத்துக்கு முதல் நாள் முளையிடு, இரண்டாம் நாள் திருக்கல்யாணம், பின்னுல் 5 நாட்கள் ஆக ஏழு நாட்கள் இந்த திருவிழா நடைபெறும். இதுவே கோயிலில் சிறந்த திருவிழா. இசையரங்குகள், சமயச் சொற்பொழிவுகள் முதலியனவும் நடைபெறும்.

வைகாசி விசாகத்துடன் முடியும் பத்து நாள் பிரமோற்சமும் உண்டு.

இக்கோயில் ஆயிரம் ஆண்டுகட்கு முன் கட்டப்பெற்றதென்பர். படைவீடுகள் ஆறனுள் ஒன்றான திருவேரகம் இப்பதியேயென்பர் சில ஆராய்ச்சியாளர். ஏர் + அகம் = ஏரகம். ஏர் அல்லது கலப்பை அல்லது நாஞ்சில் எனப் பொருள்கொண்டு நாஞ்சில் நாட்டிலுள்ளதால் அப்பெயர் பெற்றதென்பர். திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் திருவேரகத்தைப்பற்றிக் கூறுகையில் "புலராக்காழகம் புலர உடீஇ" என்று குறித்திருப்பது இத்தலத்தில் வழிபாடு செய்யும் அந்தணர் நீராடும்போது கட்டியிருந்த ஆடை உடம்பிலே கிடந்து உலர உடுத்திருப்பர் என்பதை உணர்த்தும். இவ்வழக்கம் இக்கோயிலில் இன்றும் காணப்படுகிறது. திருமுருகாற்றுப்படைக்கு உரைவரைந்த உச்சிமேல் புலவர் கொள் நச்சினர்க்கினியர், "ஏரகம்" என்பது மலைநாட்டகத்தொரு திருப்பதி" என்று கூறியிருப்பது இத்தலமேயென்பர். சிலப்பதிகாரத்தில் "சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும் ஏரகமும் நீங்கா இறைவன்" என்று கூறப்பட்டிருப்பதற்கு அரும்பத உரையாசிரியர் வெண்குன்றத்தைச் சுவாமி மலை என்று குறித்திருப்பதால் ஏரகம் என்பது சுவாமிமலையாக இருக்க முடியாதென்பர். அருணகிரிநாதர், கும்பகோணத்தை யடுத்து காவிரியாற்றுக்கு வடபால் செய்குன்றின் மேல் அமைந்துள்ள முருகன் கோயிலையே திருவேரகம் என்று பல பாடல்களில் கூறியிருக்கிறர், மேலும், வள்ளியம்மையார் திருமணம் நடைபெற்றது இப்பதியைச் சார்ந்த வேளிமலையே என்பதற்குச் சான்றுகள் மலைமேலுள்ள வட்டச்சோலை, கிழவன்சோலை, வள்ளிச்சோலை என்றிருப்பதும், திருப்பரங்குன்றத்தில் தெய்வயானை மாத்திரம் முருகனுடன் இருப்பது போன்று இத்தலத்தில் முருகனுடன் வள்ளியம்மை மாத்திரம் எழுந்தருளி யிருப்பதும் ஆகும். இம்மலைமேல் வேங்கை மரங்கள் அதிகமா யிருப்பது வேலன் வேங்கை மரமான புராண வரலாற்றுக்கு ஆதரவு தருகிறதென்றும் சொல்கின்றனர். மேற்கண்ட காரணங்களைக்கொண்டு ஆராய்ச்சியாளர் ஒரு சாரார் திருவேரகம் என்பது கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள வேளிமலை குமரகோயில்தான் என்று கூறுகின்றனர்.

# மலைநாட்டுத்திருப்பதியநுபவம்

[மகாவித்துவான் திரு. P. B. அண்ணங்கராசார்ய சுவாமிகள், காஞ்சிபுரம்]

திருவாறன் விளைப்பதிகத்தில் இரண்டு பாட்டுக்கள் முன்னிதழில் அனுபவித்தோம்; அதற்குமேல் அனுபவிப்போமிப்போது.

### 3. கூடுங்கொல் வைகலும் கோவிந்தனை மதுசூதனைக் கோளரியை ஆடும்பறவைமிசைக் கண்டு.

திருவாறன் விளைப்பதியிலுறையும் எம்பெருமானிடத்தில் ஆழ்வார் தாம் அநுபவித்த திருக்குணங்களை மூன்று திருநாமங்களையிட்டு வெளியிடுகின்றார். **கோவிந்தனை** பசுக்கூட்டங்களைப் பெற்று மகிழ்பவனை என்பது இதன்பொருள்: "ஸர்வஸ்ய ஜகத: பாலௌ வத்ஸபாலௌ பபூவது:" என்று ஓர் முனிவர் வியந்து கூறுகின்றார். 'மூவுலகும் காவலோன்' என்று ஸகலலோகங்களையும் காக்குமியல்வினனை கண்ணபிரானும் பலராமனும் கன்றுகளையும் பசுக்களையும் காப்பவர்களாயினர் என்பது பொருள். இதனால் எம்பெருமானுடைய எளிமைக் குணம் அநுபவிக்கப்பட்டதாகும். பராத்பரனுயிருக்குமவன் இப்படி தாழ நிற்பதன்றோ எளிமைக் குணமென்பது. இதனையே வடநூலார் ஸௌலப்யமென்பர்கள். ஆக 'கோவிந்தனை' என்பதனால் ஸௌலப்யகுணம் அனுபவிக்கப்பட்டதாயிற்று.

**மதுசூதனை** மதுவென்னு மசுரனைமுடித்த பெருமானை என்றபடி. மதுவைச் சொன்னது கைடபனையும் கூறியவாறு. மதுகைடபர்களை முடித்தமிடுக்குடைமை கூறியதனால் எளிமைக் குணத்திற்கு எதிர்த்தட்டான குணம் அனுபவிக்கப்பட்டதாகும். மதுகைடபர்களிருவரும் வரங்கேட்டுப் பெற்றிருந்தது எங்ஙனேயென்னில், 'பெருமாளே! உனது திருமேனியிலேயே எங்களுக்குவதம் நேர்படவேணும்; ஒருவரும் சாகாதவிடத்திலே நாங்கள் சாகவேணும்' என்று. அப்படியே பெருமான் இவர்களைத் தனது துடையிடுக்கில் [...]வுக்கி முடித்தனன். இத்தகைய விலக்ஷணமான வீரம் இங்கு அனுபவிக்கப்பட்டதாயிற்று.

**கோளரியை** தனித்தனி தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளாலும் ஆயுதங்களாலும் பகலிலும் இரவிலும் பூமியிலும் வானத்திலும் வீட்டின் அகத்திலும் புறத்திலும் தனக்கு மரணமுண்டாகாதபடி வரம் பெற்றவனும் ஹிரண்யாக்ஷனது உடன்பிறந்தவனுமான இரணியன் தேவர் முதலிய எல்லோர்க்கும் கொடுமையியற்றித் தன்னையே கடவுளாக அனைவரும் வணங்கும்படி செய்து வருகையில் அவனது மகனான பிரகலாதாழ்வான் இளமை தொடங்கி மகாவிஷ்ணு பக்தனாய்த் தந்தையின் கட்டளைப்படியே அவன் பெயர் சொல்லிக் கல்வி கற்காமல் நாராயண நாமம் சொல்லி வரவே கடுங்கோபங்கொண்ட இரணியன் பிரகலாதனைத் தன் வழிப்படுத்துதற்குப் பலவாறு முயன்றபின், அங்ஙனம் வழிப்படாத அவனைக் கொல்லுதற்கு என்ன வுபாயஞ் செய்தும் அவன் பகவானருளால் இறந்திலனாக, ஒருநாள் சாயங்காலத்தில் தந்தை மைந்தனை நோக்கி 'நீ சொல்லும் நாராயணனென்பான் எங்குளன்? காட்டு' என்ன; அப்பிள்ளை 'தூணிலுமுளன் துரும்பிலுமுளன், எங்குமுளன்' என்று சொல்ல, உடனே இரணியன் 'இங்கு உளனோ அவன்?' என்று சொல்லி எதிரிலிருந்தவொரு தூணைப் புடைக்க, அதிலிருந்து திருமால் மனித ரூபமும் சிங்கவடிவமுங்கலந்த நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி இரணியனைப் பிடித்து வாசற்படியில் தனது மடியின்மீது வைத்துக் கொண்டு தனது திருக்கை நகங்களால் அவனது மார்பைப் பிளந்து அழித்திட்டுப் பிரகலாதனுக்கு அருள் செய்தன னென்பது கோளரியின் வரலாறு. இதனால் பகவானுடைய பெருமிடுக்குமட்டுமேயல்லாமல் அவன் ஸர்வவ்யாபி யென்னுமிடமும் மூதலிக்கப்படுவதனால் இதில் முக்கியமாக அத்திருக்குணம் அநுபவிக்கப்பட்டதாகும்.

ஆக இத்தகைய திருக்குணங்கள் விளங்க நின்ற பெருமான் திருவாறன் விளைப்பதியிலே யுள்ளான். அவனை "ஆடும்பறவை மிசைக் கண்டு கைதொழுது" என்றவிடத்து விசேஷார்த்தத்தை நம்பிள்ளையருளிச் செய்யுமழகு காண்மின்;—"திருவாறன் விளையை உத்தேச்யமாகக்கொண்டு எம்பெருமானை அங்கே காணவேணுமென்று நாம் அவ்விடம் தேடிச் சென்றால் அவன் திருநகரியை (ஆழ்வார் திருநகரியை) உத்தேச்யமாகக் கொண்டு இங்கே நம்மைக் காண வேணுமென்று ஆடும்பறவை மிசை ஏறி வருவனே; அன்னவனை வழி நடுவிலே கண்டு"—என்று. எம்பெருமானைக் காண்பதில் நமக்கு எவ்வளவு குதூஹலமோ அதற்கு மேற்பட்ட குதூகலம் அவனுக்கு நம்மைக் காண்பதில் என்பது தத்துவம். அப்படி வழியிடையிலே அவனைக் கண்டுவிட்டாலும் நாம் க்ருதக்ருத்யராகவெண்ணி மீள்வதில்லை. நமக்குத் திருப்பதியே முக்கியமான உத்தேச்யமாதலால் அங்குச் சென்று தொழ வாய்க்க வேணுமென்று பாரிக்கின்றார் ஆழ்வார். அத்தலத்தின் சிறப்பை வருணிப்பன பின்னடிகள்.

**4. வாய்க்குங்கொல் நிச்சலு மெப்பொழுதும் மனத்து ஈங்கு நினைக்கப் பெற.**

திருவாறன் விளையிலே சென்று அநுபவிக்க ப்ராப்தியில்லையாகிலுமாகுக; அங்கு நின்றருளின எம்பெருமானது திருவடிகளை இங்கே யிருந்தாகிலும் நிரந்தரமாகச் சிந்தனை செய்யும் பாக்கியம் வாய்க்குமோவென்கிறாரிப்பாட்டில். **[நிச்சலு மெப்பொழுதும்.]** நிச்சலும் என்றோ எப்பொழுதும் என்றோ இரண்டத்தொன்று சொன்னால் போதும்; ஒரு பொருளனவான இரு சொற்களையுஞ் சேர்த்துச் சொல்லுவதில் பயனில்லையே யென்று சிலர் நினைக்கக் கூடும். இங்கு நம்பிள்ளை யருளிச் செய்யும் சுவைப்பொருள் காண்மின்;

"நித்யாக்நிஹோத்ரம் போலே ஒரு கால விசேஷத்தி லேயாய்ப் போகவொண்ணாது; எல்லாவவஸ்தைகளிலு முண்டாக வேணும்" என்று.

இதன் கருத்தை விவரிப்போம்; ஒருவர் "யாவஜ்ஜீவம் அக்நிஹோத்ரம் ஜுஹோயாத்" என்ற நூற்கட்டளையைப் பின்பற்றி நித்யம் அக்னிஹோத்ரம்பண்ணுகிறாரென்று வைத்துக் கொள்வோம். இரவும் பகலும் அதுவே தொழிலாயிருக்கின்றாரென்பதில்லையே; ஒரு நாளைக்கு ஒரு சிறுபோது அக்னிஹோத்திரம் பண்ணினாலும் நித்யாக்நிஹோத்ரி யென்று பெயர் வந்துவிடுமன்றோ. அப்படியாகாமே இடைவீடின்றி நினைக்கப் பெற வேணுமென்கிறது.

"எப்பொழுதும் ஈங்கு மனத்து நினைக்கப் பெற வாய்க்குங்கொல்!" என்றதனால், உத்தேச்யத்தை அனுபவிப்பதிற் காட்டிலும், அனுபவிக்கவேணும் அனுபவிக்கவேணும் என்கிற மனோரதமே மிக நன்று என்பது அனுபவரஸிகர்களின் கொள்கை. இதனை இங்கு நம்பிள்ளை வெகு அழகாக விவரித்தருளுகிறார். "தர்க்கதாவபி ஜாதாயாம் த்வத்கதோமே மநோரத: யதிநாசம் நவிந்தேத தாவதாஸ்மி க்ருதீ ஸதா" என்று ஜிதந்தா ஸ்தோத்திரத்திலுள்ள சுலோகம் இங்கு இன்சுவைமிக வியாக்கியானிக்கப் பெற்றுள்ளது.

நாட்டார் மநோரதமென்றும் அநுபவமென்றும் இரண்டாகவிறே சொல்லிப் போருவது; எனக்கு இவ்வெல்லாம் வேண்டா: இம் மநோரத மாத்திரத்தாலே க்ருதக்ருத்யன் நான். சரீர ஸம்பந்தமற்றுப் பரமபதத்திலே போய் ஏற்றமாக அனுபவிக்குமதிற் காட்டில் நான்பேறாகநினைத்திருப்பதுமனோரதத்தையே என்பது நம்பிள்ளையீட்டு ஸ்ரீஸூக்தி. இங்கு இளையாற்றுகுடி நம்பியென்பாரொரு பரம பக்தருடைய இதிகாசமொன்றும் காட்டப்பட்டுள்ளது. (அதாவது) இளையாற்றுக்குடியென்பது திருவரங்கப் பெரிய கோயிலுக்குச் சிறிது தூரத்திலுள்ளதொரு அக்ரஹாரம். அங்கு வாழ்ந்தவொருஸ்வாமியை இளையாற்றுக்குடி நம்பியென்பர். அவர் ஸ்ரீரங்கநாதருடைய திருநாள்தோறும் கோயிலுக்கு வந்திருந்து பெருமாளை ஸேவித்துப் போவராம். போனால் மீண்டும் திருநாள் வருமளவும் அதனையே போதுபோக்காக ஸ்மரித்துக்கொண்டிருப்பாராம். அவர்க்குக் கிட்டத்திட்ட நூறு வயது நிரம்பியதனால் வலிவுகுன்றித் திருநாளுக்கு வந்து சேரமுடியாதவராயினர் அவர். திருவிழா கண்டருளா நின்ற திருவரங்கேசர் இந்தப் பரமபக்தருடைய வரவையே ஆதரவுடன் எதிர்பார்த்திருப்பவராதலால் இவரைத் தேடிப் பார்த்தும் காணாமையாலே "நம் இளையாற்றுக் குடியான் வந்திலன்; நம் கண்ணாலமல்லவோ!" என்றாராம் பெருமாள்.

(தொடரும்)

# செய்திகள்

**சென்னை :** கந்தசுவாமி கோயிலில் திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி சொற்பொழிவு 15-12-60 முதல் 13-1-61 வரை பிரதிதினமும் காலை 7 மணிமுதல் 8½ மணி வரையிலும் நடைபெறும்.

**செட்டிகுளம் :** ஏகாம்பரேசுவரர் கோயிலில் பிரதி அமாவாசைதோறும் நடைபெற்றுவரும் அருள்நெறி திருக்கூட்டத்தின் 4-ஆவது ஆண்டுவிழா 18-12-60-ல் திரு வி. அரங்கராஜன். பி.ஏ., பி.டி. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சமயச் சொற்பொழிவுகளும் நடைபெற்றன.

சிவகெங்கை தேவஸ்தானத்தைச் சேர்ந்த கீழ்க்கண்ட கோயில்களில் மாநாடுகள் நடைபெற்றன. **திருவேகம்பத்து** ஏகாம்பரநாதசுவாமி கோயிலில் 16-12-60ல் திருப்பாவை—திருவெம்பாவை மாநாடு நடைபெற்றது. சமயச் சொற்பொழிவுகளும் நடைபெற்றன. **சோழபுரம்** அருள்மொழிநாத சுவாமி கோயிலில் 17-12-60ல் மாநாடு நடைபெற்றது. 18-12-60ல் **பட்டமங்கலம்** அழகியசௌந்தரி அம்மன், மதியாதகண்டவிநாயகர் கோயிலிலும், 19-12-60ல் **காளையார்கோயில்** சொர்ணகாளீசுவரர் கோயிலிலும், 20-12-60-ல் **மதுரை**—இம்மையிலும் நன்மை தருவார் கோயிலிலும், 21-12-60-ல் **சிவகெங்கை**—விசுவநாதசுவாமி கோயிலிலும், **முறையூர்**—மீனாட்சி சொக்கநாதசுவாமி கோயிலிலும், 22-12-60ல் **கல்லல்**—பகச்சால விநாயகர், சோமசுந்தரேசுவரர் கோயிலிலும், 23-12-60-ல் **திருப்புவனம்**—பூவணநாதசுவாமி கோயிலிலும், 24-12-60-ல் **பாகனேரி**—நீலகண்டேசுவரசுவாமி கோயிலிலும், 25-12-60-ல் **கோவிலூர்**—கொற்றவாளீசுவரசுவாமி கோயிலிலும், 26-12-60-ல் **காளுடுகாத்தான்**—சிவலோகநாதசுவாமி கோயிலிலும், 28-12-60-ல் **திருக்கோட்டியூர்**—சௌமியநாராயணப்பெருமாள் கோயிலிலும், 30-12-60-ல் **கண்டதேவி**—சொர்ணமூர்த்தீசுவரசுவாமி கோயிலிலும். 31-12-60-ல் **நாட்டரசன்கோட்டை**-கண்ணுடையநாயகி அம்மன் கோயிலிலும், மாநாடுகள் நடைபெற்றன. எல்லா இடங்களிலும் சமயச்சொற்பொழிவுகளும் நடைபெற்றன.

**இளையான்குடி :** இராசேந்திரசோழீசுவரர் கோயிலில் 3-1-61லும், சிங்கம்புணரி—சேவுகப்பெருமாள் அய்யனார் கோயிலில் 4-1-61லும், சாக்கோட்டை—வீரசேகரசுவாமி கோயிலில் 6-1-61லும், மானம்துரை—சோமநாதசுவாமி கோயிலில் 7-1-61லும், நெற்குப்பை—மனமொத்தகண்டீசுவரர் கோயிலில் 8-1-61லும், திருப்பாவை-திருவெம்பாவை மாநாடுகள் நடைபெறும்.

**தேரழுந்தூர் :** ஆமருவிப்பெருமாள் வகையரு கோயில்களில் திருப்பாவை-திருவெம்பாவை மாநாடு 18, 21, 22-12-60 இம்மூன்று நாட்களிலும் நடைபெற்றன.

**ஸ்ரீரங்கம் :** அரங்கநாதசுவாமி கோயிலில் அத்தியயன விழா 17-12-60 முதல் 7-1-61 வரை நடைபெறும்.

**ஆழ்வார்திருநகரி :** ஆதிநாதர் ஆழ்வார் கோயிலில் அத்தியயன விழா 19-12-60 முதல் 7-1-61 வரை நடைபெறும்.

**சென்னை :** முல்லாசாயபு வீதி, ஸ்ரீரங்தநாதர் கோயிலில் பிரதிதினமும் காலையில் 6 மணிமுதல் 8 மணிவரையிலும், தம்புசெட்டித்தெரு, காளிகாம்பாள் ஆலயத்தில் பிரதிதினமும் இரவு 7. மணிமுதல் 9 மணிவரையிலும் திருப்பாவை–திருவெம்பாவை சொற்பொழிவு திரு. ச. கண்ணன் அடிகள் அவர்களால் நடைபெற்றுவருகின்றது.

## இறைபணியாளர்கள் மாற்றம்

**திரு. வி. சுந்தரராஜப்பிள்ளை** B.A., B.L., (இ. ப. இராமேசுவரம் கோயில், பதவிகாலம் 17-12-60ல் முடிவடைகிறது.

**திரு. A. கோபாலசாமி,** B.A., இ.ப. மதுரைக்கோயில், ஷைகோயிலுக்கும் இ. ப. ஆக. நியமிக்கப்பட்டிருக்கிறார்.

**திரு. M. S. பாண்டியன்,** இ. ப. பெரம்பூர் சுப்பிரமணியசுவாமி கோயில், ஐயலூர்-வாலீசுவரசுவாமி கோயிலுக்கு இ. ப. ஆக. மாற்றப்பட்டிருக்கிறார்.

**திரு. P. R. கோவிந்தராஜுலு** இ. ப. வழுவூர் — வீரட்டீசுவரசுவாமி கோயில் ஷை கோயிலுக்கும் இ. ப. ஆக. நியமிக்கப்பட்டிருக்கிறார்,

# அறநிலையச் சட்டம்

# MADRAS ACT.

"The translation has not been authorised or accepted as authentic by the Government." Translation by Sri. A. S. GNANASAMBANDAM, Translation Dept.

(முன் தொடர்ச்சி)

ஆனால், இந்த உட்பகுதியின்படி நடவடிக்கை எடுத்துக்கொள்ளும்போது, எந்த நிலங்கள் விஷயமாய் ஷை வருமான ஒப்படை செய்யப்பட்டிருக்கிறதோ அந்த நிலங்களுக்கு ஷை தேவதாசியே சொந்தக்காரியாயிருந்தால் (i) உட்பகுதியில் கண்ட பிரகாரம் அந்த நிலங்களை ஊழிய நிபந்தனையினின்றும் நிவர்த்தி செய்து, க்விட்-ரென்ட் என்னும் வரியை விதிக்கவேண்டும்.

(iii) ஷை கைங்கரியத்துக்கான பிரதி பலன் சிறிது மட்டும் நிலங்களாவும் சிறிது மட்டும் நிலவருமான ஒப்படையாகவும் இருந்தால், (i) உட்பகுதியில் கண்ட பிரகாரம் நிலங்களையும், (ii) உட்பகுதியில் கண்ட பிரகாரம் நிலவருமான ஒப்படையையும் ஊழிய நிபந்தனையினின்றும் நிவர்த்தி செய்ய வேண்டும்.

விளக்கம்: இப் பகுதியின் காரியங்களுக்காக, 'நிலம் கொடுத்தல்' என்பதில், (ii) உட்பகுதியில் கண்ட விலக்கு நிபந்தனையில் குறிப்பிடப்பட்டிருக்கிற காலத்திலே ஷை தேவதாசியே ஷை நிலங்களின் சொந்தக்காரியாயிராத சகல விஷயங்களிலும் நிலவருமான ஒப்படை அடங்கியிருப்பதாகக் கருதப்படும்.

(b), (a) பகுதியின்படி ஊழிய நிபந்தனையினின்றும் நிவர்த்தி செய்யும் வேலையை, இதுவிஷயமாய் அரசாங்கத்தார் செய்யக்கூடிய விதிகளையனுசரித்து நிறைவேற்ற வேண்டும்; மேலும் அது, அவர்கள் நிச்சயிக்கக்கூடிய தேதியினின்றும் அத்தேதியிலிருந்தும் செலாவணியாகத் தொடங்கும்.

(2) ஷை கைங்கரியத்துக்கான பிரதி பலனானது முழுவதுமோ சிறிது மட்டுமோ (1) உட்பிரிவின்கீழ் வராத நிலங்களாக அல்லது, நிலத்தின் மாசூலாக இருந்தால், பிரஸ்தாப நிலத்தின்பேரில் அல்லது மாசூலின்பேரில் செலுத்தப்படத்தக்க குத்தகைத் தொகையை நிச்சயிக்கும்படி அரசாங்கத்தார் பிரஸ்தாப மாவட்டக் கலெக்டருக்குக் கட்டளையிடவேண்டும். அதன்பேரில் ஷை மாவட்டக் கலெக்டரானவர், சம்பந்தப்பட்ட கட்சிக்காரருக்கு நோட்டீஸ் கொடுத்து அரசாங்கத்தாரால் நிர்ணயிக்கப்படக்கூடிய விசாரணை செய்தபிறகு, ஓர் உத்தரவு மூலமாய்க் குத்தகைத் தொகையை நிச்சயிக்க வேண்டும்; அப்படி நிச்சயிக்கையில் அவர் அடியிற்கண்ட விஷயங்களைக் கிரமப்படி கவனிக்கவேண்டும்:—

(a) அதே கிராமத்திலாவது அக்கம் பக்கத்திலுள்ள கிராமங்களிலாவது அதே லட்சணமும் அனுகூலங்களும் உடைய நிலங்களுக்காக மானியதாரரால் செலுத்தப்படத்தக்க குத்தகைதொகை:

(b) ஷை நிலங்கள் விஷயமாய் அந்தத் தேவதாசி ஏதேனும் சீர்திருத்தங்கள் செய்திருந்தால் அந்தச் சீர்திருத்தங்கள்,

ஷை உத்தரவைச் சம்பந்தப்பட்ட கட்சிக்காரர்களுக்குத் தெரிவிப்பதோடு கூட, நிர்ணயிக்கப்பட்ட விதமாகப் பிரசுரிக்கவும் வேண்டும்.

(3) (2) உட்பிரிவின்படி ஷை கலெக்டரால் நிச்சயிக்கப்பட்ட குத்தகைத் தொகையை, அவ் உட்பிரிவின்படிக்கான உத்தரவு பிரசுரிக்கப்படும் தேதியிலிருந்து மூன்று மாதங்களுக்குள் ரெவினியு போர்டாரிடம் கொடுத்துக்கொள்ளப்படும் மனு மூலமாக ஆட்சேபிக்கலாம்; ஆனால், அந்த மனு

வின் முடிவுக்குட்பட்டு, (2) உட்பிரிவின்படி குத்தகைத் தொகையை நிச்சயிப்பதற்காக மாவட்டக் கலெக்டர் பிறப்பித்த உத்தரவு முடிவானதாகும்; அதுஎந்த நீதிமன்றத்திலேனும் ஆட்சேபிக்கப்படுவதற்கு உள்ளாகமாட்டாது;

எனினும், மூன்றுமாதகாலம் கழிந்து போன பிறகு கொடுத்துக்கொள்ளப்படும் ஒரு மனுவை, விசேஷ காரணங்களினால் ஏற்றுக்கொள்ள ரெவினியு போர்டாருக்கு அதிகாரம் உண்டு.

(4) (2) உட்பிரிவின்படி குத்தகைத் தொகையை நிச்சயிக்கையில் கலெக்டரானவர் ஷை உத்தரவு செலாவணியாகத் தொடங்குதற்குரிய தேதியொன்றை நிச்சயிக்க வேண்டும்; அப்படி நிச்சயிக்கப்பட்ட தேதியன்றும் அத் தேதியிலிருந்தும் ஷை நிலங்களாவது மாசூலாவது ஊழியத் திட்டத்தினின்றும் விடுவிக்கப்பட்டிருப்பதாகக் கருதப்படும்.

(5) நிலத்தை நன்கொடைகளாக அளித்ததனாலாவது அந் நிலத்திலிருந்து கிடைக்கும் வருமானம் அல்லது மாசூலை ஒப்படை செய்ததனாலாவது, யாதொரு கோயிலுக்குச் சம்பந்தப்பட்ட ஒரு கைங்கரியத்தைப் புரிவதற்கான எந்தப் பொறுப்புக்கு ஒரு தேவதாசி உட்பட்டிருக்கக்கூடுமோ அப்படிப்பட்ட எந்தப் பொறுப்பும், அந்த நிலம் அல்லது ஒப்படை அல்லது மாசூல் இதில் முன்னால் நிபந்தனை கண்டிருக்கிற பிரகாரம் சந்தர்ப்பத்துக்கேற்றபடி ஊழிய நிபந்தனையினின்றும் நிவர்த்தி செய்யப்படும்போது அல்லது விடுவிக்கப்படும்போது நிறைவேற்றப்படத்தக்கதாக மாட்டாது.

(6) சந்தர்ப்பத்துக்கேற்றபடி, மேற்படி நிலத்தையாவது நிலவருமான ஒப்படையையாவது நிலத்திலிருந்து கிடைக்கும் மாசூலையாவது அனுபவிப்பதற்கான உரிமைக்குச் சம்பந்தப்பட்ட யாதொரு வியாஜ்ஜியம் அல்லது பிரச்சினையைப் பரிசீலனை செய்வதற்கு (1), (2) அல்லது (3) உட்பிரிவின்படிப் பிறப்பிக்கப்பட்ட எந்த உத்தரவும் தடையாக இருக்கமாட்டாது.

(7) (a) (1) உட்பிரிவின்படி விதிக்கப்பட்ட க்விட்-ரென்ட் என்னும் வரி சம்பந்தப்பட்ட கோயிலுக்குச் செலுத்தப்படத்தக்கதாகும்.

(b) சந்தர்ப்பத்துக்கேற்றபடி, (1) உட்பிரிவின் பிரகாரம் ஊழிய நிபந்தனையினின்றும் நிவர்த்தி செய்யப்பட்ட நிலவருமான ஒப்படையாவது, (2), (3) உட்பிரிவுகளின்படி நிச்சயிக்கப்பட்ட குத்தகைத் தொகையாவது சம்பந்தப்பட்ட தேவதாசியின் ஜீவியகாலம் வரையில் அவளுக்கும் அவள் இறந்தபிறகு சம்பந்தப்பட்ட கோயிலுக்கும் செலுத்தப்படத்தக்கதாகும்.

(8) ஒரு கோயிலில் தேவதாசியால் செய்யப்படுதற்குரிய கைங்கரியத்திற்குத் துணையாகவுள்ள ஒரு கைங்கரியத்துக்காக யாதொரு இனும் கொடுக்கப்பட்டிருந்தால் அந்த இனும் ஒரு தேவதாசி இனுமாயிருந்தால் எப்படியோ அப்படியே அதை ஊழியத் திட்டத்தினின்றும் நிவர்த்தி செய்ய வேண்டும் அல்லது விடுவிக்கவேண்டும்; மேலும், (1) முதல் (7) வரையிலுள்ள உட்பிரிவுகளின் நிபந்தனைகள் அப்பிரகாரமே பிரயோகப்படும்.

(9) இப்பிரிவின் காரியத்துக்காக "தேவதாசி" என்பது ஒரு கோயிலுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கும் திருமணமாகாத ஒரு இந்துப்பெண் என்று அர்த்தமாகும்.

41. யாதொரு தருமம் அல்லது கைங்கரியத்தைச் செய்வதற்காகக் கொடுக்கப்பட்ட இனமை மறுபடியும் எடுத்துக்கொண்டு திரும்பக் கொடுப்பது.—(1) யாதொரு அறநிலையத்தின் ஆதாரத்திற்காகவாவது பராமரிப்புக்காகவாவது அதற்குச் சம்பந்தப்பட்ட யாதொரு தருமம் அல்லது கைங்கரியத்தைச் செய்வதற்காகவாவது வேறே யாதொரு மத சம்பந்தமான தருமத்தைச் செய்வதற்காகவாவது கொடுக்கப்பட்ட அரசாங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்ட அல்லது ஊர்ஜிதம் செய்யப்பட்ட அல்லது அங்கீகரிக்கப்பட்ட யாதொரு இனும் முழுவதையுமாவது அதன் யாதொரு பாகத்தையாவது எவ்விதமாகவேனும் பரிவர்த்தனை செய்வதும் தானமாகக் கொடுப்பதும், விற்பனை செய்வதும், அல்லது அடமானம் வைப்பதும் ஐந்து ஆண்டுக்கு மேற்பட்ட ஒரு கால அளவுக்கு எவ்விதமாகவேனும் குத்தகைக்கு விடுவதும் செல்லாது ;

ஆனால் (தானமாயிராமல்) மேற்சொன்ன தன்மை வாய்ந்த யாதொரு விவகாரம் அந்த நிலையத்துக்கு அவசியமானதென்றோ, பிரயோசனகரமானதென்றோ தெரிந்தால் அதை அரசாங்கத்தார் அனுமதிக்கலாம்.

விளக்கம்:—எஸ்டேட்டுகள் நிலத்தைப் பற்றிய 1908-ம் ஆண்டு சென்னைப்பட்டணத்து சட்டத்தில் (சென்னை 1908-ம் ஆண்டு 1-வது சட்டம்) அர்த்தம் சொல்லப்பட்டபடி ரயத்தி நிலமாயிருக்கும் யாதொரு நிலம் விஷயமாய் நிலத்துக்குடையவருக்கும் குத்தகைதாரருக்கும் உள்ள உரிமைகளும், கடமைகளும், இந்த உட்பிரிவில் கண்டதெதனுலும் பாதிக்கப்படவுமாட்டா, குறைக்கப்படவுமாட்டா.

(2) (a) கலெக்டரானவர் தாமாகவேயாவது மேற்படி நிலையத்தின் தரும ஆணையராகிலும் மேற்படி நிலையத்தில் பற்றுள்ளவராய் அந்தத் தர்மகர்த்தாவின் அல்லது ஆணையரின் சம்மதத்தைப் பெற்றிருக்கிற யாதொரு நபராகிலும் விண்ணப்பம் செய்துகொள்வதன்பேரிலாவது உத்தரவு பிறப்பித்து அதன்மூலமாய் அடியிற்கண்ட காரணங்களில் ஒன்றினுலோ, பலவற்றினுலோ அப்படிப்பட்ட யாதொரு இனும் முழுவதையுமேனும் அதன் யாதொரு பாகத்தையேனும் மீண்டும் எடுத்துக்கொள்ளலாம்; அக் காரணங்களாவன :—

(i) (1) உட்பிரிவில் கண்ட விலக்கு நிபந்தனையில் குறிப்பிடப்பட்டிருக்கிற விஷயத்தில் தவிர மற்றப்படி, அந்த இனும் அல்லது பாகத்தின் கைப்பற்றுதாரராவது, ஷை நிலையத்தின் தர்மகர்த்தாவாவது அந்த இனுமையோ, பாகத்தையோ, அதன் யாதொரு பகுதியையோ பரிவர்த்தனை செய்திருக்கிருர், தானமாகக் கொடுத்திருக்கிருர், விற்பனை செய்திருக்கிருர் அல்லது அடமானம் வைத்திருக்கிருரென்பது அல்லது அதையேனும் அதன் யாதொரு பாகத்தையேனும் ஐந்து வருஷத்திற்கு மேற்பட்ட ஒரு கால அளவுக்குக் குத்தகை விட்டிருக்கிருரென்பது; அல்லது

(ii) ஷை அறநிலையம் இப்போது இல்லையென்பது அல்லது ஷை தருமம் அல்லது கைங்கரியத்தைச் செய்வது எவ்விதத்திலோ இயலாமற்போய்விட்டிருப்பது; அல்லது

(iii) அந்த இனும் அல்லது பாகத்தின் கைப்பற்றுதாரர் எந்தத் தருமம் அல்லது கைங்கரியத்தைச் செய்வதற்காக ஷை இனும் மேற்சொன்னபடி கொடுக்கப்பட்டிருக்கிறதோ, ஊர்ஜிதம் செய்யப்பட்டிருக்கிறதோ அல்லது அங்கீகரிக்கப்பட்டிருக்கிறதோ அந்தத் தருமம் அல்லது கைங்கரியத்தையாவது சந்தர்ப்பத்துக்கேற்றபடி அந்தத் தருமம் அல்லது கைங்கரியத்தின் யாதொரு பாகத்தையாவது மாமூல் அல்லது ஆசாரத்தை அனுசரித்து செய்யத் தவறிவிட்டிருக்கிருரென்பது அல்லது செய்வதற்கு அவசியமான ஏற்பாடுகளைப் புரியத் தவறிவிட்டிருக்கிருரென்பது.

இப் பகுதியின்படி யாதொரு உத்தரவு பிறப்பிக்கையில், சந்தர்ப்பத்துக்கேற்றபடி மேற்படி இனுமில் அல்லது அந்தப் பாகம் அடங்கிய மேற்படி இனுமில் மேல்வாரம், குடிவாரம் ஆகிய இவ்விரண்டின் கிரான்ட்டும் அடங்கியிருக்கிறதா அல்லது மேல்வாரத்தின் கிரான்ட் மாத்திரம் அடங்கியிருக்கிறதா என்பதைக் கலெக்டர் நிச்சயிக்கவேண்டும்.

ஆனால், அடியிற்கண்டதற்கு மாருக சாட்சியம் இல்லாதபோது யாதொரு மைனர் இனுமானது மேல்வாரம், குடிவாரம் ஆகிய இவ்விரண்டும் அடங்கிய கிரான்ட்டாக ஷை கலெக்டர் கொள்ளவேண்டும்.

(b) (a) பகுதியின்படி ஓர் உத்தரவைப் பிறப்பிப்பதற்குமுன் கலெக்டரானவர், மேற்படி தர்மகர்த்தா ஆணையர் சம்பந்தப்பட்ட இனும்தாரர், அந்த இனுமைச் சுவாதீனத்தில் வைத்திருக்கிற நபர் இனும்தாரராயிராவிட்டால் அந்த நபர், இந்த இனும் பராதீனம் செய்யப்பெற்றவர் எவரேனுமிருந்தால் அவர் ஆகிய இவர்களுக்கு நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அன்றியும், கலெக்டரானவர் அப்படிப்பட்ட நோட்டீஸுக்குப் பிரதியொன்றைநிர்ணயிக்கப்படக்கூடிய விதமாகப் பிரசுரிக்கவேண்டும்; அப்படிப் பிரசுரிப்பானது அவ்வுத்தரவினுல் வெகுவாய் பாதிக்கப்படக்கூடிய இதர ஒவ்வொருவருக்கும் போதுமானபடி தெரிவிக்கப்பட்டிருப்பதாகக் கருதப்படும்; மேலும் கலெக்டரானவர் அந்த

நோட்டீஸ் கொடுக்கப்பெற்றிருக்கிற அல்லது கொடுக்கப்பெற்றிருப்பதாகக் கருதப்படுகிற நபர்களுக்கு ஆட்சேபணைகள் எவையேனு மிருந்தால் அவைகளைக் கேட்டு நிர்ணயிக்கப் படக்கூடிய விசாரணை நடத்தவேண்டும்.

**விளக்கம்:** பிரஸ்தாப இனமின் ஒரு பாகம் மாத்திரமே பாதிக்கப்படுகிற விஷயத்தில் அந்தப் பாகத்தின் கைப்பற்றுதாரருக்கும் இதர பாகம் அல்லது பாகங்களின் கைப்பற்றுதாரருக்கும் அல்லது கைப்பற்று தாரர்களுக்கும் அப்படிப்பட்ட ஒவ்வொரு பாகத்தையும் சுவாதீனத்தில் வைத்திருக்கிற நபர் அதன் கைப்பற்றுதாரராயிராவிட்டால் அந்த நபருக்கும் அப்படிப்பட்ட ஒவ்வொரு பாகமும் பராதீனம் செய்யப்பெற்றவர் எவரேனுமிருந்தால் அவருக்கும் இப் பகுதியின்படி நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிப்பட்ட சகல நபர்களுடைய ஆட்சேபணைகளையும் கலெக்டர் கேட்கவேண்டும்.

(c) (a) பகுதியின்படிப் பிறப்பிக்கப்பட்ட ஒவ்வொரு உத்தரவுக்கும் ஒரு பிரதியை (b) பகுதியில் சொல்லப்பட்ட நபர்களில் ஒவ்வொருவருக்கும் அனுப்பவேண்டியதுமல்லாமல் நிர்ணயிக்கப்பட்ட விதமாகப் பிரசுரிக்கவும் வேண்டும்.

(d) (i) (a) பகுதியின்படி கலெக்டர் பிறப்பித்த ஓர் உத்தரவினால் துன்பமடைந்த யாதொரு கட்சிக்காரர் நிர்ணயிக்கப்படக்கூடிய காலத்துக்குள் மாவட்டக் கலெக்டருக்கு அப்பீல் செய்துகொள்ளலாம்; அப்படி அப்பீல் செய்து கொள்ளப்படுவதன்பேரில், மாவட்டக் கலெக்டரானவர் கமிஷனருக்கும் (b) பகுதியில் சொல்லப்பட்ட நபர்களில் ஒவ்வொருவருக்கும் நோட்டீஸ் கொடுத்த பிறகும், நிர்ணயிக்கப்படக்கூடிய விசாரணை நடத்திய பிறகும், ஷை கலெக்டருடைய உத்தரவை ஊர்ஜிதம் செய்தோ, மாற்றியோ ரத்து செய்தோ உத்தரவு பிறப்பிக்கலாம்.

(ii) அப்படி அப்பீல் செய்துகொள்வதன்பேரில் மாவட்டக் கலெக்டரின் உத்தரவாவது, நிர்ணயிக்கப்பட்ட காலத்துக்குள் (1) உட்பகுதியின்படி மாவட்டக் கலெக்டருக்கு அப்பீல் எதுவும் செய்துகொள்ளப்படாவிட்டால் (a) பகுதியின்படி ஷை மாவட்டக் கலெக்டர் பிறப்பித்த உத்தரவானது முடிவானதாகும்.

ஆனால், (1) உட்பகுதியின்படி அப்பீல் ஒன்று செய்துகொள்ளப்பட்டிருந்து, அது மாவட்டக் கலெக்டரால் தீர்மானிக்கப்பட்டிருந்தாலும், மாவட்டக் கலெக்டருக்கு அப்பீல் எதுவும் செய்துகொள்ளப்படாமலிருந்து அப்பீல் செய்துகொள்வதற்கான காலம் கழிந்துபோய்விட்டிருந்தாலும், சந்தர்ப்பத்திற்கேற்றபடி மாவட்டக் கலெக்டரின் அல்லது ஷை கலெக்டரின் முடிவான உத்தரவினால் துன்பமடைந்த யாதொரு கட்சிக்காரர், ஷை இனமில் மேல்வாரம், குடிவாரம் ஆகிய இவ்விரண்டும் அடங்குகின்றனவா அல்லது மேல்வாரம், மாத்திரம் அடங்குகிறதா என்பதை நிச்சயிப்பதற்காக யாதொரு சிவில் கோர்ட்டில் ஒரு வழக்கு தாக்கல் செய்யலாம். (i) உட்பகுதியின்படி அப்பீல் ஒன்று செய்து செய்துகொள்ளப்பட்டிருந்தால் அந்த அப்பீலின்பேரில் மாவட்டக் கலெக்டர் பிறப்பித்த உத்தரவின் தேதியிலிருந்து, அல்லது அப்படிப்பட்ட அப்பீல் எதுவும் செய்துகொள்ளப்பட்டிராத ஒரு விஷயத்திலே, மாவட்டக் கலெக்டருக்கு அப்பீல் செய்துகொள்வதற்காக (i) உட்பகுதியின்படி நிர்ணயிக்கப்பட்ட கால அளவு கழிந்துபோன தேதியிலிருந்து ஆறு மாதத்திற்குள் அப்படிப்பட்ட ஒரு வழக்கைத் தொடரவேண்டும்.

(e) (d) பகுதியில் வேறுவிதமாய் நிபந்தனை கண்டிருக்கிறபடிக்கன்றி மற்றபடி, மீண்டும் எடுத்துக்கொள்வதற்காக இப்பிரிவின்படிப் பிறப்பிக்கப்பட்ட ஓர் உத்தரவு யாதொரு நீதிமன்றத்தில் ஆட்சேபிக்கப்படுவதற்கு உள்ளாகமாட்டாது.

(f) இப் பிரிவின்படி யாதொரு இனமாவது யாதொரு இனமின் பாகமாவது மீண்டும் எடுத்துக்கொள்ளப்பட்டால், சந்தர்ப்பத்திற்கேற்றபடி கலெக்டராகிலும் மாவட்டக் கலெக்டராகிலும் உத்தரவு பிறப்பித்து அதன் மூலமாய் ஷை இனம் அல்லது பாகத்தை—

(i) சம்பந்தப்பட்ட அறநிலையத்துக்கு ஒரு கட்டளையாக அல்லது

(ii) ஷை அறநிலையம் இப்போது இல்லையென்னும் காரணத்தினால் அல்லது ஷை தருமம் அல்லது கைங்கரியத்தைச் செய்வது எவ்விதமாகவோ இயலாமற்போய்விட்டிருக்கிறது என்னும் காரணத்தினால் ஷை

னும் அல்லது பாகம் திரும்ப எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கும் விஷயத்தில் ஆணையர் சிபாரிசு செய்யக்கூடிய மத சம்பந்தமான கல்வி சம்பந்தமான அல்லது தரும சம்பந்தமான நிலையத்துக்கு ஒரு கட்டளையாக மீண்டும் கொடுக்கலாம்.

(g) (f) பகுதியின்படி மறுபடியும் கொடுப்பதற்காகப் பிறப்பிக்கப்பட்ட உத்தரவானது, நிர்ணயிக்கப்பட்ட காலத்துக்குள் ஷை கலெக்டருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளப்படுவதன்பேரில், நிர்ணயிக்கப்பட்ட விதமாக அவரால் நிறைவேற்றப்பட வேண்டும்.

(h) 40-வது பிரிவின் பிரயோகத்துக்கு இப் பிரிவில் கண்டதெதனுலும் பாதகமுண்டாகமாட்டாது.

42. அறநிலையங்களின் உத்தியோகம் வகிப்பவர்களும் ஊழியக்காரர்களும் திட்டங்களின் படிக்கன்றி மற்றப்படி ஆபரணங்கள் முதலியவைகளைச் சுவாதீனத்தில் வைத்திருக்கக்கூடாதென்பது.—இச்சட்டத்தின்படி நிச்சயிக்கப்பட்ட அல்லது நிச்சயிக்கப்பட்டதாகக் கருதப்படுகிற யாதொரு ஏற்பாட்டில் என்ன சொல்லியிருந்தபோதிலும் அல்லது யாதொரு நீதிமன்றத்தாரின் ஒரு டிக்ரி அல்லது உத்தரவில் என்ன சொல்லியிருந்த போதிலும் அல்லது அடியிற்கண்டதற்கு விரோதமாக யாதொரு ஆசாரம் அல்லது மாமூல் முரண்பட்டிருந்தபோதிலும், பாதகமில்லாமலே, யாதொரு நிலையில் உத்தியோகம் வகிப்பவர் அல்லது ஊழியக்காரர் அல்லது வேறொரு நபர் எவரும், பொதுவான அல்லது பிரத்தியேகமான உத்தரவு மூலமாய் ஆணையர் கட்டளையிடக்கூடிய திட்டங்களுக்கும் பாதுகாப்புகளுக்கும் உட்பட்டன்றி மற்றப்படி, மேற்படி அறநிலையத்துக்குச் சொந்தமான ஆபரணங்களையாவது இதர விலையுயர்ந்த பொருள்களையாவது சுவாதீனத்தில் வைத்திருக்க உரிமையுள்ளவராக மாட்டார்.

43. ஆணையர் சட்ட நடவடிக்கைகளை சமாதானம் செய்துகொள்வதற்கு அனுமதி அளிப்பது:—ஒரு கோர்ட்டில் பைசலாகாமல் இருக்கிறதும் ஒரு மத அறநிலையத்தை ஒரு கட்சிக்காரர்களைக் கொண்டதுமான ஒரு வழக்கு விண்ணப்பம் அல்லது அப்பீலானது, ஆணையரின் முன்னதான அனுமதியின்றி மற்றப்படி மேற்படி நிலையத்தின் தர்மகர்த்தாவால் வாபஸ் வாங்கிக்கொள்ளப்படவோ, ஒப்பந்தம் செய்து கொள்ளப்படவோ கூடாது.

**மடங்கள் அவைகளுடன் சேர்ந்துள்ள குறிப்பிட்ட கட்டளைகள் அல்லாத இதர அறநிலையங்கள்**

**44. 45 முதல் 58 வரையிலுள்ள பிரிவுகள் மடங்களுக்காவது மடங்களைச் சேர்ந்த குறிப்பிட்ட கட்டளைகளுக்காவது பயன்படமாட்டா வென்பது:**—45 முதல் 58 வரையிலுள்ள பிரிவுகளின் ஷரத்துக்கள் மடங்களுக்காவது மடங்களைச் சேர்ந்த குறிப்பிட்ட கட்டளைகளுக்காவது பயன்படமாட்டா.

45. **நிருவாக அலுவலர்களின் நியமனமும் கடமைகளும்:**—(1) இச் சட்டத்தில் என்ன அடங்கியிருந்தபோதிலும் பாதகமில்லாமலே, ஆணையர் நிர்ணயிக்கக்கூடிய நிபந்தனைகளுக்குட்பட்டு, ஒரு மடம் அல்லது ஒரு மடத்துடன் இணைக்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட கட்டளையல்லாத யாதொரு அறநிலையத்திற்கு ஒரு நிருவாக அலுவலரை நியமிக்கலாம்.

(2) நிர்வாக அலுவலர், ஆணையர் தமக்கு வகுத்துக் கொடுக்கக்கூடிய அதிகாரங்களைச் செலுத்த வேண்டும், கடமைகளை நிறைவேற்ற வேண்டும் ;

ஆனால், (1) உட்பிரிவில் குறிப்பிட்டுள்ள அறநிலையத்தைச் சேர்ந்த சொத்துக்களின் நிர்வாகம் சம்பந்தமான அதிகாரங்களும் கடமைகளும் மாத்திரமே நிருவாக அலுவலருக்கு வகுத்துக்கொடுக்கப்படும்.

(3) ஒரு மடம் அல்லது ஒரு மடத்தைச் சேர்ந்த ஒரு குறிப்பிட்ட கட்டளையல்லாத யாதொரு அறநிலயத்தின் நிர்வாக அலுவலர், தர்மகர்த்தர் ஆகியவர்களால் முறையே செலுத்தப்பட வேண்டிய அதிகாரங்களையும், கடமைகளையும் ஆணையர் வரையறுக்கலாம்.

(4) ஆணையர் தகுந்ததும் போதுமானதுமான காரணத்தை முன்னிட்டு, நிருவாக அலுவலரை வேலையினின்று சிறிது காலம் தள்ளி வைக்கலாம், அகற்றிவிடலாம் அல்லது நீக்கிவிடலாம்.

46. **சில நிலையங்களின் பட்டியலை ஆணையர் பிரசுரிக்க வேண்டுமென்பது:**—92-வது பிரிவின்படி சகாயத் தொகை விதிக்கும் காரியங்

களுக்காகக் கணக்கிடப்பட்டபடியுள்ள எந்த அறநிலையங்களின் வருஷாந்தர வருமானம் இருபதினுயிரம் ரூபாய்க்குக் குறையாமலிருக்கிறதோ அப்படிப்பட்ட நிலையங்களின் பட்டியலொன்றை ஆணையர் நிர்ணயிக்கப்பட்ட விதமாகப் பிரசுரிக்கவேண்டும்; மேலும் அவர், அப்படிப்பட்ட பட்டியலை நிர்ணயிக்கப்பட்ட விதமாக அப்போதைக்கப்போது மாற்றலாம்;

ஆனால், மேற்சொன்னவாறு கணக்கிடப்பட்டபடியுள்ள எந்த நிலயத்தின் வருஷாந்தர வருமானம் தொடர்ச்சியாய் மூன்று வருஷகாலமாக இருபதினுயிரம் ரூபாய்க்குக் குறைந்துவிட்டிருக்கிறதோ அப்படிப்பட்ட நிலயத்தை ஆணையர் ஷை பட்டியலிலிருந்து நீக்கிவிடக் கடமைப்பட்டவராக மாட்டார்.

**47. தர்மகர்த்தாக்களும், அவர்களுடைய எண்ணிக்கையும் உத்தியோகக் கால அளவும்:—** (1). 46-வது பிரிவின்படிப் பிரசுரிக்கப்பட்ட பட்டியலில் அடங்கியிருப்பதும் எந்தப் பிராந்தியக் குழுவும் எந்த அறநிலயத்தின் மீது அதிகாரங்களைச் செலுத்தாததும் கடமைகளைச் செய்யாததுமான ஒரு மதஸ்தாபனத்துக்குப் பரம்பரையான தர்மகர்த்தா எவரும் இராவிட்டால், ஆணையர் தர்மகர்த்தர் சபை ஒன்றை அமைக்கவேண்டும்; அதில் அவர் மூன்று பேருக்குக் குறையாமலும், ஐந்து பேருக்கு மேற்படாமலும் அங்கத்தினர்களை நியமிக்கவேண்டும்.

ஆனல், ஆணையர் ஷை தர்மகர்த்தாக்களின் சபையானது அமைக்கப்படாதவிடத்து, தர்மகர்த்தாக்களின் சபையின் அலுவல்களை நிறைவேற்றத் தகுதியுள்ள ஒருவரை நியமிக்கலாம்.

(2) 46-வது பிரிவின்படியுள்ள பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளதும் ஒரு பரம்பரை தர்மகர்த்தா அல்லது தர்மகர்த்தாக்களுடையதுமான யாதொரு அறநிலயத்தின் விஷயத்தில், ஆணையர் ஷை தர்மகர்த்தர் அல்லது தர்மகர்த்தாக்களுக்கு நோட்டீஸ் கொடுத்து அவர் போதுமானது எனக் கருதுகிறபடிபடிக்கான விசாரணை செய்து, எழுதிவைக்கப்படவேண்டிய காரணங்களுக்காக மேற்படி நிலயத்தின் விவகாரங்கள் மேற்படி தர்மகர்த்தா அல்லது தர்மகர்த்தாக்களால் சரியானபடி நிர்வகிக்கப்படவில்லை, வெகுசாய் சரியாய் நிர்வகிக்கப்படாது எனக் கருதினுல் ஆணையர் உத்திரவு மூலமாக தாம் அவசியமெனக் கருதுகிறபடி அத்தகைய எண்ணிக்கையுள்ள பரம்பரையல்லாத தர்மகர்த்தாக்களை நியமிக்கலாம்.

(3) (1) உட்பிரிவின்படியாவது நியமிக்கப்பட்ட தர்மகர்த்தா ஒவ்வொருவரும் (4) உட்பிரிவின்படித் தாக்கல் செய்யப்பட்ட எவையேனும் விண்ணப்பத்தின் விளைவுக்குட்பட்டு (2) உட்பிரிவின்படி நியமிக்கப்பட்ட பரம்பரையாக ஏற்படாத தர்மகர்த்தாக்கள் எல்லோரும் மூன்று ஆண்டு காலம் உத்தியோகம் வகிக்கவேண்டும்; ஆனல், இதற்கிடையில் அந்தத் தர்மகர்த்தா நீக்கிவிடப்பட்டாலும் தள்ளிவிடப்பட்டாலும் அவருடைய ராஜினுமா ஆணையரால் ஒப்புக்கொள்ளப்பட்டாலும் அவர் மற்றப்படி தர்மகர்த்தாவாயிராமற் போய்விட்டாலும் மேலே கண்டபடி ஐந்து ஆண்டு காலம் அவர் உத்தியோகம் வகிக்கக் கூடாது.

(4) ஆணையர் உத்தரவு மூலமாக பரம்பரையாக ஏற்படாத தர்மகர்த்தா அல்லது தர்மகர்த்தாக்கள் மேற்படி உத்தரவு வரப்பெற்ற தேதியிலிருந்து முப்பது தினங்களுக்குள் மேற்படி உத்தரவை ரத்துசெய்யும்படி அல்லது மாற்றும்படிக்கான ஓர் விண்ணப்பத்தைக் கோர்ட்டில் தாக்கல் செய்யலாம்;

ஆனல் கோர்ட்டாருக்கு, ஷை விண்ணப்பம் பைசலாகாமலிருக்கும்போது, ஆணையரின் மேற்படி உத்தரவை நிறுத்திவைக்க அதிகாரம் இல்லை.

(5) (2) உட்பிரிவின்படி நியமிக்கப்பட்ட பரம்பரையாக ஏற்படாத தர்மகர்த்தா ஒருவரின் பதவியில் காலி இடம் ஏற்பட்டால், ஆணையர் எழுதி வைக்கப்படவேண்டிய காரணங்களுக்காக, அவ்வாறு செய்வது அவசியமென அவர் கருதினுலன்றி மற்றப்படி மேற்படி காலி இடத்தை நிரப்பக்கூடாது. மேற்படி காலி இடத்தில் நியமிக்கப்பட்ட பரம்பரையாக ஏற்படாத தர்மகர்த்தா (2) உட்பிரிவின்படி நியமிக்கப்பட்டதாகக் கருதப்படவேண்டும். (3), (4) உட்பிரிவுகளின் ஷரத்துக்கள் அவற்றை அனுசரித்துப் பயன்படவேண்டும்.

[illegible] (1) [illegible]-வது பிரிவைச் சேர்ந்த (1) உட்பிரிவின்படி தர்மகர்த்தர்களின் சபையொன்று அமைக்கப்பட்டுள்ள அறநிலையம் ஒன்றின் விஷயத்திலே, ஷை தர்மகர்த்தாக்கள் சபையார் நிர்ணயிக்கக் கூடிய அத்தகைய கால அளவுக்குள், தங்கள் அங்கத்தினர்களுள் ஒருவரைத் தலைவராகத் தேர்ந்தெடுக்க வேண்டும்; அவ்வாறு நிர்ணயிக்கப்பட்ட கால அளவுக்குள் தலைவர் எவரும் தேர்ந்தெடுக்கப்படாவிட்டால், ஆணையர் தலைவரை நியமனம் செய்யவேண்டும்.

(2) ஒன்றுக்கு மேற்பட்ட தர்மகர்த்தாக்களுள்ள வேறு யாதொரு அறநிலையத்தின் விஷயத்திலே, அந்த நிலையத்தின் தர்மகர்த்தா தங்களில் ஒருவரை நிர்ணயிக்கப்படக்கூடிய அத்தகைய கால அளவுக்குள் தலைவராகத் தேர்ந்தெடுக்கவேண்டும். அவ்வாறு நிர்ணயிக்கப்பட்ட கால அளவுக்குள் எவரும் தேர்ந்தெடுக்கப்படாவிட்டால் ஆணையர் தலைவரை நியமனம் செய்யவேண்டும்.

ஆனால், ஒரு அறநிலையத்தில்—

(i) பரம்பரையாக ஏற்பட்ட தர்மகர்த்தா ஒருவர் இருந்தால், அவரே தலைவராயிருக்கவேண்டும்.

(ii) பரம்பரையாக ஏற்பட்ட தர்மகர்த்தாக்கள் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் இருப்பின், அவர்களுள் ஒருவரை மாத்திரமே தலைவராகத் தேர்ந்தெடுக்கவோ, நியமிக்கவோ வேண்டும்.

(3) (1) உட்பிரிவின்படி அல்லது (2) உட்பிரிவின்படி தேர்ந்தெடுக்கப்பட்ட அல்லது நியமிக்கப்பட்ட ஒரு தலைவர் நிர்ணயிக்கப்படக்கூடிய கால அளவு வரையில் பதவி வகிக்கவேண்டும்.

*49.* **தர்மகர்த்தாக்களை நியமிக்க பிராந்தீயக் குழுக்களுக்குள்ள அதிகாரம்:**—(1) 46-வது பிரிவின்படிப் பிரசுரிக்கப்பட்ட பட்டியலில் சேர்க்கப்படாததும், இச்சட்டத்தில் VI அத்தியாயத்தின்படி அறிக்கையிடப்பட்டதும், அறிக்கையிடப்பட்டிருப்பதாகக் கருதப்பட்டதுமான அறநிலையமாயிராததுமான யாதொரு அறநிலையத்தைப் பொறுத்தவரை, 47-வது பிரிவின் (1) உட்பிரிவில் குறிப்பிட்டுள்ள ஒரு அறநிலையத்தின் விஷயத்தில் தர்மகர்த்தாக்கள் நியமிப்பதற்கு ஆணையரிடம் ஒப்படைத்துள்ள அதிகாரத்தையே பிராந்தீயக் குழு உடையதாகும்.

ஆனால், பரம்பரை தர்மகர்த்தர் எவரும் இல்லாதிருக்கும் ஒரு நிலையத்தின் விஷயத்திலே, பிராந்தீயக்குழு ஒரு தனி தர்மகர்த்தாவை நியமிக்கலாம்.

(2) 47-வது பிரிவைச் சேர்ந்த (3) உட்பிரிவிலும் 48-வது பிரிவிலும் கண்டுள்ள ஷரத்துக்கள், ஆணையரால் நியமிக்கப்பட்ட தர்மகர்த்தா அல்லது தர்மகர்த்தாக்களுக்காவது ஏற்படுத்தப்பட்ட தர்மகர்த்தாக்கள் சபைக்காவது பிரயோகப்படுவதுபோல மேற்படி பிராந்தீயக் குழுவால் நியமிக்கப்பட்ட தர்மகர்த்தா அல்லது தர்மகர்த்தாக்களுக்காவது ஏற்படுத்தப்பட்ட தர்மகர்த்தாக்கள் சபைக்காவது பயன்படும்.

*50.* **திட்டத்தில் ஏற்பாடு செய்யப்படாத போதிலும் பாதகமில்லாமலே, 47-வது, 49-வது பிரிவுகளின்படிக்கான அதிகாரம் செலுத்தத் தக்கதாருமென்பது:**—மேற்படி நிலையத்துக்காக நிச்சயிக்கப்பட்ட அல்லது நிச்சயிக்கப்பட்டிருப்பதாய் இந்த சட்டத்தின்படிக் கருதப்படுகிறஏதேனும்ஏற்பாட்டில் அடியிற் கண்டதற்கு மாறாக ஷரத்து கண்டிருந்த போதிலும் பாதகமின்றி, 47-வது அல்லது 49-வது பிரிவின்படி தர்மகர்த்தாக்களை நியமிக்கும் அதிகாரம் செலுத்தத்தக்கதாகும்.

*51.* **தர்மகர்த்தாக்களாயிருக்க சிலருக்குள்ள உரிமைகள்:**—47-வது அல்லது 49-வது பிரிவின்படி தர்மகர்த்தாக்களின் நியமனங்களைச் செய்கையில், சந்தர்ப்பத்துக்கேற்றபடி ஆணையராவது பிராந்தீயக் குழுவினராவது எந்த மதப் பிரிவைச் சேர்ந்தவர்களுடைய நன்மைக்காக மேற்படி நிலையம் முக்கியமாக உத்தேசிக்கப்பட்டு நடத்தப்பட்டு வருகிறதோ அவர்களுடைய உரிமைகளைக் கிரமப்படி கவனிக்கவேண்டும்.

*52.* **இச் சட்டம் செலாவணியாகத் தொடங்கும் தேதியன்று உத்தியோகம் வகித்து வருகிற பரம்பரையாய் ஏற்பட்டிராத தர்மகர்த்தாக்கள்:**—இச் சட்டம் செலாவணியாகத் தொடங்குகிற தேதியன்று நியாயமாய் உத்தியோகம் வகித்துக்கொண்டிருப்பவரும் பரம்பரையாய் ஏற்பட்டிராதவருமான தர்மகர்த்தா ஒவ்வொருவரும், அவ்வாறு செலா

வணியாகத் தொடங்குகிற தேதியன்று தமது உத்தியோகக் கால அளவில் எஞ்சியுள்ள பாகத்திற்காக இச் சட்டத்தின்படிக் கிரமமாய் தர்மகர்த்தாவராக நியமிக்கப்பட்டிருப்பதாகக் கருதப்படுவார்.

53. **தர்மகர்த்தாக்களைச் சிறிது காலம் நீக்கிவைக்க, எடுத்துவிட, அல்லது தள்ளிவிட அதிகாரம்:**—(1) இப் பிரிவில் "பொருத்தமான அதிகாரி" என்ற சொற்றொடர், சந்தர்ப்பம் வேறு பொருள் குறித்தாலன்றி மற்றப்படி—

(a) 46-வது பிரிவின்படி வெளியிட்டுள்ள பட்டியலில் அடங்கிய ஒரு அறநிலையத்தின் விஷயத்தில் ஆணையர், எனவும்,

(b) 46-வது பிரிவின்படி வெளியிட்டுள்ள பட்டியலில் இல்லாத யாதொரு அறநிலையத்தின் பரம்பரையாக ஏற்பட்டிராத தர்மகர்த்தர் ஒருவருடைய விஷயத்தில் பிராந்தியக் குழு எனவும், மேலும்

(c) 46-வது பிரிவின்படி வெளியிடப்பட்ட பட்டியலில் இல்லாத ஒரு அறநிலையத்தின் ஒரு பரம்பரை தர்மகர்த்தா விஷயத்தில் துணை ஆணையர் எனவும் பொருள்படும்.

(2) பொருத்தமான அதிகாரி, ஒரு அறநிலையத்தின் யாதொரு தர்மகர்த்தரை அடியிற்கண்ட காரணங்களுக்காகச் சிறிதுகாலம் நீக்கி வைக்கலாம், எடுத்துவிடலாம் அல்லது தள்ளிவிடலாம்.

(a) இந்து மதத்தைத் தழுவாமல் விட்டுவிடுவது; அல்லது

(b) இச் சட்டத்தினுடையவும் இதன்படிச் செய்யப்பட்ட பின்விதிகளினுடையவும் ஷரத்துக்களையனுசரித்து ஒரு தர்மகர்த்தாவின் கடமைகளை நிறைவேற்றவும், அலுவல்களை நடத்தவும் தவறுவது; அல்லது

(c) அரசாங்கத்தாரால், ஆணையரால் அல்லது துணை ஆணையரால் பிராந்தியக் குழுவில் அல்லது உதவி ஆணையரால் இச் சட்டத்தினுடையவும், இதன்படிச் செய்யப்பட்ட விதிகளினுடையவும் ஷரத்துக்களின் பிரகாரம் பிறப்பிக்கப்பட்ட நியாயமான உத்திரவுகளுக்குக் கீழ்ப்படியாமலிருப்பது; அல்லது

(d) மேற்படி டிரஸ்டிகளின் விஷயத்தில் எவ்விதமாகவேனும் தீங்கு செய்வது தவறிழைப்பது, நம்பிக்கைத் துரோகம் செய்வது; அல்லது

(e) மேற்படி நிலையத்தின் சொத்துக்களை எவ்விதமாகவேனும் துர்வினியோகம் செய்வது அல்லது அவைகள் விஷயமாய்த் தகாத விதமாக விவகரிப்பது; அல்லது

(f) சித்த சுவாதீனமற்றிருப்பது அல்லது தர்மகர்த்தாவின் அலுவல்களைச் செய்ய அவரைத் தகுதியற்றவராக்கும் விதமாக அவருக்கு வேறு விதமான மனக்கோளாறோ உடம்புக்கோளாறோ வியாதியோ இருப்பது அல்லது பெருவியாதியால் அல்லது அருவருக்கத்தக்க வியாதியினால் பீடிக்கப்பட்டிருப்பது; அல்லது

(g) ஒழுக்கக்கேடு சம்பந்தமான யாதொரு குற்றத்திற்காக ஒரு கிரிமினல் கோர்ட்டாரால் தண்டிக்கப்பட்டு, அப்படிப் பட்ட தண்டனை மாற்றப்படாமலோ, ஷை குற்றம் மன்னிக்கப்படாமலோ இருப்பது; அல்லது

(h) கடனிறுக்கச் சக்தியற்றவர் என்று அறிவிக்கப்படாமலிருப்பது; அல்லது

(i) யாதொரு அறநிலையத்துக்குச் சொந்தமான சொத்தின் செலாவணியிலிருக்கும் குத்தகையில், அல்லது ஷை அறநிலையத்துடன் செய்துகொண்ட ஒரு ஒப்பந்தம், ஷை அறநிலையத்துக்காகச் செய்யப்பட்ட யாதொரு வேலை, இவற்றில் பாத்தியதையுடையவராயும், அதற்குச் சேரவேண்டிய யாதொரு வகை பாக்கியைக் கொடுக்காமலிருப்பது; அல்லது

(j) மேற்படி நிலையத்தின் அக்கறைகளுக்கு எதிராகச் செயலாற்றுவது; அல்லது

(k) தர்மகர்த்தாக்களின் மூன்று தொடர்ச்சியான கூட்டங்களுக்கு வராமலிருப்பது;

விளக்கம்:—நிருவாகச் சிற்றெண் (க்வோரம்) இல்லாததனால் ஒத்திவைக்கப்பட்ட ஒரு கூட்டமானது இப் பகுதியின் காரியங்களுக்காக ஒரு கூட்டம் எனக் கருதப்படவேண்டும்.

(தொடரும்)

உ

திருச்சிற்றம்பலம்

மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த

## திருப்பள்ளியெழுச்சி

முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்
மூவரும் அறிகிலர் யாவர்மற் றறிவார்
பந்தணை விரலியும் நீயுநின் னடியார்
பழங்குடில் தொறும்எழுந் தருளிய பரனே
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலும் காட்டி
அந்தணன் ஆவதும் காட்டிவந் தாண்டாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே.

[அமுதமே! முதல் நடு முடிவும் ஆனவனே! பிரமன் மால் உருத்திரன் என்ற மூவரும் உன்னை அறியவல்லவரல்லர். வேறு எவர் உன்னை அறியமுடியும். உமையம்மையும் நீயும் அடியார் பழங் குடிசைகளான உள்ளந்தோறும் எழுந்தருளும் மேலானவனே! தீ வண்ணத்திருமேனியும், திருப்பெருந் துறைக்கோயிலும், அந்தணக்கோலமும் காட்டி ஆண்ட முதல்வனே! திருப்பள்ளியெழுக.]



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆண்டாள் அருளிச்செய்த

## திருப்பாவை

கறவைகள் பின்சென்று கானஞ்சேர்ந் துண்போம்
அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்து உன்தன்னைப்
பிறவிப் பெறுந்தனை புண்ணியம்நா முடையோம்
குறைவொன்று மில்லாத கோவிந்தா உன்தன்னோடு
உறவேல்நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்
சிறுபே ரழைத்தனவும் சீறி யருளாதே
இறைவா நீதாராய் பறையேலோ ரெம்பாவாய்.

[கறவைப்பசுக்கள் பின்சென்று காட்டில் உண்போம். சிற்றறிவுடைய ஆயர்குலத்து உன்னைப் பெறும்பேறு பெற்றோம். குறைவில்லாத கோவிந்தனே! உன்னோடு எங்களுக்குள்ள உறவு ஒழிக்க முடியாது. உலகமறியாத சிறு பெண்களாகிய நாங்கள் உன்னைச் சிறுபேரிட்டு அழைத்ததற்காக கோபிக்கவேண்டாம். தலைவனே! நீ எங்களுக்குப் பறை தருவாயாக.]

## அடியவர் திருநட்சத்திரங்கள்

சார்வரி—தை

| சைவம் | வைணவம் |
|---|---|
| 6உ—அப்பூதியடிகள் | 20உ திருமழிசை ஆழ்வார் |
| 9உ—கலிக்காம நாயனர் | |
| 14உ—கண்ணப்ப நாயனர் | |
| 15உ—அரிவாட்டாய நாயனர் | |
| 22உ—சண்டேசுர நாயனர் | |
| 26உ திருநீலகண்டநாயனர் | |

